# கல்கி

KALKI
9.8.98
ரூ. 4.50



"வாழப்பாடிக்கு பாஸ் மார்க் கூடத் தரமாட்டேன்!"



மிஸ்டர் மிடில்கிளாஸ்!



அழகான குரலில் ஆக்ரோஷப் பேச்சு!

## சிம்ரனுக்கு நேரமில்லை!



சாதாரண கிளீனிங் பவுடரால்
பாத்திரங்களில் நிறைய
கீறல்கள் விழுகின்றன.

மைக்ரோ.ஃபைன்
முறையில் தயாராகும்
சூப்பர் ஏ-ஒன்
கிளீனிங் பவுடரால்
பாத்திரங்களில் கீறல்
விழவே விழாது.

சூப்பர்
# ஏ-ஒன்
கிளீனிங் பவுடர்




சாதாரண கிளீனிங் பவுடரில் உள்ள சொரசொரப்பான துகள்கள், பாத்திரங்களில் கீறல் விழச் செய்கின்றன.

மைக்ரோ.ஃபைன் முறையில் தயாரிக்கப் படும் சூப்பர் ஏ-ஒன் கிளீனிங் பவுடர் பாத்திரங்களில் சிறு கீறல் கூட விழாமல், புதியபாத்திரம் போல் ஜொலிக்கச் செய்கிறது.

சூப்பர் ஏ-ஒன் கிளீனிங் பவுடர் சாதாரண கிளீனிங் பவுடரைவிட பல மடங்கு அதிக சக்தி வாய்ந்தது.



AradhanA / A-One


For Trade Enquiries Contact:
Mfrs. SEKAR PRODUCTS PVT. LTD.
Adm. Office : 155, Purasai High Road,
Kellys, Chennai - 600 010.
Ph.: 642 3315, 642 3325.
Fax : 6428586


# * இலவசம்!

இந்த விளம்பரத்தைக் கடையில் கொடுத்து
500கிராம் சூப்பர் ஏ-ஒன் வாங்கினால்,
இன்னொரு
500கிராம் சூப்பர் ஏ-ஒன்
பாக்கெட் இலவசம்.

* இச்சலுகை சென்னை நகரில் மட்டும்.



# கார் கண்காட்சியில் மிஸ்டர் மிடில்கிளாஸ்!

'ஆட்டோ ஃபெஸ்ட் - 98' என்கிற பெயரில் சென்னையில் நடந்த வாகனக் கண்காட்சிக்குச் சென்று வந்த மிஸ்டர். மிடில்கிளாஸின் ரிப்போர்ட்!

தீவுத்திடலில் நுழைந்த

கல்கி இன்டர்நெட் முகவரி : www.kalkiweekly.com
ஈ மெயில் : kalki@md2.vsnl.net.in

போதே மிஸ்டர் மிடில் கிளாஸுக்குப் பெரிய ஷாக். ஸ்கூட்டரை நிறுத்தியதும், ஒரு டோக்கனை நீட்டியவர் ஐந்து ரூபாய் கேட்டார்!

"ஒரு ஸ்கூட்டர்தான்" என்றதும், அவரும் "ஒரு ஸ்கூட்டருக்குத்தான்!" என்றார். அப்போதே தோன்றி விட்டது அவருக்கு, 'இந்தக் கண்காட்சியை சும்மா சுற்றிப் பார்க்கிற தகுதி கூட நமக்கு இல்லை!'

நுழைவுக் கட்டணக் கவுண்ட்டரில், ஒரு ஆளுக்குப் பதினைந்து ரூபாய் என்றபோது, அடுத்த ஷாக்!

உள்ளே போனால், ஒரு ஷாமியானா முழுக்க, கார் ஸ்டீரியோ வகையறாக்கள். காது கிழிகிற இரைச்சல். ஒரு மாருதி காரின் பின் சீட் பகுதியை அகற்றிவிட்டு, கார் ஸ்டீரியோ பொருத்தியிருந்தார்கள். காரினுள்ளே உட்கார்த்தி வைத்திருந்த இளம் பெண் தர்மசங்கடம், பிளாஸ்டிக் 'சிரிப்பு, பேய் முழி, தலைமுடியைக் கோதி விடுவது என்று ஏக பிஸி. இதற்கிடையில் பார்வையாளர்கள், நின்று அவரைப் பார்க்கவும், கேட்கவும் சில நிமிடங்களைச் செலவழித்தனர்.

ஹூண்டாய் ஸ்டாலில், ஐந்து விதமான கார்களை நிறுத்தி, அவற்றின் அங்க அளவுகளை அச்சிட்டு வைத்திருந்தனர். ஒவ்வொரு காரின் பக்கத்திலும் குட்டை ஸ்கர்ட், சட்டை, தலையில் ஹேர் பாண்டு சகிதம் மாடல் அழகிகள். காரையும், மாடலையும் சுற்றிக் கூட்டம்.

காரின் உள்ளே அமர அனுமதி உண்டு என்பதால், பர்ஸ் பழுத்த இளைஞர்கள் ஸ்டைலாக காரில் அமர்ந்து ஸ்டீயரிங், கியர் எல்லாவற்றையும் அசைத்து பெருமிதப்பட்டனர்.

லக்னோ நகரில் பிரபலமாய்ப் புழங்கும் 'பட்பட்டீ' (பட்பட் என்று சப்தம் போட்டு ஓடுவதால் காரணப் பெயர்) அதாவது நம் ஊர் ஆட்டோவின் பெரிய அண்ணன் நின்று கொண்டிருந்தார்.

டிரைவர் பிளஸ் எட்டுப் பேர் பயணிக்கலாம்! விரைவில் சென்னையிலும் வரப் போகிறதாம். ஆட்டோ டிரைவர்கள் பாடு ஜாலிதான்! மீட்டருக்கு 'மேல்' போட்டுத்தர ஒன்றுக்கு எட்டு அப்பாவிகள் ஒவ்வொரு சவாரியிலும்!

இன்னொரு ஸ்டாலில் அடிதடிக் கூட்டம். என்னவென்று பார்த்தால், தங்கள் கார் பற்றிய விவர லீஃப்லெட் போட்டு அழகான பிளாஸ்டிக் பை கொடுத்துக் கொண்டிருந்தார்கள். ஆயிரம் பைகள் நிமிஷமாய் மறைந்தன. 'சே! ஒண்ணு வாங்கி வரத் துப்பில்லை!' என்று திட்டப் போகிறாளே மனைவி என்ற மிஸ்டர் மிடில் கிளாஸின் கணிப்பு பொய்க்கவில்லை.

இன்னொரு இடத்தில் 'பைக்குக்கு எத்தனை சக்கரம்' என்பது போன்ற திறமையை சோதிக்கும் போட்டிக்கான நுழைவுத்தாள் விநியோகம்! ஆளுக்கு ரெண்டு வீதம் நிரப்பிப் போட்டுக் கொண்டிருந்தனர். பரிசு...? குலுக்கலில்தான்! வண்டியின் குலுக்கல் ஞாபகம் வந்தால் அதற்கு அவங்களா பொறுப்பு?

நம்மிடம் காசு இல்லையே என தயங்குபவர்களையும் கடனாளி கார் ஓனராக்கி விடுவதென்று கங்கணம் கட்டிக் கொண்டு செயல்படும் கார்லோன் ஸ்டாலிலும் கூட்டம்தான். அவசரத்துக்கு அம்பது நூறு கைமாத்துத் தர இப்படி யாரும் இல்லையே என்று ஆதங்கம் ஏற்பட்டது!

'மாருதி காரைவிட சக்திவாய்ந்த இஞ்சின்' என்று கூறி ஒருவர் காட்டிய இடத்தில், ராட்சச அல்சேஷன் போல ஒரு பைக் நின்று கொண்டிருந்தது. மணிக்கு முந்நூறு கி.மீ. ஸ்பீடு போகுமாம்! விலை என்ன? 75 ஆயிரம். நம் ஊரில் இத்தனை ஸ்பீடில் போனால வீடு திரும்ப முடியுமா? பகீர்... அடிவயிறு கலங்கியது.

வீடு திரும்பியதும், "கார் கண் காட்சி போனீங்களே! கார்... கிர்... வாங்கினீங்களா?"

"இதெல்லாம் தனியா விக்கமாட்டாங்க சார்... கார் பாருங்க... எல்லாமே நல்லாத்தான் இருந்துச்சு. ஆனா நமக்குப் பிடிச்ச கார்தான் இல்ல... காசு மிச்சம்னு வந்துட்டேன்." ●

— மௌலி

## கலர் டீ.வி. பரிசு யாருக்கு?

ஆயிரக்கணக்கான வாசகர்கள், பட்டுப் புடைவைப் போட்டிகள் பன்னிரண்டிலும் கொசுறுப் போட்டியிலும் விடைகளை எழுதி, எல்லாக் கூப்பன்களையும் மொத்தமாக அனுப்பியிருக்கிறார்கள். பரிசீலனை நடந்து கொண்டிருக்கிறது. போட்டி முடிவும், கலர் டீ.வி பரிசு பெறும் வாசகர் யார் என்ற விவரமும் அடுத்த இதழில் இடம் பெறும்.

– ஆசிரியர்

கடந்த எட்டு ஆண்டுகளில் வேகப் பந்து வீச்சாளர்களாகப் பதினைந்து வீரர்களைத் தேர்ந்தெடுத்து டெஸ்ட் போட்டிகளிலும் ஒருநாள் போட்டிகளிலும் அறிமுகப்படுத்தியிருக்கிறது இந்திய கிரிக்கெட் போர்டு. இவர்களில் ஐந்து பேர் மும்பை மாநிலத் தேர்வாளராயிருந்த ராமகாந்த் தேசாயால் தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள். இருவர் கர்நாடக வீரர் ஜி. ஆர். விஸ்வநாத் சிபாரிசு மூலம் வந்தவர்கள். மீதி எட்டுப் பேர் வடக்கு மண்டலத் தேர்வாளர் கருணையால் வந்தவர்கள்! ஒருவர் கூட தமிழகத்தைச் சேர்ந்தவர் இல்லை.

இப்போது ஹாலந்து சென்றுள்ள இந்திய 'ஏ' அணியிலும் தமிழக வீரர் யாரும் இல்லை. இரண்டு மேட்சுகளில் தொடர்ந்து ஆறு விக்கெட்டுகளை வீழ்த்திய குமரன் பெயர் தேர்வாளர்கள் கண்ணில் படவில்லை. விளையாடிய ஒவ்வொரு மேட்சிலும் சதம் அடித்த. சரத், ரமேஷ் ஆகியோரும் ஹாலந்து செல்லவில்லை. ஆனால் ஓய்வு பெற வேண்டிய வயதில் உள்ள கன்வல்ஜித் சிங் தேர்ந்தெடுக்கப்பட்டிருப்பது கிரிக்கெட் வட்டாரங்களிலேயே அதிர்ச்சியை ஏற்படுத்தியிருக்கிறது!



தேர்வாளர்களில் நான்கு பேர் சிபாரிசு செய்த அனந்தபத்மநாபனை அணியிலிருந்து நீக்கி விட்டு, சாய்ராஜ் பகுதுலே தேர்வு செய்யப்பட்டிருப்பதைப் பல பத்திரிகைகள் கிழிகிழியென்று கிழித்திருக்கின்றன. இந்தத் தேர்வை எதிர்த்து, போர்டின் பொருளாளர் எஸ். கருணாகரன் நாயர் தமது பதவியை ராஜினாமா செய்யப் போவதாகவும் அறிவித்திருக்கிறார்!

இந்த நிலையில் கிரிக்கெட் புள்ளிகள் பலரிடம் கருத்துக் கேட்டோம்.

**ஜி.ஆர். விஸ்வநாத் (கிரிக்கெட் தேர்வுக் கமிட்டியின் முன்னாள் தலைவர்) :**

கர்நாடக அணி ரஞ்சி சாம்பியன். அதிலிருந்து ஒரு வீரர் கூடத் தேர்ந்தெடுக்கப்படவில்லை என்பது மட்டுமல்ல; அது பற்றிப் பரிசீலனை கூடச் செய்யவில்லை! ஏனெனில் அவர்கள் ஒருவிதக் கண்ணாடியை அணிந்திருப்பதுதான்! 800 ரன்கள் அடித்தவர்களெல்லாம் புறக்கணிக்கப்பட்டு வெறும் 310 ரன்கள் அடித்த வெங்கட்பிரதாப் தேர்ந்தெடுக்கப்பட்டிருப்பதே அவர்களின் 'கண்ணாடி'யை உணர்த்துகிறது!



**கபில்தேவ் :** சரியாகத் தேர்வு செய்ய முடியாதவர்கள் தங்கள் பதவியை ராஜினாமா செய்து விட்டுப் போவதுதான் நல்லது. எனது முன்னோடி மொகிந்தர் அமர்நாத் சொன்ன, 'Bench of Jokers' என்பதைத்தான் நமது தேர்வுக் குழுவினர் திரும்பத் திரும்ப நிரூபிக்கிறார்கள். BCCI என்பதை Board of Control for Cricket in India என்று சொல்வதற்குப் பதிலாக Blunders of Control for Cricket in India என்று கூற வேண்டும்!

**காவஸ்கர் :** ஹாலந்து செல்லும் இந்திய 'ஏ' அணியில் உள்ள ஒரு வீரரின் வயது அந்த அணியின் கோச் ஸ்ரீகாந்த், மானேஜர் கீர்த்தி ஆசாத் ஆகியோரின் வயதை விட அதிகம். இதைப் பார்க்கும் போது உலகக் கோப்பைக்காக இளம் வீரர்களைத் தயார் செய்கிறார்களா அல்லது முதியோர் ஆட்டத்துக்கான வீரர்களைத் தயார் செய்கிறார்களா என்று தெரியவில்லை. இதற்கு தேர்வுக் குழு விளக்கமளிக்க வேண்டும்.



பேட்டி : **சிம்மம்**

'காதல் கோட்டை' கமலிக்குப் பின் தேவயானி ஆழ்ந்த ஈடுபாட்டோடு பண்ணும் கதாபாத்திரம் 'ஒத்தை ரோசா'. (பேரைப் பாத்தீங்களா!). 'செந்தூரம்' படத்தில் இந்தப் பாத்திரமாகவே மாறி விட்டாராம். அதனால் இந்தப் படத்திற்கு அடித்தது யோகம். பைனான்ஸ் பிரச்னையில் பாதியோடு நின்ற இப்படத்தை பைனான்ஸியர் தரம்சந்த் லுங்கட்டிடம் தந்து எடுத்துக் கொள்ளச் சொல்லி தேவயானி சிபாரிசு செய்தார். இப்போது, படம் வெளியாகத் தயார் நிலையில் இருக்கிறது.

•

• பாரதிராஜாவிடம் உதவியாளராக இருந்த சங்கமன் இயக்கும் 'செந்தூரம்' மூன்று பெண்களைப் பற்றிய படம். சமூகத்தில் பெண்களுக்கு இழைக்கப்படும் அநீதியைத் தோலுரித்துக் காட்டியிருக்கிறாராம். 'பதினாறு வயதினிலே' சப்பாணி மாதிரியான பாத்திரமொன்றை இப்படத்தில் கதாநாயகனாக்கியிருக்கிறார். கத்தாழை என்கிற இப்பாத்திரத்தில் நடிப்பவர் புது முகம் மூர்த்தி.

• எங்கு நோக்கினும் கரீஷ்மாவைப் பற்றிய நியூஸ்தான். 'கோடீஸ்வர'னில் ஒரே ஒரு பாடல் காட்சியில் மட்டும் நடித்திருக்கும் (அதாவது ஆடியிருக்கும்) கரீஷ்மா கபூர் பற்றி ஊரெங்கும் பேச்சாக இருக்க, படத்தின் நாயகி சிம்ரனைப் பற்றி ஒருவரி தகவல் கூட இல்லை என்றால் - அவருக்கு கோபம் வரத்தானே செய்யும்? இந்தி பக்கம் போய் கரிஷ்மாவின் மார்க்கெட்டை ஒரு கலக்குக் கலக்க வேண்டியது தானே. சிம்ரனின் முதல் இந்தி 'தேரே மேரே ஸப்னே' ஹிட் படம்தான். பின் ஏன் இந்திப்பட வாய்ப்புகளே இல்லை?

''வாய்ப்பு வரலைன்னு யார் சொன்னா? மணிரத்னத்தின் 'தில் ஸே' படத்தில் நடிக்கக் கூட சான்ஸ் கிடைச்சது. கால்ஷீட் ப்ராப்ளம். கமிட் பண்ணிக்கலை. எனக்கு தமிழ் பிலிம்ஸ்ல நடிக்கவே டைம் சரியா இருக்கு. இப்பத்தான் கோவாவிலிருந்து ரிட்டன் ஆயிருக்கேன். உடனே, குலுமனாலிக்கு புறப்பட்டாகணும், 'கண்ணெதிரே தோன்றினாள்' படத்துக்கு. பிஸியோ பிஸி. இதுல இந்தியாவது? ஸிந்தியாவது?'' என்றவரிடம், எத்தனை நாளைக்குத்தான் இந்த ஹோட்டல் வாசம்? என்றதுதான் தாமதம்.

''ஹாயா இருக்க முடியல. ஓடிக்கிட்டே இருக்கேன். இதுல ஹோட்டலா இருந்தா என்ன? வீடாயிருந்தா என்ன? ரிலாக்ஸ் பண்ணிக்க ஒரு இடம் வேணும். அவ்வளவுதான். இந்த ரூம் போதும்'' என்றார்.

• அதிகாலையில் வீட்டிலிருந்து ரிகார்டிங் தியேட்டர் போகும் வழியில் ஒரு மெடிகல் ஷாப் அருகில் அமர்ந்திருக்கும் அந்த நான்கு முதியவர்கள் தேவாவின் பார்வையில் பட்டுக் கொண்டிருந்தனர். ஒரு நாள், காரை நிறுத்தி அவர்களோடு பேச்சுக் கொடுத்தார். பிள்ளைகளால் தாங்கள் படும் இன்னல்களை கண்ணீர் மல்கக் கூறினார்கள். முதுமையின் அவலம் தேவாவை யோசிக்க வைத்தது. இன்னும் இவர்கள் போல் அவதிப்படும் முதியோர்கள் இவ்வுலகில் எத்தனை பேரோ! யோசித்த தேவா ஒரு முடிவு செய்தார். முதியோர் இல்லம் ஒன்றை ஆரம்பிக்கிற முடிவுதான். ஸ்ரீபெரும்புதூர் அருகே முதியோர் இல்லம் அமைக்க இப்போது இடம் தேடிக் கொண்டிருக்கிறார் தேவா. சமூக சேவையில் இறங்கிவிட்ட





சிம்ரனுக்கு



தேவாவின் இசைச் சேவை எப்படிப் போய்க் கொண்டிருக்கிறது? "மேல் மருவத்தூராரின் ஆசியில் நல்லபடியாய் நடந்து கொண் டிருக்கிறது"- என்கிறார் தேவா. ('சாமி'க்குப் பிடித்தது டீயா? காப்பியா?)

● தமிழகத்தை உலுக்கிய போலி நிதி நிறுவனங்கள் விவகாரம் நாடறிந்தது. 'மனைவிக்கு மரியாதை' படத்தில் அதை கதையாக்கியிருக்கிறார் இயக்குனர் வி.சி. குகநாதன். படத்தைத் தயாரிப்பவர் இன்னொரு இயக்குனர் இராம. நாராயணன். வேலை தேடி வரும் பாண்டியராஜனை மடக்கிப் போடுகிறார் மணிவண்ணன். இவரின் ஐடியா உபயத்தில் நிதி நிறுவனம் ஒன்று தொடங்குகிறார் பாண்டியராஜன். செமை வசூல். வந்ததைச் சுருட்டிக் கொண்டு மணிவண்ணன் கம்பி நீட்ட, ஜனங்களிடம் சிக்கித் தர்ம அடி வாங்குகிறார் பாண்டியராஜன். நிதி நிறுவனத்தில் பண முதலீடு செய்த குஷ்புவும் தர்ம அடி கொடுக்கிறார். போட்ட பணத்தைத் திரும்பிப் பெற குஷ்பு பாண்டியராஜனை துரத்தோ துரத்து என்று துரத்த, கூடவே காதலும் வந்து, தொற்றிக் கொள்ள ஒரே ரொமான்ஸ், ஒரே காமெடியாய்க் கதை நகர்கிறது. சரிங்க மேடம். நீங்க எதுல யாவது பணம் போட்டு ஏமாந்த நிஜ அனுபவம் உண்டா?"

காதோடு காதாய் பதில் சொன்னார் குஷ்பு.

"பணத்துல ஏமாந்ததில்லீங்க. லைப்லதான் ஏமாந்துட்டேன்."

வருத்தமா மேடம்? "அதெல்லாம் எப்பவோ போயே போச்சு"- சொல்லி விட்டு போய்க் கொண்டேயிருந்தார், அடுத்த ஷாட்டுக்கு அழைப்பு வந்ததும்!

● சரத்தும் குஷ்புவும் நிஜமாகவே கதாநாயகன் கதாநாயகியாக ஒரு படத்தில் நடிக்கிறார்கள். அதுவும் ஒரே ஒரு பாடல் காட்சியில் ஆடிவிட்டு ஓடிப் போய் விடுகிறார்கள். 'உன்னிடத்தில் என்னைக் கொடுத்தேன்' படத்தில் ரோஜா மேடைப் பாடகி. கிடைத்த முதல் சினிமா வாய்ப்பில் கங்கை அமரன் இசையில் ரோஜா பாட- அந்தப் பாடலைப் படமாக்குகிறார் இயக்குனர் டி.பி. கஜேந்திரன். அந்தப் பாடலின் நாயகன் நாயகியாக சரத்தும் குஷ்புவும். விக்ரமன் விருப்பப்பட மறுப்பேதும் சொல்லாமல் சரத்-குஷ்பு நடித்துக் கொடுத்திருக்கிறார்கள். போகிற போக்கில் 'நட்புக்காக' தயாரிப்பாளர் ஏ.எம். ரத்னம், சரத்தைப் பற்றிச் சொல்லி விட்டுப் போனது கீழே:

"போயும் போயும் இந்த ஆளு அரசியல்ல என்ட்ரி ஆனாரு. 'நாட்டாமை'யை விட பிச்சுக்கிட்டு போயிருக்க வேண்டிய 'நட்புக்காக' வசூல்ல அடி பட்டுப் போச்சு. அந்தாளுக்கு அரசியலே தேவை இல்லை."

இதற்கு சரத் என்ன சொல்கிறாரோ? ◉

நேரமில்லை!

– மஹேந்த்

# அ.தி.மு.க. - ம.தி.மு.க. மீண்டும் நெருக்கம்!

● "சன் டீ.வி, கலாநிதி மாறனை அமுலாக்கப் பிரிவு நேரிடையாகக் கூப்பிட்டு விசாரிக்க வேண்டும்" என்று அழுத்தமாக ஜெ. சொல்லிக் கொண்டு வருகிறாராம். இது சம்பந்தமாக அமைச்சர் கடம்பூர் ஜனார்த்தனத்தை கோபித்துக் கொண்டாராம் ஜெ. "நான் என்னால் முடியும்வரை சொல்லிப் பார்த்தேன். அமுலாக்கப் பிரிவு இயக்குநர்தான் 'ஸ்பீட் பிரேக்கர்' போடுகிறார்'' என்று கடம்பூர் புலம்புகிறாராம். அமுலாக்கப் பிரிவு இயக்குநரை மாற்றியே தீருவது என்று இப்போது கடம்பூர் முட்டி மோதிக் கொண்டிருக்கிறார். ஆனால் சன் தொலைக்காட்சிக்கு அமுலாக்கப் பிரிவு மூன்று நோட்டீஸ் அனுப்பியிருக்கிறதாம். எல்லா நோட்டீஸ்களுக்கும் முறையான பதில் சொல்லியிருக்கிறதாம் சன். அமுலாக்கப் பிரிவு இயக்குனரை மாற்றும் விஷயத்தில் இந்தியாவின் பிரபல ஆங்கில தினசரி நிர்வாகமும் பிரதமர் வரை 'பிரஷர்' கொடுத்துக் கொண்டிருக்கிறதாம். எனவே சகோதரி மற்றும் "கரன்" சகோதரர்களின் அமுலாக்கப் பிரிவு வழக்குகள் ஊறுகாய் ஜாடிக்குள் போகும் வாய்ப்பு பிரைட்டாக இருக்கிறது.

● செப்டம்பர் மறுமலர்ச்சி பேரணிக்கான வேலைகளில் முழு மூச்சுடன் இறங்கியிருக்கிறது ம.தி.மு.க. ஜெவுடன் சுமுகமாக இருந்த சமயத்தில் செய்யப்பட்ட சுவர் விளம்பரங்களில் ஜெ பெயர் பெரிதாக இடம் பெற்றிருந்தது. ஆனால் அதன் பிறகு 'சுசமுசா' தோன்றிவிட்டதால் புதிய விளம்பரங்கள் எதுவும் செய்ய வேண்டாம் என்று சொல்லப்பட்டதாம். "பேரணிக்கு இன்னும் ஒன்றரை மாதங்கள் இருக்கும் நிலையில் அரசியலில் ஏக மாற்றங்கள் வரலாம்" என்கிறார் ம.தி.மு.க பிரமுகர் ஒருவர். அ.தி.மு.கவுக்கும் - ம.தி.மு.கவுக்கும் மீண்டும் பெவிகால் போடும் வேலையை நாவலர் ஏற்றுக் கொண்டிருக்கிறார். ஆகஸ்ட் முதல் வாரத்தில் நடக்க இருக்கும் மத்திய அமைச்சரவை மாற்றத்தில் செஞ்சி ராமச்சந்திரனுக்குப் பொறுப்பு தரப்படலாம். தொலைத் தொடர்பு இலாகா கிடைப்பதற்கான வாய்ப்பு இருக்கிறதாம். இதற்கிடையில் காவிரி விவகாரத்தில் கலைஞர் கூட்டிய சர்வகட்சிக் கூட்டத்தில் மதிமுக கலந்து கொள்ளாது என்று முந்திரிக் கொட்டையாக அறிக்கை விட்ட கட்சியின் முன்னணிப் பிரமுகர்களைக் கண்டித்திருக்கிறார் வைகோ.

● தனி ஆவர்த்தனம் வாசிக்கத் துவங்கி விட்டார் தங்கபாலு. அடையாறு காந்தி நகரில் அலுவலகம் அமைத்திருக்கிறார். "தாம் நியமித்த அலுவலகப் பொறுப்பாளர்கள் மற்றும் மாவட்டச் செயலாளர்களை முற்றிலும் மாற்றிவிடக் கூடாதென்று திட்டவட்டமாக திண்டிவனத்தாரிடம் தெரிவித்திருக்கிறார் தலைவர்'' என்கிறார் தங்கபாலுவுக்கு நெருக்கமான ஒரு பிரமுகர். திண்டிவனத்தார் த.மா.காவிலிருந்து ஆட்களை இழுக்கும் வேலையைச் செய்து கொண்டிருப்பதாகச் செய்தி ஒருபுறம். மறுபுறம், தங்கபாலு கோஷ்டி த.மா.கா வுக்குத் தாவி, காங்கிரஸுக்கு அதிர்ச்சி கொடுக்கும் என்கிறார்கள். ஆனால் டில்லியில் அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியில் தங்கபாலுவுக்கு ஏதேனும் பொறுப்பு கிடைக்கும் பட்சத்தில் காங்கிரஸிலேயே இருந்து கொஞ்சம் 'அடக்கி' வாசிப்பார்களாம்.

● வெளிநாட்டில் வாழும் இந்தியர்களிடம் இருந்து லட்சக்கணக்கான டாலர்களை கடனாகப் பெற்றுத் தருவதற்கு ஏஜெண்ட் போல் செயல்பட்டுக் கொண்டிருக்கிறார் பொன்னான முன்னாள் அ.தி.மு.க. மாண்புமிகு ஒருவர். ஆனால் அவர் பொன்னுசாமி அல்ல!

**Last punch !**

● உடையாரிடமிருந்த கோல்டன் ஈகிள் கம்யூனிகேஷன்ஸ் (GEC), விஜய் மல்லையா கைக்கு வந்து, விஜய் டீவியானது. இப்போது இதை 'ஈநாடு' ராமோஜிராவ் வாங்கியிருக்கிறார். பெயர் மாற்றம் வருமா? இப்போதைக்கு இல்லை; பின்னர் எப்படியோ? தெரியாதாம்!

— தில்லப்பா

அப்பா அப்பட்டமான நாத்திகர். (நீதிக் கட்சிக்காரர்) அம்மா பக்திப் பழம். பள்ளி நாட்களில் பொட்டு வைத்துக் கொள்ள வேண்டாம் என்று அப்பா சொல்லுவார் என்றாலும், இன்றைக்குச் சாந்தகுமாரி நெற்றி நிறைய குங்குமப் பொட்டும், திருநீறுமாய் இருக்கிறார். வருடம் ஒரு தடவை திருப்பதிக்குப் போய் சாமி கும்பிட்டு வருகிறார். முருகன் இஷ்ட தெய்வம். ஆஞ்சநேயர்கோவிலுக்கு அடிக்கடி போவதுண்டு. ஆனால் இவருடைய கணவர், அமைச்சர் பேராசிரியர் அன்பழகன் இன்னமும் முழுமையான பகுத்தறிவுவாதிதான்!

சாந்தகுமாரி என்கிற அன்புச் செல்வி, பேராசிரியர் அன்பழகன் திருமணம் முடிந்து, இது முப்பதாவது ஆண்டு. "முப்பதாண்டு திருமண வாழ்க்கையின் வெற்றி ரகசியம் என்ன மேடம்?" என்றால், பேராசிரியரைப் போலவே, நிதானமாய் "வாழ்க்கையின் யதார்த்தத்தைப் புரிந்து கொண்டு, எதிர்பார்ப்புகளைக் குறைத்துக் கொள்ளுவதன் மூலம், ஏமாற்றங்களைத் தவிர்ப்பதுதான்!" என்கிறார்.

இவர்கள் திருமணம் காதல் திருமணம்தான். பேராசிரியரின் முதல் மனைவி வெற்றிச் செல்வி, கான்ஸர் வந்து, நாட்களை எண்ணிக் கொண்டிருந்த சமயம்தான், சாந்தகுமாரியை சென்னை மருத்துவக் கல்லூரியில் சேர்த்துப் படிக்க வைத்து, டாக்டராக்கும் எண்ணத்துடன், பேராசிரியரைச் சந்தித்தார் சாந்தகுமாரியின் அப்பா வெங்கிடசாமி. அப்போதுதான் பேராசிரியரும், சாந்த குமாரியும் முதல் தடவையாய்ச் சந்தித்துக் கொண்டனர். ஆனால், சாந்தகுமாரியின் மெடிகல் காலேஜ் ஆசை நிறைவேறவில்லை. வெற்றிச் செல்வியின் மறைவுக்குப் பின், சாந்தகுமாரி- அன்பழகன் திருமணம் மிக எளிமையான முறையில் நடந்தது.

"எங்கள் திருமணத்தின்போது அவர் தி.மு.க. எம்.பி.ஆக டெல்லியில் இருந்தார். அப்போதுகூட அவர் மாதம் ஓரிரு தடவை சென்னை வருவார்; நான் எப்போதாவது டெல்லி போவேன். அவ்வளவுதான். நாங்கள் டெல்லியில் குடித்தனம் பண்ணவேயில்லை."

"பேராசிரியர் என்றாலே, மிக சாந்தமான ஓர் உருவம்தான் நினைவுக்கு வருகிறது. அவர் வீட்டில் கோபப்படுவாரா?"

"என்ன இப்படிக் கேட்டுட்டீங்க! பத்து வருஷம் முன்னாடி வரைக்கும், அவருக்கு, ஏதாவது ஒண்ணுன்னா, திடீர்னு கோபம் வரும். கையில் எது இருந்தாலும்-காபி தம்ளர், புத்தகம், பேப்பர், பைல்-எது இருந்தாலும் தூக்கி எறிந்து விடுவார்! அப்படி ஒரு கோபக்காரர். சாது மிரண்டால் காடு கொள்ளாது என்பார்களே அதுபோன்ற கோபம். ஆனாலும் கோபம் வந்த கொஞ்ச நேரத்திலேயே சகஜ நிலை திரும்பி விடும்."

"முழுநேர அரசியல்வாதியான அவரால், குடும்பத்துக்காக நேரம் செலவிட முடியாதே! அதில் உங்களுக்கு வருத்தம் ஏற்பட்டதுண்டா?"

"ஆரம்பத்தில் அப்படி வருத்தம் இருந்தது உண்டு. ஆனால் நாளடைவில், அவரைப் புரிந்து கொண்டபின், வருத்தம் போய்விட்டது. காலையில் சீக்கிரமே எழுந்து வாக்கிங் போய் விடுவார். நாள் முழுக்க பிஸி. இரவு தூங்குவதற்குப் பதினொன்று, பன்னிரெண்டுகூட ஆகிவிடும். என்னால், அத்தனை நேரம் கண் விழித்திருக்க முடியாது."

"சாப்பாடு விஷயத்தில் அவர் எப்படி? வீட்டில் நீங்கள்தான் சமையலா?"

"ஆமாம்! நமக்கு உடம்புல சக்தி இருக்கிற போது, சமையலுக்கு எதுக்கு ஆள் என்பது என் பாலிஸி. எனவே வீட்டில் சமையலுக்கு ஆள் கிடையாது. நான் சைவம், அசைவம் இரண்டுமே சமைப்பேன். அவரும் சிக்கன், மீன் என்றால் விரும்பிச் சாப்பிடுவார். ஆனால், ஐந்தாறு வருடங்களாய் சைவம்தான் சாப்பிடுகிறார். எனவே நானும் அசைவம் சமைப்பதும் இல்லை; சாப்பிடுவதும் இல்லை."

"இருவரும் சேர்ந்து சினிமாவுக்கெல்லாம் போவீர்களா?"

சிரிக்கிறார் திருமதி அன்பழகன்.

"ஓமர் முக்தர் என்று ஒரு படம் வந்ததே அந்தப் படம் பார்த்தோம். ஒரு தடவை திருச்சிக்கு இவர் மீட்டிங்கில் பேசப் போக வேண்டியிருந்தது. அப்போது நானும் போயிருந்தேன். அன்று இரவு,



கட்சிக்காரர்கள் வற்புறுத்தலுக்காக 'பணக்காரன்' படம் பார்த்தோம். அதுக்கப்புறம் தியேட்டர் பக்கமே போகவில்லை. நானாவது அவ்வப்போது, டீ.வி.யில் நல்ல சினிமா என்றால் பார்ப்பதுண்டு. அவர் அதில் ஆர்வம் காட்டினதே இல்லை."

"அவர் வெளியூர் நிகழ்ச்சிகளுக்குப் போகிற போது, நீங்களும் உடன் செல்வது உண்டா?"

"அடிக்கடி இல்லை என்றாலும், அவ்வப்போது போகிறதுண்டு. அப்போது மட்டும் என்ன? அவர் கட்சிக்காரர்களுடன் சந்திப்பு, நிகழ்ச்சிகள் என்று பிஸியாக இருப்பார். எனக்கு, அவர்கூட வெளியூர் போன திருப்தி. அவ்வளவுதான்."

"உங்களிருவருக்கிடையில் ஒத்துப் போகாத விஷயம் என ஏதாவது உண்டா?"

"எனக்குக் கொஞ்சம் நன்றாகப் பளிச்சென்று புடைவையணிந்து கொள்ள ஆசை உண்டு. ஆனால், உடை விஷயத்தில் அவர் நேரெதிர். சாதாரண வேட்டி, கசங்கியிருந்தாலும் பரவாயில்லை என்று சட்டை அணிந்து கொண்டு புறப்படுவார். நான் சொல்லிச் சொல்லி, இப்போதெல்லாம் பளிச்சென்று, சலவை செய்த வேட்டி, சட்டை அணிகிறார். அவரது தேவைகள் மிகக் குறைவு. குறைந்தபட்ச சௌகரியங்களே கூட அதிகம் என்பார் அவர். காலப் போக்கில், அவரது அந்த குணமே எனக்கும் வந்து விட்டது."

"நீங்கள் புத்தகங்கள் படிப்பது உண்டா? எழுத்து ஆர்வம் உண்டா?"

"புத்தகங்கள் படிப்பதுதான் முன்பெல்லாம் ஒரே பொழுதுபோக்கு. பொன்னியின் செல்வனை நான் பல தடவை படித்து மகிழ்ந்திருக்கிறேன். கலைஞரின் சங்கத்தமிழ் எனக்குப் பிடித்த இன்னொரு புத்தகம். ஜெயகாந்தன், சிவசங்கரி, பாலகுமாரனின் எழுத்துக்களைப் படிப்பேன். எழுத்திலும் ஆர்வம் உண்டு. சுடர்க்கொடி என்ற புனை பெயரிலும், அன்புச் செல்வி என்ற பெயரிலும் கட்டுரைகள் எழுதியுள்ளேன்."

"நாய் வளர்ப்பதில் ரொம்ப ஆர்வமோ?"

"செடிகள் வளர்ப்பதும், நாய்கள் வளர்ப்பதும் என் ஹாபி என்று சொல்லலாம். இப்போது சீசர், ராஜா என்று இரண்டு நாய்களை வளர்க்கிறோம். இதற்கு முன் பப்லு என்று ஒரு அல்சேஷன் நாய் வளர்த்தோம். புத்திசாலி. ஒன்பது வருடம் எங்களுடனேயே இருந்தது. சில வருடங்களுக்கு முன் சிறுநீரகம் பழுதுபட்டு, இறந்து போனது. பப்லுவின் இறப்பு,

# "அவருக்காக நான் வேண்டிக் கொள்வேன்!"



பேராசிரியரை ரொம்பவே ஆழமாய் பாதித்து விட்டது. இரண்டு மூன்று நாட்களுக்கு, மிகவும் சோகமாய் இருந்தார். இவருக்குக் கூட இந்த அளவுக்கு ஆழமான அட்டாச்மென்ட்ஸ் உண்டா என்று நான் ஆச்சரியப்பட்டுப் போனேன்."

"நீங்கள் ஆன்மீகத்தில் ஆழ்ந்த நாட்டமுடையவர். அவரோ பகுத்தறிவுவாதி. அவருக்காக நீங்கள் ஆண்டவனிடம் வேண்டிக் கொள்ளுவது உண்டா?"

"அவர் பகுத்தறிவுவாதியானால் என்ன? என் கணவரில்லையா? அவருடைய ஆயுளுக்கும், ஆரோக்கியத்துக்கும் நான் தினமும் பிரார்த்தனை செய்யாமலிருப்பேனா? அவருக்கு முன்னாடி, பூவும், பொட்டுமா போய் சேர்ந்துடணும்கிறதுதாங்க என் ஆசை!"

சந்திப்பு: **எம். பாரதி**

புகைப்படம்: **யோகா**



# “வாஜ்பாய் அரசுக்கு பாஸ் மார்க் கூடத் தர மாட்டேன்!”

**முன்னாள் பிரதமர் சந்திரசேகர், அண்மையில் ஒரு புத்தக வெளியீட்டு விழாவில் கலந்து கொள்ளுவதற்காக சென்னை வந்திருந்தார். அவர் கல்கிக்கு அளித்த Exclusive பேட்டி:**

**கல்கி :** ஊழல் கறை படியாத அரசியல்வாதி என்ற பெயர் உங்களுக்கு உண்டு. ஆனால் இன்று கிரிமினல்கள், மற்றும் ஊழல் பேர்வழிகளின் புகலிடமாக உள்ளது அரசியல். இது உங்களுக்கு வருத்தம் ஏற்படுத்தவில்லையா?

**சந்திரசேகர் :** கடந்த பத்துப் பதினைந்து வருடங்களாக இந்திய அரசியலின் தரம் தாழ்ந்து வருவது விசனத்துக்குரியது. முன்பு, தியாகம் செய்யத் தயாராக இருந்தவர்கள் அரசியலுக்கு வந்தார்கள். ஆனால் இன்று அரசியல் என்பது ஜாதி, மதம், இவற்றின் அடிப்படையில், மக்களின் உணர்வுகளைத் தூண்டிவிட்டு, நடக்கிற வியாபாரமாகி விட்டது. பணபலத்தின் வீச்சு அதிகரிக்கிற போது, கிரிமினல்கள் ஆதிக்கம் அதிகரிக்கிறது என்பதும் உண்மைதான்.

**கல்கி :** நாட்டுக்காக சத்தியாகிரகங்களில் ஈடுபட்டு ஜெயிலுக்குப் போன காலம் மலையேறி, கிரிமினல் கேஸ்களில், ஜெயிலுக்குப் போனவர்கள், பாராளுமன்றத்துக்கும், சட்ட மன்றத்துக்கும், மக்கள் பிரதிநிதிகளாய்ச் செல்கிறார்கள். ஏன் இந்த முரண்பாடு?

**சந்திரசேகர் :** அதற்கு முக்கிய காரணம் அரசியல் கட்சிகள் தான். கொள்கை அடிப்படையில் அரசியல் நடத்துகிற கட்சிகள் இப்போது இல்லை. மக்களை பல்வேறு உணர்வுகளாலும் பிளவுபடுத்தி, அரசியல் நடத்துவதைச் சுலபமாய் நினைக்கிறார்கள். ஏழைமை, வேலை வாய்ப்பு, மக்களின் மற்ற முக்கிய பிரச்னைகள் பற்றியெல்லாம் யாருக்கு இப்போது கவலை? அரசியல்வாதிகளுக்குச் சுயநலம் அதிகரித்து விட்டதும் ஒரு காரணம்.

**கல்கி :** சமீப காலமாக, ஜனாதிபதி ஆட்சி முறை பற்றி பரவலாகப் பேசப்படுகிறது. அது பற்றி உங்கள் கருத்து என்ன?

**சந்திரசேகர் :** ஜனநாயகத்தில் உலகம் தழுவிய இரண்டு முறைகள் உண்டு. ஒன்று பார்லிமென்டரி ஜனநாயகம், இரண்டாவது ஜனாதிபதி ஆட்சி முறை. இரண்டு முறைகளின் சாதக, பாதகங்களை அலசிப் பார்த்து, இந்தியாவுக்கு ஏற்றது பாராளுமன்ற ஜனநாயகம்தான் என்று முடிவு செய்யப்பட்டு, அது தற்போது நடை முறையில் உள்ளது. ஜனாதிபதி ஆட்சி முறையில், ஸ்திரத்தன்மை பெரிய பலம் என்றால், பாராளுமன்ற ஜனநாயகத்தில், மக்களின் பிரதிநிதிகள் மக்களுக்கு பதிலளிக்க கடமைப் பட்டவர்கள். இந்த அக்கவுன்டபிலிடி - இந்த முறை அரசாங்கத்தின் பலம்.

மக்களுக்குக் கொடுக்கும் வாக்குறுதிகளை, ஆளும் அரசு, நிறைவேற்றுகிறதா என்பதை வைத்து, மக்கள் முடிவெடுக்க வேண்டும் என்பதற்காகவே பாராளுமன்ற ஜனநாயக முறை இங்கே கொண்டு வரப்பட்டது என்பதை மறந்துவிடக்கூடாது.

**கல்கி :** இந்தியாவில் ஒரு கட்சி ஆட்சி என்பது இனி சாத்தியமில்லையா?

**சந்திரசேகர் :** இன்றுள்ள சூழ்நிலையை வைத்துப் பார்த்தால், இன்னும் சில காலத்துக்குக் கூட்டணி ஆட்சிதான் சாத்தியம் என்று தோன்றுகிறது.

**கல்கி :** அடிக்கடி தேர்தல் வருவது, மக்களை சலிப்படையச் செய்யாதா?

**சந்திரசேகர் :** பாராளுமன்ற ஜனநாயகத்தில், சில சமயங்களில் இது தவிர்க்க முடியாதது. ஆனால், இந்தியக் குடிமக்கள், ஜனநாயகத்துக்கு ஆபத்து வரும் போதெல்லாம், தீர்மானமான முடிவுகளை வழங்கியுள்ளதையும் மறந்து விடக்கூடாது. அது போலவே, இனி வரும் நாட்களிலும், மக்கள் தெளிவான முடிவுகளை அளிப்பார்கள் என்பது நிச்சயம்.

**கல்கி :** அரசியல் சட்டத்தின் 356வது பிரிவு பற்றி மறுபடி விவாதம் நடக்கிறது. அந்தப் பிரிவு பற்றி உங்கள் கருத்து என்ன?

**சந்திரசேகர் :** 356வது சட்டப் பிரிவை ரொம்ப அவசியமானபோது மட்டுமே பயன்படுத்த வேண்டும் என்பது என் கருத்து. அந்த சட்டப் பிரிவை பிரயோகிப்பதற்கு முன்பு, அது பற்றி விவாதம் நடத்தி, அதனைப் பயன்படுத்துவதைத் தவிர வேறு வழி இல்லை என்றால் மட்டுமே பயன்படுத்த வேண்டும்.

**கல்கி :** நீங்கள் பிரதமராக இருந்தபோது, 356வது பிரிவினை தவறாகப் பயன்படுத்தி தி.மு.க. ஆட்சியைக் கலைத்தீர்களே!

**சந்திரசேகர் :** நீங்கள் சொல்வது சரி இல்லை. 356 ஐ பயன்படுத்துவதைத் தவிர வேறு வழியில்லை என்ற சூழ்நிலையில்தான் அந்த நடவடிக்கை எடுக்கப்பட்டது என்பது தான் உண்மை.

**கல்கி :** இப்போது, தமிழ் நாட்டில் தி.மு.க. அரசை 356 ஐ பயன்படுத்திக் கலைக்க வேண்டும் என்கிறார்களே! அப்படிச் செய்யலாமா?

**சந்திரசேகர் :** அரசாங்கத்தைக் கலைப்பதற்கு அவசியமான நிலவரம் தமிழ்நாட்டில் நிலவுகிறதா என்பதை, பத்திரிகைச் செய்திகளை வைத்து முடிவு செய்யக் கூடாது. அதற்கு, மாநிலத்தில் நிலவும் சூழ்நிலை பற்றிய ஆழமான அறிவு அவசியம்.

**கல்கி :** வாஜ்பாயின் நாலுமாத ஆட்சியை அலசி மார்க் போட்டால், எத்தனை மார்க் போடுவீர்கள்?

**சந்திரசேகர் :** பாஸ் மார்க் கூட நிச்சயம் போட மாட்டேன்.

**கல்கி :** நாலு மாத காலம் என்பது ரொம்ப அதிகமில்லையே! அதற்குள் பெரிதாக என்ன சாதித்துவிட முடியும்?

**சந்திரசேகர் :** சாதனை என்று ஒன்றும் செய்யவில்லை என்பது மட்டுமில்லை; தேச பாதுகாப்பு, சட்டம், ஒழுங்கு, பணவீக்கம், விலைவாசி உயர்வு நிலையற்ற தன்மை, ராம் மந்திர் விவகாரம் என்று எல்லாவற்றையும் மேலும் சிக்கலாக்கி விட்டார்களே!

**கல்கி :** முன்பு மேற்கொண்டது போல, மறுபடி ஒரு நாடு தழுவிய பாத யாத்திரை மேற்கொள்ளும் எண்ணம் இருக்கிறதா? அதற்கு அவசியம் இருப்பதாக நினைக்கிறீர்களா?

**சந்திரசேகர் :** நான் முந்தைய தடவை கன்னியாகுமரியில் தொடங்கி, டெல்லி வரை பாத யாத்திரை மேற்கொண்ட போது, இந்நாட்டு மக்களுக்கு நான்கைந்து அடிப்படைப் பிரச்னைகள் இருப்பதை அனுபவமாக உணர்ந்தேன். சுதந்தரமடைந்து ஐம்பதாண்டுகளாகியும், இந்நாட்டுக் குடிமக்கள் அனைவருக்கும் சுத்தமான குடி நீர் கிடைக்கவில்லை என்பது வருத்தத்தை அளிக்கிற ஒரு விஷயம். அது மட்டுமில்லை, தேச, மாநில தலைநகரங்களில் வசிக்கும் மக்களுக்குக் கூட இந்தப் பிரச்னை உள்ளது. அது போல, குழந்தைகளுக்கும், தாய்மார்களுக்கும் சத்தான உணவு இல்லாமை, கல்வி, சுகாதார வசதி, ஜாதி, மத பேதம் போன்ற பிரச்னைகளும் தீர்க்கப்படாமலேயே தொடர்கின்றன. மறுபடியும் பாத யாத்திரை போகிற திட்டம் இல்லை என்றாலும், நான் அப்போது சந்தித்த தொண்டர்கள், சமூக அக்கறை கொண்டவர்கள், தேசபக்தர்கள் என்று ஏழெட்டாயிரம் பேருடைய விலாசங்கள் வைத்திருக்கிறேன். அவர்களுடன் தொடர்பு வைத்திருக்கிறேன். அவர்களுடன் தொடர்பு கொண்டும் சில முக்கிய நகரங்களுக்குச் சென்றும் மக்களிடையே விழிப்புணர்வு ஏற்படுத்த வேண்டியதன் அவசியத்தை உணருகிறேன்.

**கல்கி :** காங்கிரஸ் மறுபடி ஆட்சியைப் பிடிக்கும், சோனியா காந்தி பிரதமர் ஆவார் என்று நினைக்கிறீர்களா?

**சந்திரசேகர் :** இந்தக் கேள்விக்கு நான் பதில் சொல்ல மாட்டேன். ●

சந்திப்பு : **எஸ். சந்திரமௌலி**

படம் : **ஸ்ரீஹரி**

# ஆர்யபட்டா

## 2

### சென்ற வாரம்

ஆனந்த் பெங்களூரில் தன் வீட்டு மாடியில் சுடப்படுகிறான். போலீஸ் கண்ட்ரோல் ரூமைக் கூப்பிட்டு, 'சோமு' என்று சொல்லிவிட்டு மேலே சொல்ல முடியாமல் மூச்சிழுந்து இறந்து போகிறான். விதான் சௌதாவில் ராஜ்யோத்சவா விழாவில் விஞ்ஞானிகளுக்கு 'ஆர்யபட்டா' விருதளிக்கும் நிகழ்ச்சியில் டாக்டர் சோமசுந்தரம் தாமதமாக வந்து பரிசு பெறுகிறார். காலை வேலைக்காரி ஷாமிலி வீடு பெருக்க வரும்போது கதவு திறந்திருப்பதையும், ஆனந்தின் சடலத்தையும் பார்த்து அலறுகிறாள். பக்கத்து வீட்டு ஜமதக்னிக்குச் சொல்ல அவர் போன் செய்து, போலீஸ் அதிகாரிகள் ப்ரபாகர் ராவும் சங்கரும் வருகிறார்கள்.

ஆனந்தின் மனைவி பாரதி சென்னைக்குச் சென்றிருப்பதாக அறிந்து, அவளுக்கு போன் செய்து மென்மையாகத் தகவல் சொல்லத் தீர்மானிக்கிறார்கள். இனி :-

சங்கர் ஒரு நீண்ட இரவுக்குத் தயாராகி, டீ வரவழைத்துக் குடித்துவிட்டு, "ஆனந்த் என்ன வேலைல இருந்தார்" என்று கேட்டார். அலமாரிப் புத்தகங்கள் பல விஞ்ஞானப் புத்தகங்களாக இருந்தன.

'Only the Paranoid Survive' என்கிற புத்தகத்தை ப்ரபாகர் ராவுக்குக் காட்டினார்.

ஜமதக்னி, "டிபென்ஸ் லாப்ல சைன்டிஸ்டா இருந்தார் சார்" என்றார். "நான் கூட அதே லாப்லதான்...."

படங்களைப் பார்த்தார் பல தருணங்களில் பல அவார்டுகள். ஆனந்தின் அறையைப் பார்த்தார். சாதனங்கள், ஆராய்ச்சிக் கட்டுரைகள், ஜர்னல்கள்.

"வீட்டிலேயே லாப் நடத்திட்டு இருந்தாரோ?"

"ஆசாமி சூட் போட்டிருக்கார் கவனிச்சியா சங்கர்?"

சங்கர், "ஆமா ஸார். எங்கயோ ஃபங்ஷனுக்குக் கிளம்பிட்டிருந்திருக்கார் ஸார்.".

மேசைமேல் வைத்திருந்த அழைப்பிதழைப் பார்த்தார். "ஆர்யபட்டா அவார்ட்ஸ். யூ ஆர் இன்வைட்டட்."

ப்ரபாகர், "இந்த ஃபங்கஷன்தான்" என்றார்.

அதில் –

The Director and the Board of Governors of DRL invite you to the Scientists award function...

"டிஆர்எல்ங்கறது என்ன?"

சங்கர், "டிபன்ஸ் ரிசர்ச் லாப் ஸார்..." என்றான்.

ப்ரபாகர் சங்கரிடம் தனியாக, "இந்த ஜமதக்னி முழி சரியில்லை. கொஞ்சம் அதட்டி விசாரிச்சுருங்க. போஸ்ட்மார்ட்டம் ரிப்போட்டில இறந்த நேரம், டைம் ஆஃப் டெத் தெரிஞ்சப்புறம் அப்ப எங்கிருந்தார்னு சோதிச்சுருங்க. ஏம்பா, போட்டோ எடுத்தாச்சா? பாடியை விக்டோரியாவுக்கு அனுப்பலாமா?"

"பத்து நிமிஷம் ஸார்."

இதனிடையே சங்கர் ஒரு கார்ட்லஸ் போனைக் கொண்டு வந்து கொடுத்தார். "ஸார் மிஸஸ் பாரதி ஆனந்த்."

ப்ரபாகர், "அவங்களா கூப்ட்டாங்களா?"

சங்கர், "இல்லை ஸார். நாமதான் எஸ்டிடி போட்டிருக்கோம்."

"ஹலோ நான் ப்ரபாகர் ராவ் பேசறேன். ஹைகிரவுண்ட்ஸ் அஸிஸ்டண்ட் சூப்ரண்டெண்ட் ஆஃப் போலீஸ். ஏஎஸ்பிங்க மிஸஸ் ஆனந்த், உங்களுக்கு நான் ஒரு துக்க செய்தியைச் சொல்றதில ரொம்ப வருத்தப்படறேன். உங்க கணவர் ஆனந்த் இறந்து போய்ட்டார்.. கொலைன்னு நம்பறோம் மிஸஸ் ஆனந்த். மனசை தேத்திக்கங்க. கூட யாராவது பெரியவரை துணைக்குக் கூட்டிக்கிட்டு உடனே ப்ளைட்டைப் புடிச்சு பெங்களூர் வந்திங்கன்னா... பாடியை பொறுப்பேத்துக்கணும். நாங்க அதை போஸ்ட்மார்ட்டம்க்கு அனுப்பறோம். விக்டோரியா ஆஸ்பிட்டலுக்கு. மிஸஸ் ஆனந்த் ஐம் வெரி வெரி ஸாரி. நீங்க உடனே வாங்க. உங்கப்பா இருக்காங்களா? கூப்பிடுங்க."

காத்திருக்கும் போது, "சே என்ன ஒரு உத்யோகம்யா! எத்தனை முறை எதாவது துக்க செய்தியைச் சொல்ல வேண்டியிருக்குது பாரு. இந்த கேஸோட ரிஸைன்

பண்ணிடப் போறேன் சங்கர்!" என்றார்.

"போன முறையும் அந்த காலேஜ் பொண்ணு சூய்சைடின்போது இதேதான் சொன்னீங்க."

**செ**ன்னையில் திருவான்மியூர் பகுதியில் கடற்கரையருகில், பாரதியின் தந்தை வீட்டில் காலருகில் டாபர் மேன் படுத்திருக்க,



தூரத்து அலை ஓசை கேட்க, பாரதியின் தந்தை மாலை பேப்பர் படித்துக் கொண்டிருந்தபோது டெலிபோன் உறுத்தாமல் ஒலித்தது. பாரதி அதை எடுத்தாள். நைட் கவுனில் இருந்தாள். அவள் நெற்றிப்பொட்டு சற்றே கலைந்திருந்தது. தற்செயலான விஷயம்தான்.

பாரதி சற்று நேரம் மௌனமாக டெலிபோனில் ப்ரபாகர் ராவ் சொன்னதைக் கேட்டாள். அவள் அப்படியே ஸதம்பித்துப் போனதை அவள் தந்தை சந்திரசேகர் கவனிக்கவில்லை.

அவளைப் பார்த்தபோது திகைத்தார். ஒரு கணத்தில் அத்தனை அழகும் கலைக்கப்பட்டவள் போல அப்படியே தொய்ந்து போய் தோள் சரிந்து, நோ!" என்றாள்.

"என்னம்மா?"

பாரதி பதில் சொல்லாமல் பிரவகிக்கும் கண்ணீருடன் அடக்க முடியாமல் அழுதாள். தந்தை "என்னம்மா? என்ன ஆச்சு? எதாவது

**சுஜாதா**

> "உங்க வீட்ல டீ.வி. ஏன் போட்டுப் பார்க்குறதே இல்லை?"
> 'சும்மா டீ.வி. பார்க்குறதனால பையன்கள் படிப்பு கெட்டுப் போகுது."
> "பையன்கள் யாரையும் காணோமே?"
> "பக்கத்து வீட்டில் டீ.வி. பார்க்குறாங்க!"
> – தேனி முருகேசன்



விபத்தா?" பாரதி போனை அவரிடம் கொடுத்தாள்.

"ஆனந்த் ஆனந்த்!"

அது இன்னும் உயிருடன் இருந்தது. "ஹலோ ஐ எம் பாரதி'ஸ் ஃபாதர் ஸ்பீக்கிங். ஹூ இஸ் இட்?"

சற்று நேரம் கேட்டார். அவர் முகத்தில் எந்தவித உணர்ச்சியும் தோன்றவில்லை. நெற்றிப் புருவம் மட்டும் பின்னிக் கொண்டு நரம்புகள் தெரிந்தன.

"ஐ ஸீ! ஐஸீ! ஐவில் டெல் ஹர். பாடிய எடுத்துட்டுப் போகாதீங்க. அடுத்த ப்ளைட்டை புடிச்சுட்டு வந்துர்றோம்" என்றார்.

போனை வைத்து "மை சைல்டு" என்று அவளைக் கட்டிக் கொண்டு அழுதார்.

இரவு பளிச் பளிச்சென்று ப்ளாஷ் போட்டோக்கள் முடிந்தும் ஆனந்த் வீட்டு வாசலில் கூட்டம் குறையவில்லை. கோர் ஆப் டிடெக்டிவ்ஸ் வேன் வந்திருந்தது. பல கோணங்களில் அவர்களும் படம் பிடித்தார்கள். ப்ரபாகர் ராவ் அலமாரியில் உள்ள பைல்களையெல்லாம் புரட்டினார். பேட்டண்ட் அப்ளிகேஷன் பார்ம் ஒன்று, பலவித ரிஸர்ச் பேப்பர்கள், புத்தகங்கள்.

"பெரிய இன்வெண்டர் போலத் தெரிகிறது" என்றார் சங்கர்.

ப்ரபாகர் ராவ் பத்திரிகைக்காரர்கள் போட்டோ எடுப்பதைப் பார்த்து, "உயிரோட இருக்கற போது ஒரு நாளாவது இத்தனை போட்டோ எடுத்திருப்பாங்களா, சந்தேகம்! இது என்னப்பா புதுசாருக்கு?"

சங்கர் ஒரு சிறு பெட்டியிலிருந்து ஒரு சுருளை எடுத்து, "மைக்ரோ ஃபிலிம்ஸ் ஸார்" என்றார்.

ப்ரபாகர் "இண்ட்ரஸ்டிங்! ப்ரிண்ட் போட்டு கொண்டு தரச் சொல்லு. என்ன வெங்கடேஷ், எனிதிங் இண்ட்ரஸ்டிங்?"

வெங்கடேஷ் பாரன்ஸிக் எக்ஸ்பர்ட். ஒரு டுவீரால், சன்னலோரத்தில் கிடந்த துப்பாக்கி குண்டை எடுத்து ப்ரபாகரிடம் காட்டினார்.

"துப்பாக்கி?"

"இங்க எங்கயும் கிடைக்கலை."

வெளியே பேட்டை நாய்கள் அத்தனையும் குலைக்கத் துவங்கின.

அவற்றை 'நீயெல்லாம் நாட்டி' என்பது போல அற்பமாகப் பார்த்துக் கொண்டு, அடர்த்தியான வால்களை ஆட்டிக் கொண்டு, போலீஸ் நாய்கள் வந்தன. முதலில் அந்த இடத்தை முகர்ந்தன.

சடசடவென்று வெளியே சென்றன.

சிறுவர்கள் சூழ ஒரு நாய் வருவதை பக்கத்து வீட்டின் சன்னலிலிருந்து ஜமதக்னி பயத்துடன் பார்த்துக் கொண்டிருந்தார்.

நாய் அவர்கள் வீட்டைச் சுற்றிச் சுற்றி வந்தது. ஜமதக்னி "சூ சூ போ போ" என்று விரட்டினார். மனைவி, "இங்க எதுக்கு வருது?" என்றாள் நடுக்கத்துடன்.

"தெரியலையே."

"அய்யோ! உங்களை அரஸ்ட் பண்ணுவாங்களா? மூக்கை கிடுக்கியால திருகுவாங்களா?"

ஜமதக்னி "ஏன் அப்படி ஒரு ஆசையா உனக்கு?"

"பின்னே ஏன், நாய் நம்ம வீட்டுக்கு வருது?"

"நாயைக் கேளு" என்றார்.

போலீஸ் நாய் காம்பவுண்டுக்கு உள்ளே வந்து இங்குமங்கும் சுற்றி, குழம்பிப் போக, ப்ரபாகர் ராவ் வந்து, "மிஸ்டர் ஜமதக்னி, ஆனந்த் எதாவது பொருள் உங்ககிட்ட சமீபத்தில் கொடுத்தாரா?"

"இல்லை ஸார்."

"நாய் உங்க வீட்டுக்குள்ள நுழையுது?"

"தெரியலை ஸார்."

நாய் வெளியே சென்றது. வீட்டுக் கிணற்றில் எட்டிப் பார்த்தது.

அவர்கள் அதில் டார்ச் அடித்துப் பார்த்தார்கள். கிணற்று விளிம்பில் ஓர் ஓரத்தில் என்னவோ இருப்பதைப் பார்த்தார்கள். சங்கர், "ஸார் லுக்! த கன்" என்றார்.

"இறங்குய்யா."

கிணற்றில் எறியப்பட்ட துப்பாக்கி முழுவதும் விழாமல் தப்பித்து விளிம்பின் நீட்டலில் இருந்தது. அதை இறங்கி பத்திரமாக எடுத்தார்கள்.

ப்ரபாகர் ராவ் நிதானமாக அவரைப் பார்த்தார். "மிஸ்டர் அக்கினேனி!"

"ஜமதக்னி ஸார்."

"ஏதோரு அக்னி. நீங்க ஹைகிரவுண்ட் போலீஸ் ஸ்டேஷனுக்கு வரவேண்டியிருக்கும்."

ஜமதக்னி பயந்து, "ஏன் ஸார்?" என்றார் ஹீனமாக.

ப்ரபாகர் ராவ், "துப்பாக்கி உங்களுதா?"

ஜமதக்னி, "அய்யோ துப்பாக்கியை லைஃப்ல தொட்டுப் பார்த்தது கூட இல்லை ஸார்."

மனைவி, "எந்த முனையிலிருந்து அதச் சுடணும்னே அவருக்குத் தெரியாதுங்க."

"பின்ன எப்படி உங்க வீட்டுக் கிணற்றில் இது கெடக்கு?"

"தெரியாது ஸார்."

"எதுக்கும் ஸ்டேஷன் வந்தே ஆகணும் நீங்க."

மனைவி, "அய்யோ உங்களைத் தூக்கில போடுவாங்களா?" என்று பதறினாள்.

"பயப்படாதிங்கம்மா."

அந்த நீண்ட இரவு ப்ரபாகர் ராவுக்கும் சங்கருக்கும் இன்னும் முடிவடையவில்லை. காலை வரை அவர்கள் வீட்டுக்குப் போகவில்லை.

**ம**று தினம் காலை ஒரு கணவன் இறந்ததையோ ஒரு மனைவி பதறியதையோ கடமை உணர்வு மிக்க போலீஸ் அதிகாரிகள் தூக்கமிழந்ததையோ கவனிக்காமல் பொழுது புலர்ந்தது. பெங்களூரின் டீசல் மூச்சுக்கள் அதிகாலைத் துல்லியத்தை நாசமாக்க, ஆயிரம் ஆரன் குரல்கள் நகர-மக்களுக்குப் பள்ளியெழுச்சி பாட, ஆனந்த் வீட்டு வாசலில் பாரதியும் தந்தையும் ஆட்டோவில் வந்து இறங்கினார்கள். சந்திரசேகர் மகளை அணைத்துக் கொண்டு "டேக் எ டீப் ப்ரெத் மை சைல்டு" என்றார்.

பாரதி தன் நெஞ்சைப் பிடித்துக் கொண்டாள். வாசலில் தயங்கினார்கள். பாரதியின் முகம் விகாரமாக மாறியது.

உள்ளே நுழைந்தாள். பாரதியும் ஆனந்தும் அருகருகே நிற்கும் போட்டோ அவளை வரவேற்றது. அதைப் பார்த்ததும் அவள் உணர்ச்சி பீறிட்டு அழுதாள்.

"வேண்டாம் வேண்டாம்! நான் பார்க்கலை. பார்க்க மாட்டேன்!"

தந்தை அவளை அணைத்து, சமாதானப் படுத்தினார். "பாரதி மனசைத் தேத்திக்கம்மா..."

"நான் போய்டறேன், போய்டறேன். எதுக்கு இருக்கணும்? அவர் போனப்புறம் நான்?"

தந்தை குரல் தழுதழுக்க, "இருக்கணும்மா. உனக்குள்ள வளர்ற குழந்தைக்காகவாவது இருக்கணும்மா..."

ப்ரபாகர் ராவ் ஜீப்பில் வந்து இறங்கினார். உள்ளே



"உங்க பேர் ராமனா இருக்கலாம்; அதுக்காக வீட்டு வாடகை கேட்க வந்தா 'இன்று போய் நாளை வா'ன்னு ஒவ்வொரு தடவையும் சொல்லி அனுப்பறது நல்லாயில்லே!"

– பொன்மலை ஆர். பிரகாஷ்

வந்து, "மிஸஸ் ஆனந்த், ஐ எம் எக்ஸ்ட்ரீம்லி ஸாரி. இந்த துக்க சமயத்தில் உங்களைக் கேள்வி கேட்டு தொந்தரவு செய்ய விரும்பலை. நாங்க, எப்ப உங்களைக் கேள்வி கேட்க வரலாம்னு சொல்லுங்க. அப்ப வரோம்."

பாரதி தந்தையைப் பார்க்க...

"துக்கம் தணிய ரெண்டு நாளாவது ஆகும் ஸார்" என்றார்.

பாரதி, "முன்னாவும் வந்துரட்டுமே" என்றாள் மெல்லிய குரலில். கண்ணாடிப் பாத்திரம் போல அபத்திரமாகத் தோன்றினாள். நல்ல உயரம். சிறிய மார்பு. இருமுறை போர்த்திய ரவிக்கை விளிம்பு தெரியும் சன்னமான ஷிபான் புடைவை. கன்னங்களில் கண்ணீர்ச் சுவடு. எல்லாவற்றையும் துறந்து, மறந்து அவளை அணைத்து தலையைத் தடவி ஆறுதல் தர வேண்டும் போல இருந்தது சங்கருக்கு. ப்ரபாகர் ராவ், "முன்னா யாரு?" என்றார்.

தந்தை, "என்னுடைய நெவ்யூ. பெங்களூரில்தான் இருக்கான்."

(தொடரும்)

விலைவாசி உயர்வு

அடப்பாவமே,
அந்தம்மா
முன்னேற
நாமே
படி அமைச்சுக்
கொடுத்திருக்
கோமே...



1998 ஆகஸ்ட் 9
வெகுதான்ய ஆடி 24
மலர் : 57
இதழ் : 2

கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



# சரிகாவின் மரணம் — காரணம் என்ன?

ராகிங் எவ்வளவு கொடூரமான எல்லைகளுக்குப் போக முடியும் என்பதை உணர்ந்து, அதிர்ந்து, விழித்துக் கொள்ள ஒரு நாவரசை நாம் இழக்க வேண்டியிருந்தது.

அதே போல்தான் ஈவ் டீசிங் எத்தனை விபரீதமாய் முடியக்கூடும் என்பதைப் புரிந்து கொள்ள இருபது வயது சரிகா ஷாவை பலிகொடுக்க நேர்ந்திருக்கிறது.

இந்த இரு சம்பவங்களுக்குப் பிறகும் அரசு உடனே செயல்பட்டது. ராகிங் தடைச் சட்டத்தைப் புகுத்தியது; ஈவ் டீசிங் தடைச் சட்டம் விரைவில் வரவிருக்கிறது.

இந்தச் சட்டங்களினால் ஓரளவு பலன் கிடைக்கும்; முழுப் பலன் கிடைக்க சட்டம் தவிர வேறு திசைகளிலும் நம் கவனம் திரும்ப வேண்டும்.

இளமைப் பருவம் என்பது தனக்கே உரிய குறும்பும் குதூகலமும் நிறைந்தது. எதிரினத் தவரிடம் ஈர்ப்பும் ஈடுபாடும் கொள்வதும் இப்பருவத்தின் இயற்கையான நிகழ்வுகளே.

இந்தக் காலகட்டத்தில் மாணவர்களுக்குத் தோழமை கலந்த வழிகாட்டலும் நெறிப்படுத்துதலும் தேவை.

கல்லூரி ஆசிரியர்களின் ஊதிய விகிதத்தைச் சமீபத்தில் கணிசமாக உயர்த்தியிருக்கிறது மத்திய அரசு. இதனால் யூ.ஜி.சி. விகிதப்படி ஊதியம் பெறும் எல்லா கல்லூரி ஆசிரியர் களுமே ஆதாயம் அடைவார்கள்.

ஆதாயங்களைப் பெறும் ஆசிரியர்கள் பொறுப்புடன் இயங்கினார்களா? இயங்குவார்களா? என்பதுதான் கேள்வி.




நமது கல்வித் திட்டமும் சரி, பாடம் கற்பிக்கும் முறைகளும் சரி. பரீட்சைகளையே இலக்காகக் கொண்டு செயல்படுகின்றன. பாஸ் பண்ணுவதும் மதிப்பெண் வாங்குவதும் மட்டுமே வெற்றியை நிர்ணயிக்கும்போது, முழுமையான மன வளர்ச்சி என்பது கவனம் பெறாமல் போய் விடுகிறது.

பள்ளிப் பருவம் தொடங்கியே மாணவர்களின் மனவள மேம்பாட்டுக்கான நேரமும் கவனமும் ஒதுக்கபபட வேண்டும். பண்பாடு, உயர்தரமான கலையுணர்வு, நல்ல மதிப்பீடுகள் போன்றவை பிஞ்சு உள்ளங்களிலேயே விதைக்கப்பட வேண்டும்.

சரித்திரமும் விஞ்ஞானமும் பூகோளமும் மொழியும் இலக்கியமும் மதிப்பெண் பெறுவதற்கான மார்க்கங்கள் மட்டுமல்ல; வாழ்க்கை முறைகளை, நெறிகளைக் கற்றுத் தரும் ஜீவிய பாடங்கள். கற்றதை வாழ்க்கையோடு இணைத்துப் பார்க்கப் பழக வேண்டும். இதற்கு ஆசிரியர்கள் சொல்லாலும் செயலாலும் தங்கள் சொந்த நடத்தையாலும் முன்னுதாரணமாக விளங்க வேண்டும். நமது பள்ளி ஆசிரியர்கள் அப்படி விளங்குவார்களா?... ஆசிரியர்கள் நியமனத்தில் நடக்கிற ஊழல், அக்கிரமங்களைப் பார்க்கையில் பள்ளிகளின் தரம் குறித்து நம்பிக்கை ஏற்பட மறுக்கிறது.

இத்தகைய பள்ளிகளில் படித்து, கல்லூரிகளை அடையும் மாணவர்கள், அங்குள்ள ஆசிரியர்களுக்கும் சவாலாகவே இருக்கிறார்கள். மாணவ – ஆசிரிய உறவு விரோத பாவத்துடன்தான் தொடங்குகிறது. இதை நட்புறவாக மாற்றி அமைப்பதுடன், இளைஞர்களுக்குத் தங்கள் உணர்வுகளை அடையாளம் காணவும் கல்லூரி ஆசிரியர்கள் உதவ வேண்டும். உணர்வுகளை நெறிப்படுத்தவும் திருத்திக் கொள்ளவும் துணைபுரிய வேண்டும்.

இந்த அரவணைப்பும் தோழமையும் கிடைக்காததால் தறிகெட்டுப் போகிற இளைஞர்கள் ஆண் – பெண் இருபாலரிடையேயும் உண்டு. இந்த துரதிர்ஷ்டமான நிலைமை நீடிக்கிற வரையில் 'ஈவ் டீசிங்', 'ராகிங்' என்ற பெயரில் அசுரத்தனமான அநாகரிகங்களும் கொடூரங்




களும் அரங்கேறத்தான் செய்யும். சட்டம் இவற்றைக் கட்டுப்படுத்தலாம்; ஆனால் ஒழிக்க முடியாது. மனவளத்தைச் சட்டத்தால் பெருக்க முடியாது.

சரிகா ஷா சம்பவத்தில் ஈடுபட்ட இளைஞர்கள், கல்லூரி மாணவர்களே அல்ல; கட்சிக்காரர்கள் என்று தெரியவந்திருக்கிறது. ஆக, கல்லூரி மாணவர்கள்தான் ராகிங், ஈவ் டீசிங் ஆகியவற்றில் ஈடுபடுவார்கள் என்பதில்லை; அதற்கு அப்பாற்பட்ட இளைஞர்களும் இப்படியெல்லாம் நடந்து கொள்கிறார்கள். படித்தவர்கள், படிக்காதவர்கள், கொஞ்சம் படித்தவர்கள் என்ற பாகுபாடு இன்றி அனைவரையும் இன்றைய சினிமாவின் கொச்சைத்தனமும், பத்திரிகை, டீ.வி. நிகழ்ச்சிகளின் ரசனைக்குறைவான மலினங்களும் மிக அதிகமாக பாதிக்கின்றன. பெண்களை வெறும் போகப் பொருளாக மட்டுமே சித்திரிப்பதில் சினிமாவோடு பத்திரிகையும் டீ.வி.யும் போட்டி போட ஆரம்பித்து விட்டன. காதல் காட்சி என்ற பெயரில் ஆபாசம் அரங்கேறுகிறது; 'ஈவ் டீசிங்' செய்வது ஹீரோ குணமாக்கப்படுகிறது! சமுதாயப் பிரச்னை, புலனாய்வு ரிப்போர்ட், உண்மைக் கதை என்ற போர்வைகளில் வக்கிர உணர்வுகள் தூண்டப்படுகின்றன. பத்திரிகைகளில் இடம்பெறும் சினிமா செய்திகளிலும் கற்பனை உரையாடல்களிலும் பெண்களைக் கேவலப்படுத்துவதற்கொரு எல்லையே இல்லாமல் போய் விட்டது.

சரிகா ஷாவின் மரணம் என்னவோ விபத்துதான். ஆனால் விபத்துக்குக் காரணம் சாலை விதி மீறல் அல்ல; நன்நடத்தை மீறல்! இந்தக் கேவலத்துக்கு இன்றைய மீடியா உலகமும் அதை ஆதரிக்கும் சமுதாயமும் கூட பொறுப்பு ஏற்கத்தான் வேண்டும்.

ஆசிரியர்களும் கல்வியாளர்களும் பெருமுயற்சி செய்து, இளைய தலைமுறையை சான்று உயர்த்த முன்வந்தால் கூட, சினிமா – பத்திரிகை – டீவியின் மும்முனைத் தாக்குதல் அவர்களை முழும் சறுக்கச் செய்துவிடும்!

சம்பந்தப்பட்ட அனைவருமே மனசாட்சிக்குக் காதுகொடுக்க வேண்டிய நேரம் இது.

**செ**ன்னை திருவல்லிக்கேணி பகுதியில் மிகவும் பிரபலமானவை என்.கே.டி. தேசிய பெண்கள் மேல்நிலைப்பள்ளி, என்.கே.டி. தேசிய பெண்கள் ஆசிரியை பயிற்சிப் பள்ளி மற்றும் ஆண்கள் உயர்நிலைப் பள்ளி ஆகியன. இவற்றை நடத்துவது என்.கே. திருமலாச்சாரியார் தேசிய கல்விச் சங்கம். ஐஸ் அவுஸ் பகுதியில் இருக்கும் இந்தக் கல்வி நிலையங்களில் மூவாயிரத்துக்கும் மேற்பட்ட மாணவ, மாணவிகள் படிக்கிறார்கள்.

சரோஜினி வரதப்பன் தலைமையில் உள்ள நிர்வாகக் கமிட்டிக்கு பள்ளியை நடத்த உரிமை கிடையாதென்று, லோக்கல் அரசியல் மற்றும் மீனவப் பிரமுகர் ஜெ. பாலன் தலைமையில் உள்ள மற்றொரு கமிட்டி, அதிரடியாகப் பெண்கள் பள்ளிக்குள் நுழைய, ஒரே குழப்பம். ''இந்தப் போட்டியில் தமது கை ஓங்க வேண்டுமென்பதற்காக அடியாட்களை பள்ளியில் நிரந்தரமாகத் தங்க வைத்துக் கொண்டிருக்கிறார் பாலன். ஆசிரியை பயிற்சிப் பள்ளியில் உள்ள ஹாஸ்டலில் பெண்கள் தங்கியிருக்கிறார்கள்; பயமாக இருக்கிறது!'' என்கிறார்கள் பெற்றோர்கள்.

''பெரிய பெரிய மனிதர்களின் ஆதரவில் வளர்ந்தது இந்தப் பள்ளி. நேரு இங்கு வந்திருக்கிறார். இப்படிப்பட்ட பெருமைக்குரிய பள்ளி சிதறிப் போய்விடுமோ என்ற கவலை இப்போது வந்து விட்டது; குறிப்பாக அரசியல்வாதிகள் உள்ளே நுழைந்திருப்பது வயிற்றில் புளியைக் கரைக்கிறது. பார்த்தசாரதி கோயிலால் நிரந்தர குத்தகைக்குக் கொடுக்கப்பட்ட நிலத்தில்தான் பள்ளிகள் இயங்குகின்றன. இந்த நிலத்தின் இன்றைய மதிப்பு பல கோடி ரூபாய். அரசியல்வாதிகளும் சுயநலம் கொண்டவர்களும் இங்கே நிர்வகிக்க வந்து விட்டால் காலப் போக்கில் பள்ளிகளை மூடிவிட்டு, ரியல் எஸ்டேட்டாக மாற்றி, ஃபிளாட்டுகள் கட்டி விற்று விடுவார்களோ என்று பயமாக இருக்கிறது!'' என்று நம்மிடம் சொன்னார் ஒரு மாணவியின் தந்தை.

''பாலன் தலைமையில் உள்ள கமிட்டி அதிரடியாக தலைமை ஆசிரியையை மாற்றி விட்டதால், அதை எதிர்த்து மற்ற ஆசிரியைகள் ஸ்டிரைக் செய்ய, ஏகக் குழப்பம்!'' என்றார்

# கோஷ்டிச் சண்டையில் ஒரு

**என்**.கே. திருமலாச்சாரியார் என்ற வழக்கறிஞரின் முயற்சியில் 1950ல் துவக்கப்பட்டவை இந்தக் கல்வி நிலையங்கள். சி.பி. ராமஸ்வாமி அய்யர், டாக்டர் திருமூர்த்தி ஆகியோர் திருமலைச்சாமிக்கு துவக்க கட்டத்தில் மிகவும் உதவியவர்கள். ராஜாஜி மூவாயிரம் ரூபாய் நன்கொடை கொடுத்திருக்கிறார். இது தவிர, அமரர் கல்கியின் முயற்சியில், எம்.எஸ். அவர்களது கச்சேரியின் மூலம் பள்ளியின் வளர்ச்சிக்கு நிதி திரட்டப்பட்டது. எஸ்.எஸ். வாசன், என்.எஸ். கிருஷ்ணன், தங்கவேலு, எம்.ஜி.ஆர் ஆகியோரும் பள்ளியின் விரிவாக்கத்துக்கு உதவியவர்கள்.



• பாலன்

அவர்.

இந்த விவகாரத்தின் பின்னணி என்னவென்று தெரிந்து கொள்ள சரோஜினி வரதப்பன் கமிட்டி பிரமுகர் ஒரு சிலரைச் சந்தித்தோம். பெயர் சொல்லப் பயப்படுகிறார்கள் அவர்கள்.

''என்.ஆர். விஸ்வநாதன் என்று ஒருவர் நிர்வாகக் கமிட்டியின் செயலாளராக இருந்து வந்தார். அவருக்கு வயதாகி விட்டதால், வேறு ஒருவரைச் செயலாளராக 1993ல் தேர்வு செய்தோம். 'என்னை நீக்கியது செல்லாது' என்று அவர் கோர்ட்டுக்குச் செல்ல, அப்போதுதான் சர்ச்சை துவங்கியது. பதிவு செய்யப்பட்ட ஒரு சங்கத்தின் சார்பில் நடத்தப்பட்டு வருபவை இந்தப் பள்ளிகள். பதிவாளரின் முன் அனுமதி மற்றும் ஆலோசனை இல்லாமல் நிர்வாகக் கமிட்டி தேர்



• என்.கே.டி. தேசிய பெண்கள் மேல்நிலைப் பள்ளி

# படும் பாடும் பள்ளி!

தல் நடத்தக் கூடாது. ஆனால் தம்மை நீக்கி விட்டார்களே என்ற எரிச்சலில் புதிய நிர்வாகக் கமிட்டியை நியமிக்க முற்பட்டார் விஸ்வநாதன். 'விஸ்வநாதன் இது போன்ற நடவடிக்கைகளில் ஈடுபடக் கூடாது' என்று உயர்நீதிமன்றம் தடை விதித்தது. ஆனால் அதையும் மீறி நிர்வாகக் கமிட்டி என்ற ஒன்றை ஜெ. பாலன் தலைமையில் நியமித்தார் விஸ்வநாதன். அது செல்லாது என்று சிட்டி சிவில் கோர்ட் தீர்ப்பளித்தது!

"பின்னர் சட்டபூர்வமாக அமைக்கப்பட்ட எங்கள் நிர்வாகக் கமிட்டி மீது விஸ்வநாதன் சிட்டி சிவில் கோர்ட்டில் கேஸ் போட்டார். இந்தப் பிரச்னையில் ஒரு நிரந்தரமான தீர்வைப் பெற, உயர்நீதிமன்றத்தில் முழு விவரங்கள் அடங்கிய மனு ஒன்றை பாலன் தலைமையிலான கமிட்டிக்கு எதிராக நாங்கள் தாக்கல் செய்தோம். அந்த வழக்கு 17.3.98 அன்று தள்ளுபடி செய்யப்பட்டது. இப்போது மீண்டும் மனு தாக்கல் செய்துள்ளோம். ஆனால் பாலன் தலைமையில் உள்ள கமிட்டி எந்த அடிப்படையில், இப்போது பள்ளியை நிர்வகித்துக் கொண்டிருக்கிறது என்றுதான் தெரியவில்லை. கல்வி மற்றும் போலீஸ் துறைகளிடம் இது பற்றி நாங்கள் புகார் செய்தால், 'நீங்கள் போய் கோர்ட்டு உத்தரவு வாங்கி வாருங்கள்' என்று எங்களைத்தான் கேட்கிறார்கள். சட்டத்திற்குப் புறம்பாக வந்து பள்ளியை ஆக்ரமித்துள்ள அவர்களை வெளியேற்றத் தயங்குகிறார்கள்.

"இதற்கிடையில் 10.6.98 அன்று விஸ்வநாதன் இறந்து விட்டார். எனவே, பாலன் தலைமையில் கமிட்டி உள்ளதாகச் சொல்வதே அர்த்தமற்றது. ஆனால் விஸ்வநாதன் இறந்தபின் அவரது வக்கீல் எஸ்.கே. சுந்தரத்தின் மனைவி சகுந்தலா சுந்தரம் என்பவர், தாம்தான் செயலாளர் என்று பள்ளிக்கு வருகிறார். தினசரி, இவர்கள் ஆசிரியைகளை மிரட்டுவதும் முறைகேடான உத்தரவுகளைப் போடுவதுமாக இருக்கிறார்கள். கோர்ட்டு உத்தரவை மீறி ஆசிரியை பயிற்சிப் பள்ளி பிரின்ஸிபாலை நீக்கியிருக்கிறார்கள். முதல்வருக்கு முழு விவரத்தைச் சொல்லி ஃபேக்ஸ் அனுப்பினோம். கல்வியமைச்சர் அன்பழகனை சரோஜினி வரதப்பன் நேரில் பார்த்து விளக்கினார். ஒரு பயனுமில்லை. ஒருமுறை நாங்கள் நேரிடையாக பாலனிடம் விளக்கம் கேட்க பள்ளிக்குச் சென்றபோது, சொல்லவே கூசும் அளவுக்கு மோசமான

வார்த்தைகளால் எங்களைத் திட்டி அனுப்பினார்கள். அடியாட்கள் வேறு சுற்றியிருந்தார்கள். நாங்கள் ஏதும் செய்ய முடியாமல் திரும்ப வேண்டியதாயிற்று" என்று சொன்னார் அந்தப் பிரமுகர். இப்போது மாணவர்கள் சேர்க்கை நேரமாதலால் ஆசிரியை பயிற்சி ஸீட்டுக்கு ஏகமாய் வாங்குவதாக பாலன் கமிட்டி மீது குற்றம் சாட்டினார் அவர்.

பாலன் தரப்பில் என்ன சொல்கிறார்கள் என்று அறிய அவரைச் சந்திக்க பள்ளிக்குச் சென்றோம். பள்ளியின் காவலர்களைப் போல் இல்லாமல் சிலர் ஆங்காங்கே நாற்காலிகளில் உட்கார்ந்து கண்காணித்துக் கொண்டிருந்தார்கள். பாலனின் டாடா சுமோ கம்பீரமாக அலுவலக அறையின் வாசலில் நின்றிருந்தது. பள்ளியின் 'செயலாளர்' சகுந்தலா சுந்தரம் அமர்ந்திருக்க, பக்கத்தில் பாலன் இருந்தார்.

"நான் அ.இ.அ.தி.மு.க.வில் இருந்தேன். மீன் வள வாரியத்தில் தலைவராகவும் இருந்திருக்கிறேன். நான் இப்போது எந்த அரசியல் கட்சியிலும் இல்லை. இந்த ஏரியாவாசி. பள்ளி வளர்ச்சிக்குக் கடந்த 30 வருட காலத்தில் நானும் எவ்வளவோ செய்திருக்கிறேன்.

"ஆனால் சரோஜினி வரதப்பன் தலைமையிலுள்ளவர்கள் இங்கு வருவதே கிடையாது. பிரின்ஸிபாலும் தலைமை ஆசிரியர்களும்தான் கோப்புகளையும் ரிஜிஸ்தர்களையும் தூக்கிக் கொண்டு அவர்கள் இருக்கும் இடத்திற்கு ஓடுவார்கள். 17.3.98 அன்று உயர்நீதிமன்றம் சொன்ன தீர்ப்பின் அடிப்படையில்தான் நாங்கள் இப்போது நிர்வகித்துக் கொண்டிருக்கிறோம். அதை எதிர்த்துக் கோர்ட்டுக்குப் போய் அவர்களுக்குச் சாதகமாகத் தீர்ப்பு வந்தால் நாங்கள் வெளியேறி விடுவோம். இந்த உயர்நீதி மன்றத் தீர்ப்புக்கு முன்னர், அவர்களுக்குச் சாதகமான தீர்ப்புகள் இருந்தபோது நாங்கள் தலையிடவே இல்லை. திருமலாச்சாரியார் நூற்றாண்டு விழாவைக்கூட அவர்கள்தான் கொண்டாடினார்கள். விஸ்வநாதன் திருமலாச்சாரியார் அவர்களால் நியமிக்கப்பட்ட ஆயுள் உறுப்பினர். அவரை நீக்கவே முடியாது. அவருக்கு நிர்வாகக் கமிட்டி போட உரிமை உண்டு. விஸ்வநாதன் இறப்பதற்கு முன், சகுந்தலா சுந்தரத்தைச் செயலாளராக நியமித்தார். 'அவர்களுக்கு' எந்தவிதமான அத்தாரிட்டியும் இல்லாததால்தான் கல்வி இலாகாவும், போலீஸும் இந்த விவகாரத்தில் அவர்களுக்கு ஆதரவாக இல்லை. அதுதான் உண்மை.

"ஆசிரியை பயிற்சிப் பள்ளி மற்றும் மாணவியர் சேர்க்கை, கல்வி இலாகாவின் மேற்பார்வையில் தகுதி அடிப்படையில்தான் நடக்கிறது. பள்ளியில் ஆண் வேலையாட்களே இருக்கக் கூடாதா? அடியாட்கள் யாரும் இங்கு இல்லை. நான் ஒன்றும் 'தாதா' கிடையாது. என் மீது அரசியல் வழக்குகள் தவிர வேறு எந்த வழக்குகளும் கிடையாது! ஏஸி அறையில் உட்கார்ந்து கொண்டு, பந்தா செய்து கொண்டு இருந்தவர்களுக்கு இந்த சாமான்யவன் நிர்வகிப்பது பொறுக்கவில்லை. மீண்டும் சொல்கிறேன். உயர்நீதிமன்றத் தீர்ப்பை எதிர்த்துக் கோர்ட்டுக்குச் சென்று, அவர்களுக்குச் சாதகமான தீர்ப்பு வாங்கி வரட்டும். அப்புறம் நாங்கள் உள்ளே வர மாட்டோம். தலைமை ஆசிரியையிடம் அக்கவுண்ட்ஸ் கேட்டால் மற்ற ஆசிரியைகளை எங்களுக்கு எதிராகத் தூண்டி விடுகிறார். பயிற்சிப் பள்ளி பிரின்ஸிபால் பதவிக்காலம் முடிந்து விட்டது. அதன்பின் அதிக சம்பளம் கொடுத்து நீட்டிப்பது சரி வராது என்பதால் அவருக்கு அடுத்தபடியாக உள்ளவரை நியமித்து இருக்கிறோம். எந்த முறைகேடும் கிடையாது!" என்று சொன்னார் பாலன்.

பள்ளியை நிர்வகிக்கும் விவகாரத்தில் இரு தரப்பினரிடையே ஏற்பட்டுள்ள மோதல் காரணமாக, பள்ளியின் தினசரி செயல்பாடுகள் மந்தமாக இருக்கின்றன. "யார் நிர்வகிப்பது என்பதை இறுதியாகத் தீர்மானிப்பது வரை, அரசே ஸ்பெஷல் ஆபீஸரைப் போட்டு நிர்வகிப்பதுதான் சரியாக வரும். தமிழக அரசு கொஞ்சம்கூட தாமதிக்காமல், இந்தப் புகழ் பெற்ற பள்ளியின் விவகாரத்தில் தலையிட்டு ஸ்பெஷல் ஆபீஸரை நியமிக்க வேண்டும். இல்லையேல் பள்ளியின் எதிர்காலமே கேள்விக்குறியாகி விடும்!" என்று வருத்தத்துடன் சொல்கிறார்கள் பெற்றோர்கள். ○

— ப்ரியன்

படங்கள்: யோகா

# சத்துணவில் விஷமா? கலந்தது எப்படி?

**— ஒரு நேரடி ரிப்போர்ட்**

படத்தில் பள்ளிக் குழந்தைகள் விழுந்து விழுந்து படித்துக் கொண்டிருப்பது பாடத்தையல்ல. தங்களைப் பற்றி பத்திரிகையில் வந்த செய்திகளைத்தான். அப்படியென்ன செய்தி என்கிறீர்களா...?

'சத்துணவில் வழங்கப்படும் முட்டையில் விஷம்; ஆயிரக்கணக்கான குழந்தைகள் வாந்தி மயக்கம்; ஆஸ்பத்திரிகளில் அனுமதி! சத்துணவைப் புறக்கணிக்கப் போகிறார்களா மக்கள்...?' - என்றெல்லாம் கட்டம் கட்டி - தலைப்புச் செய்திக்குள் அடங்கிப் போன பள்ளிகளில் 'கோவை அருகே பேரூர் - காளம்பாளையம் நடுநிலைப் பள்ளியும் ஒன்று!



சுமார் 160 குழந்தைகள் வாந்தி மயக்கம் காரணமாக அரசு மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்டிருப்பதாகவும், தாய் - தந்தையர் தங்களுக்கு நியாயம் வழங்க வேண்டி, இது சம்பந்தப்பட்டவர்களின் மீது நடவடிக்கை எடுக்கக் கோரி அத் தொகுதி எம்.எல்.ஏவை கேரோ செய்ததாகவும் செய்திகள்...

நிலைமை என்னவென்று பார்ப்பதற்காக சம்பவம் நடந்த 3-வது நாள் (18.7.98) பள்ளிக்குள் அடியெடுத்து வைத்தோம். சனிக்கிழமை விடுமுறை நாள் என்றுகூட இல்லாமல் குழந்தைகள் அத்தனை பேரும் ஆஜர். அரசுப் பள்ளிதானா என்று நாமே சந்தேகிக்கிற மாதிரி உள்ளே ஒழுங்கு, சுத்தம்! (அரசு, அதிகாரிகள் திடீர் விசிட் வரலாம் எனும் முன்னெச்சரிக்கையோ...?)

"எனக்கு எம் பிறந்த நாள் எப்பவே மறந்து போச்சு. கல்யாண நாளைக்கூட இப்பவெல்லாம் கவனிக்கிறதில்லே. ஆனா ஜூலை 16-ம் நாளை மட்டும் இனி மறக்கவே முடியாது சார்! அன்னைக்கு இங்கே பட்ட அவலம், அவஸ்தையை யாருமே படக் கூடாது சார்...!"

- நாத் தழுதழுப்போடு சொன்ன ஹெட்மாஸ்டருக்கு 'ரிடையர்மெண்ட்' வயசு.

"முட்டையிலதான் விஷமா? கன்ஃபார்ம் பண்ணீட்டீங்களா...?"

"முட்டையெல்லாம் அன்னைக்குக் கொடுக்கவேயில்லை சார்...' முள்ளங்கி - தண்டுக்கீரை' சாம்பார் வச்சு வெறும் சாதம்தான் போட்டோம். வேற ஒண்ணுமே போடவில்லை!" - என்றார் அவர்.

அந்த சாம்பார் சாதத்தைக்கூட முதலில் சத்துணவுக் கூட ஆயாக்கள் சாப்பிட்டுப் பார்த்த பின்னாடிதான் குழந்தைகளுக்கு பரிமாறியிருக்கின்றனர். இதுதான் வழக்கம். ரூல்ஸூம் கூடவாம். சாப்பிட்டு இரண்டு மணி நேரம் கழித்து ஒரு மாணவன்

வாந்தியெடுக்க, சாதாரணமாக நினைத்து விட்டு விட்டனர். அப்புறம் இரண்டு பேர்- அதில் ஒருவன் மட்டும் கோழையாய் - ஒரு மாதிரியாய் எடுக்கவும்தான் பயந்து போய் விட்டனர் ஆசிரியர்கள்.

சாப்பிட்டதில் ஏதோ சேரக் கூடாதது சேர்ந்து விட்டது என எண்ணி, உடனடியாக வெளியிலிருந்து டெம்போவை அழைத்து வந்து, மூன்று பேரை மட்டும் கூட்டிப் போவதை விட ஒட்டு மொத்தக் குழந்தைகளையும் அழைத்துப் போவது நல்லதென்று முடிவெடுத்திருக்கின்றனர். முதலில் 32 பேர். பிறகு அடுத்த இரண்டு டெம்போக்களில் மீதி மொத்தமும். அதைத் தொடர்ந்து, பெற்றோர்கள் மத்தியில் விஷயம் புரியாமல் ஏக களேபரம்.

"அனைவரையும் கூட்டிப் போனது, ஒரு ஸேஃப்டிக்காகத்தான். அதுவும் அரசு மருத்துவமனைக்குப் போகக் காரணம் உடனடி நிவாரணம் கிடைக்கத்தான். மத்தபடி இன்னய்க்கு அத்தனை பேரும் ஸ்கூலுக்கு வந்திருக்காங்க பாருங்க...!" - என்று அழைத்து போய் நமக்குக் காண்பித்தார் ஹெச்.எம்.

''பாருங்க... இவன்தான் முதல்ல வாந்தியெடுத்தவன்...!

"இவன்தான் அடுத்தபடியா வாந்தியெடுத்து பயமுறுத்தி எல்லோருமே ஆஸ்பத்திரிக்குப் போக வழி செய்தவன்...!" - என்று ஒவ்வொருவரையும் அறிமுகப்படுத்தினார்.

''ஆஸ்பத்திரியிலயும் சரி. இங்கே பொதுமக்களும் சரி, நல்ல ஒத்துழைப்பு சார். யாரும் ஏடாகூடமா கேள்வி கேட்டு எங்ககிட்ட சண்டைக்கு வரவேயில்லை!" என்கின்றனர் பள்ளி ஆசிரியர்கள் மொத்தமும்.

சம்பவ தினத்தன்று முட்டையும் விநியோகிக்கப்படவில்லை. தண்ணீரையும் சோதித்தாகி விட்டது. அதிலும் எந்த நெருடலும் இல்லை. சாப்பாடும் சாம்பாரும் (செய்தவுடனே தனியே பாட்டிலில் எடுத்து வைத்து விடுவது வழக்கம்) பரிசோதனைக்கு அனுப்பப்பட்டுள்ளது. அந்த ரிசல்ட் வரை சத்துணவு நிறுத்தி வைக்கப்பட்டுள்ளதாகத் தகவல்.

இச்சம்பவம் தொடர்பாக, இதில் முழுக்க முழுக்க 'இன்வால்வ்' ஆகி உதவிகள் புரிந்த தித்திபாளையம் பஞ்சாயத்தின் துணைத் தலைவர் கா. பழனிச்சாமி (சுயேச்சை)யிடம் வினவினோம். அவர் முழுக்க முழுக்க ஆத்திக மணம் கமழப் பேசினார்.

"சத்துணவுல முட்டைங்கறதே ஆகாது சார்..." என்று ஆரம்பித்தவர், "சார்... இங்கே இது விஷயமா பலரும் பலவிதமாப் பேசிக்குவாங்க. கடவுள் ஒருத்தன்தான் இங்கே எங்க குழந்தைகளைக் காப்பாத்தியிருக்கான்னு சொல்லுவேன். சத்துணவு சமைச்சுப் போடறவங்க, வாத்யார்க மேல எந்தத் தப்பும் இல்லே. பொதுவா விவசாயிக பயிருக்கு மருந்தடிச்சா ஒரு நா ரெண்டு நா கழிச்சுத்தான் காய்கறிகளை அறுவடை செய்து மார்க்கெட்டுக்கு விடணும். இப்பவெல்லாம் பெரும்பாலும் விவசாயிக மருந்தடிச்ச நாளே மார்க்கெட்டுக்கும் விட்டுர்றாங்க. சத்துணவுல போட்ட கிரையோ, காயோ அப்படி வந்திருக்கணும். அதுல வந்த கோளாறுதான் இதுன்னு நினைக்கிறேன். இதை எப்படி உறுதியாச் சொல்றேன்னா நானும் ஒரு விவசாயி...!" என்று முடித்தார். அனைவரும் கவனம் செலுத்த வேண்டிய விஷயம்.

கட்டுரை, படம்: **கா.சு. வேலாயுதன்**

---


1


2


3

ஒவ்வொரு கல்லூரி மாணவ, மாணவியருக்கும் தங்கள் சுதந்தரத்தில் கைவைக்கிற கல்லூரி முதல்வர் மீதும், கல்லூரி நிர்வாகம் மீதும் எக்கச்சக்க கோபம் இருக்கும். 'உங்கள் ஆசைகள், குமுறல்கள்தான் என்ன'வென்று நேரடியாகக் கேட்காமல், இந்தக் கல்லூரியின் முதல்வராக நீங்கள் இருந்தால் என்னவெல்லாம் செய்வீர்கள்?' என்று கேட்டோம்.

# பெண்களுக்கு

எந்தக் கல்லூரி மாணவர்களிடம்? புகழ்பெற்ற (சென்னை) லயோலா கல்லூரி மாணவர்களிடம்தான்!

1. ஆனந்த் (பி.எஸ்ஸி., கணிதம்) : இந்தக் கல்லூரி சுயாட்சி பெற்றிருப்பதால் பாடமுறைகளை மாற்றுவேன். பிளஸ் டூ வரைக்கும் மாஞ்சு மாஞ்சு லாங்க்வேஜ் எல்லாம் படிச்சாச்சே. அப்புறம் காலேஜ்ல அது எதுக்கு! அதுக்குப் பதில் செக்ஸ் எஜுகேஷன், எயிட்ஸ் பற்றிய விழிப்புணர்வு எல்லாம் சொல்லிக் கொடுக்கும்படி பாடத்தை மாத்திடுவேன்.

2. விமல் பெரிய நாயகம் : (பி.எஸ்ஸி., கணிதம்) : முதல்ல நான் இந்த காலேஜை கோ-எஜுகேஷனா மாத்திடுவேன். பெண்களெல்லாம் நல்லா படிக்கிறாங்களேன்னு பசங்களும் நல்லாப் படிப்பாங்க.

3. சுந்தரம் : (பிஎஸ்ஸி ஃபிஸிக்ஸ்) : சும்மா வெறும் தியரியா மட்டுமே படிச்சுட்டுப் போறதில எனக்கு உடன்பாடே இல்லை. படிக்கிற படிப்பு வாழ்க்கைக்கு உபயோகப்படற மாதிரி... உதாரணமா, இயற்பியல் படிக்கிறாங்கன்னா, ரேடியோ, டீவி ரிப்பேர் மாதிரி சொல்லிக் கொடுக்க வைப்பேன்!


4


5


6


7

4. ஆனந்தராஜ் (பி.எஸ்ஸி., ஃபிஸிக்ஸ்) : வெளியே இருந்து நிறைய ஃபண்ட்ஸ் வாங்கி ஏழை மாணவர்களுக்குச் செலவு செய்வேன். எல்லா மாணவர்களுக்குமே கம்ப்யூட்டர் பற்றிய அடிப்படையையாவது சொல்லிக் கொடுக்க வைப்பேன்.

5. பிரான்ஸிஸ் (பி.எஸ்ஸி., புள்ளியியல்) : பையன்கள் எல்லோரும் வருப்புக்கு ஒழுங்கா வரணும்னா அதுக்கு


9


8

# ஐம்பது சதம்!

ஒரே வழி, காலேஜில் மாணவிகளுக்கும் அட்மிஷன் கொடுக்கிறதுதான். அதைச் செய்வேன்.

**6. ராஜ்குமார் (பி.காம்.) :** காலேஜ் ஹாஸ்டலில் இருக்கிற டீ.வி.க்கு கேபிள் கனெக்‌ஷன் குடுக்கிறதுதான் முதல் வேலை. மாணவர்கள் ஈஎஸ்பிஎன், டிஸ்கவரி சேனல், எல்லாம் பார்க்காம எவ்வளவு நாலெட்ஜ் வீணாப் போயிட்டிருக்கு!

**7. ராம்சந்தர் (பி.காம்.) :** நான் பிரின்ஸிபாலானால் ஸ்டூடன்ஸ் எப்ப வேணாலும் என்னை வந்து பார்க்கிற மாதிரி பண்ணிடுவேன். அதே மாதிரி புரொபஸர் - மாணவர்களுக்கிடையே நல்ல நட்பு வரச் செய்வேன்.



10



11



12



13

**8. கிருஷ்ணமூர்த்தி (பி.ஏ. சோஷியாலஜி) :** மாணவர்கள் அட்மிஷன்ல யாரோட ரெக்கமன்டேஷனையும் கேட்க மாட்டேன். அட்மிஷன் எல்லாம் மதிப்பெண் அடிப்படையிலதான் இருக்கணும்பேன்.



14



15

**9. செந்தில் பாலாஜி (பி.காம்.) :** பாதிக்குப் பாதி பொண்ணுங்களுக்குத்தான் ஸீட். அவங்களுக்கு ஐம்பது சத இடஒதுக்கீடு கொடுப்பேன். அப்புறம் இந்த டாய்லெட் வசதியெல்லாம் நல்லா செய்து கொடுப்பேன்.

**10. ராஜேஷ்குமார் (பி.காம்.) :** டே காலேஜுக்கும் ஈவ்னிங் காலேஜுக்கும்தான் எந்த சம்பந்தமும் இல்லையே.

அப்புறம் எதுக்கு நேரத்தை மிச்சப்படுத்தணுங்கிற மாதிரி காலைல 8 மணியிலிருந்து ஒரு மணி வரைக்கும் ப்ரேக் இல்லாம க்ளாஸ் நடத்தணும்? கண்டிப்பா அரை மணியிலிருந்து ஒரு மணி நேரம் வரை ப்ரேக் விடுவேன்.

**11. பிரவிந்த் (பி.ஏ. எகனாமிக்ஸ்) :** அட்மிஷன் விஷயத்திலதான் என் முழு கவனமும் இருக்கும். நோ ரெக்கமன்டேஷன். எல்லாம் மார்க் பேஸிஸ்தான். ஒரு சப்ஜெக்ட்டுல நல்ல மார்க் வாங்கியிருந்தும் அது அவனை விட மார்க் குறைவா வாங்கினவனுக்கு ரெக்கமன்டேஷன்ல போய் விட... கடைசியில நிறைய மார்க் வாங்கின பையன் வேற சப்ஜெக்ட் படிக்கப் போக வேண்டியிருக்குதுல்ல!



16

**12. ரேஹான் (பி.ஏ. ஆங்கிலம்) :** ஸ்டூடன்ஸ் எந்த நேரமும் என்னைச்



17



18



19



20



21

சந்திக்கலாம்னு இருந்தாலே போதும்னு நினைக்கிறேன். மாணவர்களோட குறையை, சந்தோஷத்தை 'பிரின்ஸிபால்கிட்ட' பகிர்ந்துக்கிட்டு நிவர்த்தி தேடிக்கிறதுக்கு இதைவிட வேறென்ன வழியிருக்கு சொல்லுங்க.

*13. ரகுநாத் (பி.ஏ. எகனாமிக்ஸ்)* : காலேஜ் லைப்ரரிக்குள்ளே ஜூனியர் ஸ்டூடண்ட்ஸ் வரை சுதந்திரமா போய் தேவைப்பட்ட புத்தகத்தை எடுத்துப் படிக்கிற மாதிரி வழி செய்வேன். மற்ற காலேஜிலேர்ந்தும் புரொபஸர்கள் வந்து எங்க மாணவர்களைப் பார்த்துக் கலந்துரையாடற மாதிரி செய்வேன்.

*14. ஜஸ்வந்த் (பி.ஏ. எகனாமிக்ஸ்)* : முதல்ல பாதி ஸீட் பெண்களுக்கு; அப்புறம் ஹாஸ்டல்; ஸ்டூடன்ஸ்க்கு டூ வீலர் பார்க்கிங், அப்புறம்... காய்ந்த இலைச் சருகுகளைக் கொளுத்தறதுக்குன்னு தனியா ஒரு இடத்துக்கு ஏற்பாடு செய்வேன்.

*15. தேசமணி (எம்.ஏ. சோஷியல் வொர்க்)* : இந்த காலேஜில படிச்சவங்க.. இங்கேயே பி.எச்.டி. முடிச்சிட்டாங்க அப்படிங்கிற காரணத்துக்காகத் திறமையில்லாதவங்களை நியமிக்கிறதை விட... வெளியேயிருக்கிற நல்ல திறமையானவங்களை லெக்சரர்ஸா அப்பாயின்ட் செய்யச் சொல்லி மேனேஜ்மென்ட்கிட்டே கேட்பேன்.

*16. மோகன்ராஜ் (எம்.ஏ. சோஷியல் வொர்க்ஸ்)* : அரியர்ஸ் பேப்பர்களையெல்லாம் மற்ற பரீட்சைக்கு ஒரு பத்து நாள் முன்னாடியே வைக்கச் சொல்லுவேன். பசங்க அந்த வருட பாடத்தையும், முந்தின செமஸ்டர் அரியர்ஸையும் எப்படி ஒண்ணா படிச்சு எழுத முடியும்?

*17. ஜான் சுரேஷ்குமார் (எம்.ஏ. சோஷியல் வொர்க்ஸ்)* : படிப்பு வேலைக்காக மட்டும் இல்லைன்னு மாணவர்களுக்குப் புரிய வைப்பேன். அது மாதிரி மாணவர்களுக்கு இந்தத் திறமை இருக்குன்னு புரிஞ்சுட்டு, என்னைச் சந்திக்க வர்ற அவங்க பெற்றோர்கள்கிட்ட அதைச் சொல்லி... பையன்களை அந்தத் துறையில ஊக்கப்படுத்தச் சொல்வேன். இப்ப பசங்க என்ன படிக்கிறாங்கன்னே பெற்றோருக்குத் தெரியாம இருக்குதே.



22



23

*18. பிரான்ஸிஸ் (எம்.ஏ. சோஷியல் வொர்க்ஸ்)* : மற்ற யூனிவர்சிடி காலேஜ் மாதிரி இல்லையே எங்க காலேஜ். மாணவர்களுக்கு சிலபஸ் கொடுத்திட்டா அவங்களாகவே போய் புக்ஸை தேடிப் பிடிச்சுப் படிக்கிறாங்க. அதுக்கு... ஒரு நல்ல லைப்ரரிதான் வேணும். ஒரு நல்ல லைப்ரரியை காலேஜில ஏற்படுத்தறதுதான் நம்ம முதல் வேலை.

*19. குழந்தைசாமி (எம்.ஏ. சோஷியல் வொர்க்ஸ்)* : ஓரிரு இடங்களைத் தவிர்த்து மாணவர்கள் காலேஜ் வளாகத்தினுள்ளே சிகரெட் பிடிக்கலாம்னு ரூல்ஸ் கொண்டு வருவேன் முதலில். எம்.சி.சி.யில் கூட அதே மாதிரி சட்டம் கொண்டு வந்திருக்காங்களே.

*20. எஸ். பால் (பி.ஜி.டி.பி.ஏ.)* : முதல் வேலை காண்டீனை இன்னும் சிறப்பா மாத்துறதுதான். அப்புறம் கிளாஸ் ரூம், தரை, சுவர் எல்லாம் அழகா மாத்தணும்.

*21. பாபி (பி.ஜி.டி.பி.ஏ.)* : ஒரு மணிக்கு கிளாஸ் முடிஞ்சுடுது. காலேஜ் ஹாஸ்டல் உள்ளே இருக்கிற ரீடிங் ரூமை

நாலு மணிக்குத் திறக்கறாங்க. அதனால இடைப்பட்ட நேரத்தில ஸ்டூடன்ஸ் வெட்டியாத்தானே தூங்கறாங்க. ஸோ.. முதல் வேலை ரீடிங் ரூமை இரண்டு மணிக்கு திறக்கச் சொல்றதுதான்.

**22. விநாயக் (பி.ஜி.டி.பி.ஏ.)** : நான் முதல்ல செய்யப் போறது நிறுத்தி வச்சிருக்கிற 'டௌன் ஸ்டெர்லிங்' ஃபங்ஷனை திரும்பவும் கொண்டு வர்றதுதான். இன்டர் டிபார்ட்மென்ட் 'கல்சுரல் ப்ரோக்ராம்ஸை' இன்டர் காலேஜா மாத்தணும்.

**23. அகஸ்டின் மணி (பி.ஏ. வரலாறு)** : முதல் வேலை ஸ்போர்ட்ஸ் மாணவர்களை அட்டென்டன்ஸ் விஷயத்தில் சுதந்திரமா விடறதுதான். ஆமா, விளையாட்டும் விளையாடிட்டு கிளாஸையும் எப்படி அவங்களால ஒழுங்கா அட்டென்ட் பண்ண முடியும், சொல்லுங்க!

**24. ஜெய்ஜோஷி (எம்.ஏ. சோஷியல் வொர்க்ஸ்)** : அட்மினிஸ்ட்ரேஷன் அஃபிஷியல்ஸ் எல்லாரும் மாணவர்கள்கிட்ட ஃப்ரெண்ட்லியா பழகணும். அதே மாதிரி சோஷியல் வொர்க்ஸ் டிபார்ட்மென்டில் மாணவர்கள் கலெக்ட் செய்யுற பணத்தை அவர்கள் பல ப்ரோக்ராம் நடத்தச் செலவு செய்ய அனுமதிப்பேன்.

24





25

26



**25. ஷங்கர் (பி.ஏ. எகனாமிக்ஸ்)** : புதுசாச் சேருகிற மாணவர்களிடையே ராகிங் செய்கிற ஸீனியர் மாணவர்களைக் கண்காணிக்க ஸ்பை (Spy) வைக்கிறதுதான் நம்ம முதல் வேலை!

**26. மாவியன் அரோப் (எ) சுதன் (எம்.ஏ.)** : தென் ஆப்பிரிக்காவிலிருந்து வந்தவன் நான். பிரின்ஸிபலா வந்தா முதல்ல செய்யுற வேலை பசங்களை சுதந்திரமா விடறதுதான். எனக்கு strict அப்படின்னாலே பிடிக்காத விஷயம்.

**27. செல்வராஜ் (எம்.ஏ. எகனாமிக்ஸ்)** : ஒவ்வொரு மாணவனும் எக்ஸாம்ல வாங்குற மார்க் அடிப்படையில கிரிடிட் சிஸ்டம்னு ஒண்ணு இப்போ இருக்கு. இதில் இவ்வளவு மார்க் வாங்கினாத்தான் அடுத்த வருஷ வகுப்பு அட்டென் செய்ய முடியுங்கிறதை மாத்துவேன். ஒரு மாணவன் பரீட்சையில குறைந்த மார்க் வாங்கறதுக்கு எவ்வளவோ காரணங்கள் இருக்குமில்லியா?

**28. ராஜபிரபு (எம்.ஏ. எகனாமிக்ஸ்)** : இந்தப் பணக்கார மாணவர்களோட டாமினேஷனை ஒழிக்கிறதுதான் நம்ம முதல் வேலை. அப்புறம் மாணவிகளை, குறிப்பா பணக்காரப் பெண்களை கல்லூரியிலே கண்டிப்பா சேர்க்க மாட்டேன். ஏன்னா ஆண்களுக்குக் கிடைக்கிற வாய்ப்பு போகுது. அவங்க போடற டிரஸ், அவங்களோட நடத்தை... அய்யோ காலேஜ் மானமே போய்டும் ஸார்!

**29. பாலசுப்ரமணியம் (எம்.ஏ. எகனாமிக்ஸ்)** : காலேஜை இன்னும் கொஞ்சம் ஸ்டிரிக்டா மாத்துவேன். 'லயோலா' அப்படின்னா அதுக்கு ஒரு மரியாதை இருக்கு. அதை மேலும் காப்பாத்தற மாதிரி, கெடுபிடியை இன்னும் அதிகமா கொண்டு வரணும். ●

- நாஞ்சில் ரமேஷ்

படங்கள் : ஸ்நேகிதன்



29

27





28

அண்மையில் சென்னை வந்திருந்த பி.ஜே.பி. பொதுச். செயலாளர் வெங்கையா நாயுடு எம்.பி., கல்கிக்கு பேட்டியளித்தார். தம்மைப் பற்றி மட்டுமின்றி தமிழக அரசியல் குறித்தும் ஜெ. பற்றியும் பேசினார்...

# ஜெ. நடந்து கொள்ளும் முறை வருத்தமளிக்க

"நீங்கள் அரசியல் பின்னணி கொண்ட குடும்பத்தைச் சேர்ந்தவரா?"

"இல்லை. சாதாரண விவசாயக் குடும்பத்தைச் சேர்ந்தவன். பள்ளிக்கூட நாட்களிலேயே ஆர்.எஸ்.எஸ். இயக்கம் என்னைக் கவர்ந்தது. அதன் காரணமாய், ஏ.பி.வி.பி. என்ற அகில இந்திய மாணவர் பரிஷத்தில் என்னை இணைத்துக் கொண்டு பணியாற்றினேன். என் பேச்சுத் திறமையை வளர்த்துக் கொண்டேன். மேல் படிப்புக்காக விசாகப் பட்டினம் பல்கலைக் கழகத்துக்குச் சென்றேன். அங்கே மாணவர் யூனியன் தலைவரானேன். இந்தியாவின் மற்ற பல்கலைக் கழக மாணவர் யூனியன் தலைவர்களுடன் கலந்து, மாண வர் பிரச்னைகளுக்காகப் போராட்டங்கள் நடத்தி யிருக்கிறேன். (அப்போது பாட்னா பல்கலை மாணவர் யூனியன் தலைவராக இருந்தவர் லாலு பிரசாத் யாதவ்). அதன் பிறகு, சட்டப் படிப்பை முடித்தேன். சட்டப்படிப்பு படித்துக் கொண்டிருந்த போது, ஜே.பி.யின் இயக்கத்தில் ஈடுபட்டு, அவரை சொற்பொழிவாற்ற பல்கலைக் கழகத்துக்கு அழைத்து வந்தேன். அப்போதுதான், இந்திராகாந்தி எமர்ஜென்ஸி கொண்டு வந்தார். நான் தலைமறைவு ஆனேன். எமர்ஜென்ஸி எதிர்ப்பு நடவடிக்கைகளில் தீவிரமாக இறங்கினேன். ஆளும் கட்சியான காங்கிரஸ் என்னைக் கைது செய்யக் கடும் முயற்சி செய்தது!"

"தலைமறைவு வாழ்க்கையில் நடந்த மறக்க முடியாத அனுபவம்?"

"நள்ளிரவில், காங்கிரஸ் கட்சி அலுவலகம், அரசு அலுவலகங்கள் இங்கெல்லாம் ரகசியமாகச் சென்று, எமர்ஜென்ஸிக்கு எதிரான துண்டுப் பிரசுரங்களை ஒட்டி விட்டு வருவேன். நண்பர்களுடன் இரவு சினிமாக் காட்சிக்குப் போய், இடைவேளையின் போது, எமர்ஜென்ஸி எதிர்ப்பு பிரசுரங்களை வீசி, விநியோகித்து விட்டுத் தலை மறைவாகி விடுவோம். சென்னை வந்து, சில தலைவர்களைச் சந்தித்தேன். அவர்களுள் முக்கியமானவர்கள் காமராஜும், கருணாநிதியும். காமராஜ் எமர்ஜென்ஸிக்கு தம் கடுமையான எதிர்ப்பை வெளிப்படுத்தி, தமது உடல் நிலை மோசமாக இருப்பதால், தீவிர அரசியலில் ஈடுபட முடியவில்லை என்றார்.

"விசாகப்பட்டினத்தில், எனக்கு நெருக்கமான தியேட்டர் உரிமையாளர் ஒருவர் இருந்தார். அங்கே நான் அடிக்கடி சென்று வருவேன். ஒருநாள், தியேட்டருக்குப் போய், அங்கிருந்து ஒரு ஸ்கூட்டரை எடுத்துக் கொண்டு, சக மாணவி ஒருத்தியை பின்னால் உட்கார வைத்துக் கொண்டு, நெல்லூருக்கு, ஒரு முக்கியமான பணி நிமித்தம் சென்றேன். (அப்போதுதான் யாரோ மாணவர் + மாணவி, என்று போலீசுக்கு சந்தேகம் வராது) நெல்லூரில், சில தலைமறைவு நபர்களைச் சந்தித்து விட்டுத் திரும்பினேன். தியேட்டருக்கு திரும்பி வந்த போது, எனக்கு வெகு நாட்களாய்ப் பழக்கமான ஒரு இன்ஸ்பெக்டர் நின்று கொண்டிருந்தார். 'என்ன திடீர்னு இங்கே?' என்று ஆச்சரிய மாக நான் கேட்டதும், 'உஷ்! பேசாதே! அதோ டி.எஸ்.பி. இருக்கிறார். உன்னைக் கைது செய்யத்தான் காத்திருக்கிறோம்' என்றார். எனக்கு ஷாக்!"

"போலீஸ் எப்படி உங்களை மோப்பம் பிடித்தது?"

"அதுவும் சுவாரசியமானதுதான். கேஷுவலாக டி.எஸ்.பி.யும், இன்ஸ்பெக்டரும் தியேட்டருக்கு வந்திருக்கிறார்கள். தங்களுக்குள், 'நாயுடு, தலைமறைவு வேலைகளால் ரொம்ப தொல்லை கொடுத்துக் கொண்டிருக்கிறார். எப்படியாவது பிடித்து விட வேண்டும்' என்று பேசிக் கொண்டிருந்ததை, தியேட்டர் மானேஜர் கேட்டுவிட்டு, 'எந்த நாயுடுவைப் பற்றிப் பேசிக் கொண்டிருக்கிறீர்கள்?' என்று கேட்டிருக்கிறார்.

"மாணவர் தலைவர் வெங்கையா நாயுடுவைப் பற்றித்தான்' என்று போலீஸ் சொன்னவுடன், 'அட! அவரா! இங்கே அடிக்கடி வருவாரே! இப்போதுதான் எங்கள் ஸ்கூட்டரை எடுத்துக் கொண்டு போயிருக்கிறார்' என்று சொல்லித் தொலைத்து விட்டார். போலீஸ் உஷாராக, 'திரும்பி இங்கேதான் வருவாரா?' என்று கேட்டு உறுதி செய்து கொண்டு தியேட்டரிலேயே காத்திருந்து, என்னைக் கைது செய்தது!"

"சிறை வாழ்க்கை எப்படி இருந்தது?"

"அந்த வாழ்க்கை மறக்க முடியாது. ஒரு முறை விசாகப்பட்டினத்தில் பிரம்மாண்டமான கூட்டம் ஒன்றுக்கு ஏற்பாடு செய்து, அதில் பேச, சஞ்சய் காந்தி அழைக்கப்பட்டிருந்தார். நாங்கள், அடிக்கடி 'உடம்பு சரியில்லை' என்று சொல்லி, ஆஸ்பத்திரிக்குக் கொண்டு செல்லப்படும்போது, கைதாகாத சகாக்களைச் சந்தித்து தகவல் பரிமாறிக் கொள்ளுவோம். சஞ்சய் காந்தி மீட்டிங்கில் எப்படியாவது குழப்பம் ஏற்படுத்தி விடத் திட்டமிட்டேன். மஃப்டியில் பத்தாயிரம் போலீசார் கூட்டம் சேர்ப்பதற்காக, கொண்டு வரப்பட்டனர். என் நண்பர்கள், நான் கூறிய ஐடியாப்படி, கூட்டத்தினுள் ரகசியமாகப் புகுந்து, பிளாஸ்டிக் பைகளில் கொண்டு சென்ற தண்ணீர்ப் பாம்புகளை அவிழ்த்துவிட, கூட்டத்தில் ஒரே குழப்பம், கலாட்டா! சஞ்சய் காந்திக்கு கோபம் வந்து, மூட் அவுட் ஆனார்.

"ஜெயிலில், எங்களுக்குத் தரப்பட்ட நியூஸ் பேப்பர்கள், ஏற்கெனவே தணிக்கைக் குட்படுத்தப்பட்டுதான் வெளியிடப்படுகின்றன. அவற்றை, ஜெயிலுக்குள் மறுபடி ஏன் சென்சார் செய்ய வேண்டும் என்று பிரச்னை எழுப்பினேன். விஷயத்தை விசாரித்த நீதிபதி, இரட்டிப்பு சென்சார் கூடாது என்று உத்தரவிட்டார். என் கேஸை, நானேதான் வாதாடினேன். பப்ளிக் பிராசிக்யூட்டர், 'உன் விடுதலைக்கு ஏற்பாடு செய்கிறேன். வெளியில் போய், ஆக்கபூர்வமான பணிகளில் ஈடுபடு; அரசியல் பக்கம் வராதே!' என்று ஆலோசனை சொன்னார். நான், 'என்னை விடுதலை செய்தால் மகிழ்ச்சிதான். மறுபடி, எமர்ஜென்ஸி எதிர்ப்புப் பணியில் நான் ஈடுபட உதவியாக இருக்கும்!' என்று சொல்லி விட்டேன்!"

"தேர்தலில் போட்டியிட்டது எப்போது?"

"எமர்ஜென்ஸி விலக்கப்பட்டதும், யுவ ஜனதாவில் சேர்ந்தேன். மாணவர் தலைவர் என்ற முறையில் எனக்கு எம்.பி. சீட் கிடைத்தது. ஓங்கோல் தொகுதியில் போட்டியிட்டு, குறைந்த வாக்குகள் வித்தியாசத்தில் தோற்றேன். அதன் பின் எம்.எல்.ஏவாகப் போட்டி

# வில்லையா?



யிட்டு வென்றேன். மாநில அளவில் பி.ஜே.பி யில் பல பொறுப்புகளிலும் இருந்துவிட்டு, இப்போது பி.ஜே.பி.யின் அகில இந்திய பொதுச் செயலாளராக உள்ளேன்."

"நீங்கள் உள்பட சில கட்சிப் பிரமுகர்கள் தமிழ்நாட்டின் சட்டம் ஒழுங்கு நிலை பற்றி அதிருப்தி தெரிவித்து வருகிறீர்கள்; அ.தி.மு.க. வும் அதே காரணத்துக்காகத்தான் தி.மு.க. அரசை டிஸ்மிஸ் செய்யக் கோருகிறது. ஆனாலும், மத்திய அரசு இது குறித்து மௌனம் சாதிக்கிறது. ஏன் இந்த முரண்பாடு?"

"தமிழ் நாட்டில், சட்டம் ஒழுங்கு திருப்திகரமாக இல்லை; முன்னெச்சரிக்கை செய்யப்பட்டும், கோவை வெடிகுண்டு விஷயத்தில் மாநில அரசு, அதைத் தடுக்க நடவடிக்கை எடுக்கவில்லை. இங்கே தீவிரவாதிகளுக்கு, அரசின் ஆதரவு இருந்திருக்கிறது என்பது எல்லாம் வாஸ்தவம்தான். ஆனால் அதற்காக, மாநில அரசை 356வது சட்டப் பிரிவைப் பயன்படுத்திக் கலைக்க வேண்டிய அளவுக்கு, அரசியல் சாசன நெருக்கடி உருவாகவில்லை என்பது மத்திய அரசின் கருத்து. அது மட்டுமின்றி, 356 வது பிரிவைப் பயன்படுத்தி, தி.மு.க. ஆட்சியை டிஸ்மிஸ் செய்ய, ஜனாதிபதி ஒப்புக்கொள்ளமாட்டார். பாராளுமன்றத்தின் இரு அவைகளிலும் அதற்கு ஒப்புதல் கிடைப்பது அத்தனை சுலபமில்லை."



"தலைவரே... கட்சியின் கொள்கைகளுக்காக உயிரையும் கொடுப்பேன்னு சொன்னீங்களாமே..."

"ஆமா....!"

"ஆட்சிக் கலைப்புக்காக தீக்குளிக்க ஆள் இல்லையாம்!... உடனே ஆபீசுக்கு வருவீங்களாம்!"

– ராஜி

"ஆக, 356 ஐ பா.ஜ.க. அரசு பயன்படுத்துவதை, ஜனாதிபதி மற்றும் பாராளுமன்ற இரு அவைகளின் அங்கீகாரம் கிடைக்காது என்கிற காரணம்தான் தடுக்கிறது. மற்றபடி பயன்படுத்த மத்திய அரசு தயார் என்று கூறலாமா?"

"அப்படியில்லை. நாங்களே 356 வது சட்டப் பிரிவிற்கு பலிகடா ஆனவர்கள். எனவே, அதை மிக மிக ஜாக்கிரதையாக, மிக நெருக்கடியான சூழ்நிலையில் மட்டுமே பயன்படுத்த வேண்டும் என்பதில் தீவிரமாக உள்ளோம். நாங்கள் 356 வது பிரிவுக்கு எதிரானவர்கள் அல்ல; அது தவறாகப் பயன்படுத்தப்படுவதை எதிர்ப்பவர்கள்."

"ஜெயலலிதா, நடந்து கொள்ளுகிற முறை உங்களுக்கு வருத்தமளிக்கிறதா?"

"வருத்தம் சந்தோஷம், எல்லாம் ஒப்பீட்டின் மூலம் வருபவை. தனி மெஜாரிடி பெறாவிட்டாலும், மற்ற கட்சிகள் அரசு அமைக்க முடியாத சூழ்நிலையில், கூட்டணிக் கட்சிகளின் ஒத்துழைப்புடன், பி.ஜே.பி. ஆட்சிக்கு வந்தது சந்தோஷமளிக்கும் விஷயம்தானே! ஜெயலலிதா, அவ்வப்போது மத்திய அரசுக்கு தர்மசங்கடங்கள் ஏற்படுத்தாமல், முழுமையான ஆதரவு தந்தால் இன்னும் மகிழ்ச்சி ஏற்படும். ஆனால் ஒரு விஷயம். ஜெயலலிதாவிடமிருந்து, மத்திய அரசுக்கு நிர்வாகத் தலையீடு எதுவுமில்லை என்பதை உறுதியாக நான் சொல்லுவேன்."

"உங்கள் கூட்டணிக் கட்சிகளிலேயே ஜெயலலிதாதானே உங்களுக்கு அதிகபட்ச தொல்லை தருகிறார்?"

"ஸாரி! சக கூட்டணிக் கட்சியினர் பற்றி – எங்களுக்கு என்ன குறை இருந்தாலும், அதை கூட்டணிக் கட்சிகளின் கூட்டத்தில்தான் வெளிப்படுத்த வேண்டும் என்பது என் கருத்து. அப்படியே மற்ற கூட்டணிக் கட்சிகளுக்கும் இருக்க வேண்டும் என்றே நான் விரும்புகிறேன். வீணாக, மீடியா மூலம் அறிக்கைப் போர் நடத்துவது எதிர்க்கட்சிகளின் விமர்சனத்துக்கு அவல் தருவது போலாகும்." ●

சந்திப்பு : **எஸ். சந்திரமௌலி**

படம் : **ரமேஷ்**

இந்திய விவசாயத்தையே அழித்து நாசமாக்கக்கூடிய அளவுக்கு அமெரிக்கா ஒரு புதிய 'அணுகுண்டை'க் கண்டுபிடித்துள்ளது. அது பற்றி விவரிக்கிறார் எஸ். எஸ். நாகராஜன்...

# பயிர்களைக் கொல்ல ஓர் அணுகுண்டு!

அமெரிக்க விவசாய இலாகா, அந்நாட்டில் இயங்கி வரும் மான்சாண்ட்டோ (Monsanto) என்ற மிகப் பெரிய கம்பெனியுடன் இணைந்து பயிர் மரபியல் ஆராய்ச்சி மூலம் தன்னைத் தானே அழித்துக் கொள்ளும் உயிரணு ஒன்றினைக் கண்டுபிடித்துள்ளது. இதனை ஆங்கிலத்தில் ''Terminator Gene'' என்று சொல்கிறார்கள். இந்த அணுவினை அமெரிக்கா உயிரியல் தொழில் நுட்பத்தினைக் (Bio-technol-

ogy) கொண்டு, விதையினுள் செலுத்தி அந்த விதையினை வியாபார நோக்கில் விற்க முயற்சி எடுத்து வருகிறது. இந்த உயிரணுவினைத் தன்னகத்தே கொண்ட பயிர், சாகுபடியாகும் போது, அது நன்கு வளர்ந்து அதிக மகசூலினைக் கொடுக்கும். ஆனால் இதில் கிடைக்கும் தானியத்தை உணவாகப் பயன்படுத்தலாமேயன்றி விதையாகப் பயன்படுத்தவே முடியாது.

இம்மாதிரியான உயிரணுக்களைக் கொண்ட பயிர்களின் விதைகளை, 'அதிக மகசூல் கொடுக்கும்' என்று அமெரிக்கா ஆசை காட்டி விநியோகம் செய்ய முயற்சி செய்து வருகிறது. இந்த விதையை வாங்கி சாகுபடி செய்யும் போது, விளையக்கூடிய பயிர், பூக்கும் தருணத்தை நெருங்கும் சமயத்தில் அதில் இருக்கும் மகரந்தத் தூள்கள் அப்பகுதியில் சாகுபடி செய்யப்பட்டிருக்கும் இதர நெல் ரகங்களின் பூக்களோடு இணைந்து அயல் மகரந்த சேர்க்கை உண்டாகிறது. இதனால் அந்தப் பயிர்களிலும் "Terminator Gene" உள்ளே புகுந்து கொள்கிறது! அப்படி விளையும் நமது நெல் ரகங்களும் மறுபடியும் முளைக்காது. இதன் விளைவாக இந்தப் பயிர்களில் கிடைக்கும் தானியத்தை விதையாக உபயோகிக்க முடியாத அவலநிலை தோன்றுகிறது. இதனால் விவசாயிகள் அடுத்து வரும் சாகுபடிக்கு விதை கிடைக்காமல் இந்தக் கொடிய விதைகளை உற்பத்தி செய்து விநியோகித்து வரும் அமெரிக்கர்களையே நாட வேண்டி வரும்!

இந்த முக்கியக் காரணத்தினால் அமெரிக்கா உலக உணவு உற்பத்தியையே தங்களது கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வரக்கூடிய அபாயம் உள்ளது. இதனால் பல நாடுகள் அமெரிக்கர்களுக்கு அடிமையாகக் கூடிய அவலநிலையும் தோன்றும்.

இந்தப் புதிய விதை நமது நாட்டில் பரவுமேயானால், நம் நாட்டில் உணவு உற்பத்தியில் தன்னிறைவு அடையச் செய்த பல பயிர் ரகங்கள் அழிந்து விடும்! சுருங்கச் சொல்லப் போனால் இந்த "Terminator Gene" என்பதை ஒரு பகுதியில் உள்ள பயிர் வளத்தை அழிக்க வீசி எறியப்படும் அணுகுண்டு என்றே சொல்லலாம்!

இந்த "Terminator Gene" உள்ள விதையை நம் நாட்டில் இறக்குமதி செய்வதைத் தவிர்க்க வேண்டுமென்று இந்திய விவசாய ஆராய்ச்சிக் கழகம் முயற்சி எடுத்து வருகிறது. இறக்குமதியைத் தவிர்க்க நாம் என்னதான் முயன்றாலும் இந்தப் புதிய ரகமானது எப்படியாவது நமது நாட்டினுள் நுழைந்து நாசத்தை ஏற்படுத்துவது உறுதி.

இன்று ஆந்திராவில் பல பருத்தி விவசாயிகள் தற்கொலை செய்து கொள்வதன் முக்கியக் காரணம், அமெரிக்காவின் விதை மற்றும் அதற்காகத் தயாரிக்கப்பட்ட ரசாயன உரங்கள் மற்றும் அதிக விஷமுள்ள பூச்சி, பூஞ்சாள மருந்துகளுமேயாகும்.

இந்த "Terminator Gene" என்பதை சாதாரண விஷயமாக நாம் கருதாமல், இந்தியாவுக்கு வரக்கூடிய மிகப் பெரிய அபாயம் என்றே கருத வேண்டும். இதற்காக நாம் உலக உணவு ஆராய்ச்சிக் கழகம் (FAO) மற்றும் உலக வர்த்தகக் கழகம் (WTO) இவர்கள் உதவியுடன் அமெரிக்காவில் இம்மாதிரியான "Terminator Gene" உற்பத்தி செய்வதைத் தடுக்க முயற்சிகள் செய்ய வேண்டும். ⊙

''எதிர் வீட்டு மாமி பட்டுப் புடைவை வாங்கியிருக்காங்களா?''

''எப்படி கண்டு பிடிச்சீங்க டாக்டர்?''

''கண்ணும் வயிறும் ஒரே சமயத்தில் எரியுதுன்னு சொன்னீங்களே!''

– இரா. திலிப்

## காவிரி பிரச்னை:



# கலக்கத்துடன் கர்நாடகத் தமிழர்கள்..!

**கா**விரிப் பிரச்னைதான் இன்றைய கர்நாடக அரசியலின் பிரதான பிரச்னை!

இரண்டு வாரங்களுக்கு முன்புதான் காவிரி நீரை மைசூருக்குப் பயன்படுத்துவது தொடர்பாக மண்டியாவில் மிகப் பெரிய கலவரங்களெல்லாம் நடந்தன. உயிர்கள் பலியாகின. ஓரளவு பதற்றம் தணிந்திருந்த சமயத்தில் காவிரியின் 'மெயின் இஷ்யூ'வே கைக்குக் கிடைத்து விட்டது! ஒருவித இறுக்கமான மனநிலையுடன் அடுத்த கட்டப் போராட்டத்திற்குக் காத்திருக்க ஆரம்பித்து விட்டன சில அமைப்புகள்.

கர்நாடக பாரதிய ஜனதா தலைவர்களில் ஒருவரான அனந்தகுமாரும், ராமகிருஷ்ண ஹெக்டேயும் மத்திய அரசில் இருப்பதால் அவர்களை மீறி கர்நாடகத்துக்குப் பாதகமாக எதுவும் நடந்து விடாது; ஹெக்டே போன்றவர்கள் ஓரளவு நியாயத்துடனும் விவேகத்துடனும் தாம் நடப்பார்கள் என்பதால், பிரச்னை அதிகமாகாமல் மிகுந்த கவனத்துடன் கையாளப்படும் என்றெல்லாம் நடுநிலையாளர்கள் நம்பியபோதும் ஜெயலலிதாவின் திடீர் அறிக்கைகளால் டென்ஷனாகிப் போனார்கள் கர்நாடக மக்கள்.

எந்த ஒரு பிரச்னை பற்றியும் தடாலடியாகக் கருத்துத் தெரிவிப்பதும், செய்து முடிக்கவில்லையேல், தொலைத்து விடுவேன் என்று எச்சரிப்பதுமான 'ஜெ'யின் பாணி தமிழக மக்களுக்குப் பழகிப் போன ஒன்று. ஆனால் கர்நாடக மக்கள் ஜெயலலிதாவை இப்போதுதான் புதிதாய் கவனிக்கத் தொடங்கியிருக்கிறார்கள். அதனால் இவரின் அதிகார மிரட்டல்தொனி அறிக்கைகள் கன்னட மக்கள் மத்தியில் ஒருவித பரபரப்பை ஏற்படுத்திவிட... எங்கே தங்கள் மீது இன்னொரு தாக்குதல் இருக்குமோ என்ற பயமும் பீதியும் கர்நாடகத் தமிழர்களை உலுக்கத் துவங்கிவிட்டது.

சென்றமுறை காவிரிக் கலவரத்தின் போது ஏற்பட்ட பயங்கரங்களையும் சீரழிவுகளையும் இன்னமும் கர்நாடகத் தமிழர்கள் மறந்து விடவில்லை. அப்போது ஏற்பட்ட புண்களும் ரணங்களும் இன்னமும் ஆறவில்லை. விசாரணைக் கமிஷன் ஒன்று அமைக்கப்பட்டு, அந்தக் கமிஷனின் பரிந்துரைகளின் பேரில் எந்த நடவடிக்கையும் எடுக்கப்படவில்லை. நிவாரணத் தொகையோ நஷ்ட ஈடோ கொடுக்கப்படவில்லை....

கர்நாடகத் தமிழனின் பிரார்த்தனையெல்லாம் இதுதான். காவிரிப் பிரச்னைக்கு சுமுகத் தீர்வு காணப்பட வேண்டும். தமிழகம் தன்னுடைய உரிமையைப் பெறும் அதே நேரத்தில், காவிரியை நம்பியிருக்கும் கர்நாடக விவசாயிகளின் நலனும் பேணப் பட வேண்டும். இரண்டு பக்கமும் கொஞ்சம் விட்டுக் கொடுத்தல் அவசியம். பரபரப்பு ஏற்படுத்த வேண்டும் என்ற ஒரே காரணத்துக்காகக் காட்டமான அறிக்கைகள் விட்டுக் குளிர்காய நினைக்கும் குழப்ப அரசியல்வாதிகள் இரண்டு பக்கமும் கொஞ்சம் விலகிக் கொள்ள வேண்டும்.

பெங்களூரிலிருந்து: **பெர்னாண்டஸ்**

## என்.ஆர். மலர்வண்ணன்

வீட்டுக்குப் பின்பக்கமாகப் போன செல்வி, துவைத்துக் கொடியில் காயப் போட்டிருந்த துணிமணிகளை ஒவ்வொன்றாக உருவி எடுத்தாள்.

உற்சாகம் தொற்றிக் கொள்ள வேண்டிய நேரம்தான். மஞ்சள் வெயில் மனசுக்குப் பிடித்ததாய், ரம்மிய ரகளை செய்கிறது. இரவு வர வெகுநேரம் பிடிக்கிறது. காற்றுக் காலம் தொடங்கிக் கொஞ்சம் புழுதியோடு தான் என்றாலும் மேனி தழுவிச் சுகமாக வீசுகிறது. வேப்ப மரத்து நிழல் பூமியில் படர்ந்து, ஏதேதோ புதுக் கோலங்களைப் போட்டுப் போட்டு அழிக்கிறது. மரத்தின் இலைகள் பூமித் திரையில் பொம்மலாட்டம் நடத்துகிற மாதிரி ஒரு சாகசம் தெரிகிறது.

செல்வி எல்லாவற்றையும் சோர்வோடு ரசித்தபடியே, துணிமணிகளை அப்படியே அள்ளிக் கொண்டு வந்து, நடுக்கூடத்தில் போட்டுப் பெருமூச்சோடு சேரில் விழுந்தாள்.

''என்னங்க, என்னால் முடியலீங்க. பேசாமல் என் வேலையை ராஜினாமா செய்திடட்டுமா?''

ஓடிக் கொண்டிருந்த டீ.வி.யில் ஒரு கண்ணும், கையிலிருந்த நாளிதழில் ஒரு கண்ணுமாக இருந்த திருஞானம் தலை நிமிர்ந்தான்.

"நான் என்னம்மா சொல்லப் போறேன். எப்பவும் சொல்ற அதே வார்த்தைதான். உன் இஷ்டப்படி செய். நீ படித்தவள். சிந்திக்கத் தெரிந்தவள். உனக்குத் தெரியாததா? என் கருத்தை எப்போது உன் மேல் திணிச்சிருக்கேன்?"

திருமணமான மறுவாரமே செல்வி ஆரம்பித்து வைத்த இந்தக் கேள்வி, பதினைந்து வருடமாகியும், இன்னும் ஓயவில்லை. வாரம் ஒருமுறையாவது சொல்லி விடுவாள்.

அப்போது முந்நூறு ரூபாய் சம்பளம். மூன்று ஆண்டுகளில் அது கொஞ்சம் கொஞ்சமாக ஏறி, வேலை நிரந்தரம் ஆகி, இப்போது ஆறாயிரம் சம்பளம். கையில், பிடித்தம் போக நாலாயிரம் வருகிறது.

செல்வி எப்போதும் போல் அமைதியாக இருந்தவள், எதிரே கிடந்த துணிமணிகளை மடித்து வைக்கத் தொடங்கினாள்.

வேலைக்குப் போ என்றோ, ரிசைன் பண்ணிடு என்றோ திருஞானம் ஆணித்தரமாகச் சொல்ல மாட்டானா என்பது போல ஒரு பாவம் மட்டும் ஆடிக் கொண்டே போனது.

படித்தவள். விஷயம் தெரிந்தவள். எல்லாவற்றுக்கும் மேலாக ஆபீஸ் போய் நிறையச் சம்பாதிப்பவள் என்பதால் திருஞானம், மனைவி மேல் அன்பு கலந்த மரியாதையே வைத்திருந்தான்.

ஒருமுறை செல்வி உச்ச கட்டச் சிந்தனையில் இருந்தபோது, ''என்ன ஆனாலும் சரிங்க. நான் வேலையை ரிசைன் செய்யத்தான் போகிறேன்'' என்றாள்.

"சரிம்மா, இப்பவே எழுதிக் கொடு. நானே கொண்டு போய்க் கொடுத்திடறேன். நீ போனால் மனசு மாறினாலும் மாறிடும்."

செல்வி யோசித்தாள். "அது நல்லா இருக்காதுங்க. நானே கொடுத்திட்டு வந்திடறேன்."

மறுநாள் மாலை ஆபீசிலேருந்து வந்ததும் வராததுமாக, "என்னங்க, அடுத்த வாரம் ஏ.ஜி.எம். என்னை ரிசப்ஷன்ல போட்டிருக்காங்க'' என்று கூவிய செல்வி கண்ணாடி முன்னால் நின்று தன் அனீமிக் வெளுப்பு முகத்தில் அழகு பார்த்தாள்.

சட்டென்று செல்வி எதையோ நினைத்துக் கொண்டவளாக மடித்துக் கொண்டிருந்த துணிமணிகளை ஒதுக்கி வைத்துவிட்டு, "ஏங்க, நான் ரிசைன் பண்ணினால் ஒண்ணும் கஷ்டமில்லையே?'' என்றாள்.

''என்ன கஷ்டம்?''

"இல்ல, என்னுடைய வருமானம் குறையும். அதனால் குடும்பத்

# இல்லத்தரசி

துக்குப் பாதிப்பு வராதா?''

''உனக்குத் தெரியாததையா நான் சொல்லப் போறேன்?''

''புரியுதுங்க. ஆனாலும் ஒரு சப்போர்ட்தானே. ஒருவேளை உன்னுடைய சம்பளம் குறைந்து போனால் குடும்பம் கஷ்டப்படுமோன்னு நினைக்கறே? இது ஆணவம் இல்லையா?''

''ஐயோ, நான் அப்படிச் சொல்லலீங்க!''

''அது எனக்குப் புரியுதும்மா. அதனால்தான் அமைதியா இருக்கிறேன்.''

''அப்படி இல்லீங்க, பிராக்டிகலாப் பேசுவோம். இந்த தோளுசான் உடம் போட...''

''வேண்டாம் விட்டுடு. ரெஸ்ட் எடு.''

''சம்பளம் போயிடுமே?''

''ரெண்டும் வேணுமா, எப்படி முடியும்?''

''ஏதாவது பண்ணனும்ங்க...''

''செலவைக் குறைப்போமே!''

''இதுதான் உங்க வழியா?''

செல்வி ஜன்னல் பக்கம் பார்வையைத் திருப்பினாள். குருவிகள் இச் இச் என்று மரக்கிளைகளில் மாறி மாறி உட்கார மஞ்சள் வெயில், இருண்டு கொண்டு வந்தது. தூரத்தில் தெரிந்த வாய்க்கால் தங்கத்தைக் கரைத்துவிட்ட மாதிரி ஜொலித்தது. அதன் மீது வெள்ளையாய் ஏதோ ஒன்று கொக்கா, வெள்ளைத் துணியா?

யாரோ ஒருவன் ஒரு பெண்ணைப் பின் பக்கம் உட்கார வைத்து சைக்கிளைக் கஷ்டப்பட்டு மிதித்துக் கொண்டிருந்தான். தேவையில்லாமல் மணியடித்த சப்தம் கேட்டது. அவள் அப்படியொன்றும் கனமாக இருக்க முடியாது என்றாலும் அவன் சிரமப்படுவதாகவே தோன்றியது.

திருஞானம் எழுந்தான். மடித்து வைத்த துணிகளை பீரோவில் அடுக்கி, அயர்ன் செய்ய





"ஆனாலும் நம்ம தலைவரின் அரசியல் சாணக்கியத்தை யாராலும் 'பீட்' பண்ண முடியாது!"

"எப்படி சொல்றே?"

"சந்தன வீரப்பனை சந்திச்சுட்டு வந்து, 'மரியாதை நிமித்தமான சந்திப்பு'ன்னு அறிக்கை விட்டுட்டாரு!"

— பா. ஜெயக்குமார்



"அடிக்கடி ஒரு 'ராங்நம்பர்' உன்னிடம் பேசி வம்பு செய்வதாகக் கூறினாயே. அடுத்த முறை பேசும்போது அவன் அட்ரஸைக் கேளு?"

"எதற்கு?"

"உன் போட்டோவை அனுப்பத்தான். அதற்கு பின் வாலாட்ட மாட்டான் பார்!"

— நெ. இராமன்



"ஏண்டா! போன வாரம் திருப்பதி போயிட்டு வந்தியா?"

"எப்படி சார் கண்டுபிடிச்சீங்க?"

"ஜப்பானியர் 'குட்டை'யானவர்கள்னு எழுதச் சொன்னா, 'மொட்டை'யானவர்கள்னு எழுதியிருக்கியே?"

— தாரை ஆ. அருண்ராஜ்

வேண்டிய துணிகளை ஒரு பையில் போட்டான்.

டியூஷன் முடிந்து குழந்தைகள் வரவே, பேச்சு நின்று சமையல் வேலைகள் தொடங்கின. திருஞானம் உப்புமாவுக்கு வெங்காயம் நறுக்கினான்.

அன்று இரவு செல்வி மீண்டும் பேச்சை ஆரம்பித்தபோது, திருஞானத்திற்குச் 'சீ' என்றிருந்தது. ஆனாலும் சம்பாதிக்கிற மனைவியிடம் காட்டிக் கொள்ள விரும்பவில்லை. தூங்குகிற மாதிரி பாசாங்கு செய்தான்.

செல்வி மறுநாள் ராஜினாமா செய்தாள்.

வேலையை ராஜினாமா செய்தபின் செல்விக்கு ஓரளவு ஓய்வு கிடைத்தது. உடல் உபாதைகள் குறைந்திருந்தன. அடிக்கடி, ஏதாவது ஒன்று வலிப்பதாகச் சொல்லும் பழக்கம் இப்போது பாதிக்குப் பாதி குறைந்திருந்தது.

திருஞானம் மட்டும் ஏனோ விலகி நிற்பதாகத் தோன்றியது. அவனோடு பேசும் போதெல்லாம் 'உடலைக் கவனித்துக் கொள்' என்ற பெரிய மனுஷ தோரணை தெரிந்தது. முன்பெல்லாம் சமையலில் 'கூட மாட' ஒத்தாசை செய்தவன் இப்போது முழு ஆண் மகனாக மாறியிருந்தான்.

ஒருமுறை செல்வி, "நான் ரிசைன் பண்ணிட்டு வீட்டில் இருப்பதால, எனக்கு நல்லாயிட்டதாக அர்த்தம் இல்ல" என்று உதவி கேட்டுக் குழந்தைகளிடம் கத்திய போது, திருஞானம் கண்டும் காணாமல் போய் விட்டான்.

செல்வி காபி கொண்டு வந்தாள்.

"வச்சிட்டு போ."

"ஆறிப் போயிடும்."

"ஏன், அரைகுறையாகக் கொண்டு வந்தியா, சனியன். வீட்டுலதானே இருக்கே? கொடுமைடா சாமி. திமிர். எல்லாம் திமிர். என் சம்பளம் இல்லாம உன்னால் குடும்பம் நடத்த முடியுமான்னு சவால் விட்டவள் தானே நீ?"

செல்வி சரேலென்று தலை நிமிர்ந்தாள்.

"என்னடி பார்க்கறே? நான் சொல்ற படி தான் எதுவும் நடக்கணும்!" திருஞானம் காபிகூடக் குடிக்காமல் வெளியேறினான்.

செல்வி திக்பிரமை பிடித்தவள் மாதிரி பொத்தென்று நாற்காலியில் சாய்ந்தாள்.

# மும்பை மசாலா:

## கோல்பீபி கோல்மால்

மராத்தி நாடக மேடையில் மீண்டும் புயல்; 'மீ நாதுராம் போல்தோய்' எழுப்பிய சூறாவளி அடங்கிய பாடில்லை; "கோல்பீபி" என்று மற்றொன்று! மாநில அளவில் அவார்டெல்லாம் வாங்கியிருக்கும் இந்நாடகம் உண்மையில், 'எய்ட்ஸ்' பற்றிய விழிப் புணர்ச்சியை ஏற்படுத்தும் நோக்குடன் உரு வாக்கப் பட்டது. முற்றிலும் புது முகங்கள் நடித் திருக்கும் இந்நாட கத்தை 'சிவாஜி மந்திரில்' ஒரே முறை அரங்கேற் றியதுடன் தடை விதித்து விட்டார் கள்! காரணம்? தலைப்பு மோச மாம்! 'கோல் பீபி' என்றால் சிவப்பு விளக்குப் பகுதி என்று பொருள். இந்தப் பகுதியைச் சார்ந்த ஒரு பெண், எய்ட்ஸ் நோயால் தாக்கப்பட்டு, ஆண் வர்க்கத்தைப் பழி வாங்குவதுதான் கதை! குண்டு வெடிப்பால் பாதிக் கப்பட்ட இந்த அரங்கம், மக்களை மீண்டும் இங்கே ஈர்க்கவென்று, இரண்டர்த்த நாடகங்களை எல்லாம் அனுமதித்துக் கொண்டிருந்தது. திடீரென்று ட்ரஸ்டிகளுக்கு என்ன வந்து விட்டது என்பது யாருக்கும் புரியவில்லை! தலைப்பை மாற்ற மாட்டேனென்று தயாரிப் பாளரும் அடம் பிடிக்கிறார். ஆனால் இந்தப் புயல் டில்லி வரை போகாமல், நாசிக், புனேவுடன் நின்று விடும் என எதிர்பார்க் கப்படுகிறது.





## மேனகாவுக்குத் தெரியுமா?

ரியல் எஸ்டேட் தகராறுகளில் இது வரை மனிதர்கள்தான் அடித்துக் கொண்டு மாண்டார்கள்! இப்போது மாடுகளும் மடிய ஆரம்பித்து விட்டன! அந்தேரியிலுள்ள பாபுலால் டைரி ஃபார்மில், நாற்பது எருமைகள் திடீ ரென்று இறந்தன. மாலை நாலு மணிக்கு

# பாடுகிறார் சஞ்சய் பாகவதர்!

தீவனத்தை உண்ட மாடுகள், இரவு எட்டு மணியிலிருந்து ஒன்றன் பின் ஒன்றாக மறுநாள் மதியம் வரை, எமலோகப் பயணத்தைத் தொடர்ந்தன. எஞ்சியுள்ள முப்பது மாடுகள் போரிவிலிக்கு மாற்றப் பட்டன. இந்தச் செய்தி அந்தேரி, கோரே கான் பகுதி பால் பண்ணைக்காரர்களின் மத்தியில் பீதியைக் கிளப்பியது - இந்தப் பகுதி முழுவதும் தீவனம் சப்ளை செய் வது ஒருவரேதானே? ஆனால் ஏனைய பண்ணைகளிலிருந்த மாடுகளுக்கு எந்தவித பாதிப்புமேயில்லை! பாபுபாயின் பண்ணை இருக்கும் நிலத்தை ஒரு 'பில்டர்' அபகரிக்க முற்படுவதாகவும், அந்தத் தகராறின் பயனாகத்தான் இந்த எருமைக் கொலைகள் என்ற கூற்று வலுத்து வருகிறது. இனி எருமைகளுக்கும் 'செக்யூரிட்டி' கொடுக்க மேனகாதான் போராட வேண்டும்!

## 'பேரண்டல் என்ரிச்மெண்ட்' என்றால்...?

'Parental enrichment' என்றால் என்ன தெரியுமா? ஏதோ பெற்றோர்களை பணக்காரர்கள் ஆக்கும் வழி என்று நினைத்து சந்தோஷப்பட வேண்டாம்; அவர்களிடம் பணம் பறிக்கும் வழியில் இதுவும் ஒன்று! வருடம் இருமுறை, 'குழந் தைகளை வளர்ப்பது எப்படி?' என்பது குறித்து கல்வியாளர்களும் மனவியல் நிபுணர்களும் பெற்றோர்களிடம் லெக் சரடிப்பார்கள். அதற்கு, ஒரு குழந்தைக்கு, ஒரு வருடத்துக்கு வசூலிக்கப்படும் ஃபீஸ் ரூ 500! எங்கே? சாந்தாக்ரூஸிலுள்ள போதார் ப்ளாஸம்ஸ் அண்ட் லீலாவதி போதார் ஹைஸ்கூலில்தான்! இரண்டோ, மூன்றோ குழந்தைகள் அதே ஸ்கூலிலிருந் தாலும், அதே பெற்றோர்தானே?... இருப்பினும் ஒவ்வொருவருக்கும் தனியாக 500 ரூ என்று மொத்தம் 1500 ரூ அபேஸ்! இத்தனைக்கும் மூன்று குழந்தைகளுக்கு மாக ஒரே லெக்சர்தான்! (ஐயோ! மூன்று முறை கேட்கும் கொடுமையிலிருந்து தப்பித்தோம்!) தவிர கம்ப்யூட்டர் ஃபீஸ், ஆக்டிவிடி ஃபீஸ், ஹாபி ஃபீஸ்... காற்றுக்கும் தண்ணீருக்கும்தான் ஃபீஸ் பாக்கி... எல்லாமாகச் சேர்த்து மாதம் 750 ரூ ஃபீஸ்! வெறுத்துப் போன பெற்றோர், ஹை கோர்ட்டில் வழக்குத் தொடுத்து, ஜெயித்துமிருக்கிறார்கள். இனி மாதாந்திர ஃபீஸ் ரூ 250தான்! 'extortion'ல் இது புது விதம்!

## என்றும் பதினாறு!

'75 வயதில், 'எனக்குப் பதினாறு வயது' என்ற படமா?' என தேவ் ஆனந் தைக் கிண்டலடித்தவர்களுக்கு நெத்தியடி! ஆகஸ்ட் 6ம் தேதியன்று, வெஸ்ட்எண்ட் லண்டனிலுள்ள பிரசித்தி பெற்ற 'ப்ரின்ஸ் சார்லஸ்' தியேட்டரில், 'மை ஸோலா பரஸ் கி' திரையிடப்படும்! ஒரு ஆசியப் படம் இங்கே திரையிடப்படுவது இதுதான் முதல்முறையாம்! இது இந்தியர்கள் அனைவருக்கும் கிட்டி யிருக்கும் மாபெரும் கௌரவம்' என சந்தோஷிக்கிறார் தேவ்! இதன் வசூல் இளவரசருடைய 'பிஸினஸ் யூத் ட்ரஸ்ட்' என்ற உலகளாவிய சமூக சேவை இயக்கத்திற்குச் செல்ல இருக்கிறதாம். இளவரசரும், ட்ரஸ்டின் சில உறுப்பினர் களும் இப்படத்தைப் பார்த்து விட்டு, அதை ஒரு தர்ம காரியத்துக்கு உப யோகிக்கும் யோசனையைச் சொன்னார் களாம்! ஆகஸ்ட் ஏழிலிருந்து, லண்டனில் ஏழு தியேட்டர்களில் ரிலீஸாகப் போகிறதாம்!

## சஞ்சய் பாகவதர்

தியாகராஜ பாகவதர், பி.யு. சின்னப்பா காலத்தை பாலிவுட் நினைவு படுத்திக் கொண்டிருக்கிறது. ''ஆத்தி க்யா கண்டாலா'' என ஆமீர்கான் 'குலாமில்' அவிழ்த்து விட்டாரா? இப்போது சஞ்சய்தத் 'ஏய் ஷிவானி' என்று 'கூப் சூரத்'தில் பதிலடி கொடுக்கப் போகிறார். ''நான் பாடவா?'' என்று சஞ்சயே போராடிப் பெற்ற வாய்ப்பாம் இது! லலித் ஜதின் இசையமைப்பில், நான்கைந்து முறை 'ரிஹர்சித்'ததிலேயே பாடலை 'ஓகே' பண்ணி விட்டதில் பூரித்துப் போகிறார். குலாம் பாடல் எல்லோரை யும் அடிமைப்படுத்தி விட்டது! 'கூப் சூரத்' பாடலும் நன்றாயிருக்குமா என்பதை பொறுத்திருந்துதான் பார்க்க வேண்டும்! இன்னும் ஷாருக்கான், சல்மான்கான், கோவிந்தா எல்லோருக்கும் பாட்டு ஆசை வந்து விடப் போகிறதே என்று 'பப்ளிக்' கலங்குகிறது.

— ஜெயஸ்ரீ ராஜ்

# பொன்னியின் செல்வன்



### ஆறாம் அத்தியாயம்

## மறைந்த மண்டபம்



றுநாள் காலையில் உதயசூரியனுடைய செங்கிரணங்கள் வந்தியத்தேவனைத் தட்டி எழுப்பின. உறக்கம் நீங்கிய பிறகும் சுய உணர்வு வருவதற்குச் சிறிது நேரம் பிடித்தது. அவன் மேல் விழுந்தது சூரியனுடைய வெளிச்சமா அல்லது கலங்கரை விளக்கின் ஒளியா என்று தெளிவதற்குச் சிறிது நேரம் பிடித்தது. முதல் நாள் இரவு அனுபவங்களில் எது உண்மை, எது கனவு என்று எண்ணிப் பார்த்தபோது அவனுக்கு ஒரே குழப்பமாயிருந்தது. வீட்டிலே பெரியவரின் மனைவியும் அவருடைய மருமகனும் மட்டுமே இருந்தார்கள். பெரியவர் குழகர் கோயிலுக்குப் புஷ்ப கைங்கரியம் செய்வதற்காகப் போயிருப்பதாக அவர்கள் சொன்னார்கள். பூங்குழலியைப் பற்றி அவர்களிடம் விசாரிக்க அவனுக்குத் தைரியம் வரவில்லை. அவர்கள் அளித்த காலை உணவை அருந்திவிட்டுச் சுற்றுமுற்றும் கண்களைச் செலுத்தித் தேடிப் பார்த்தான். பூங்குழலி எங்கும் அகப்படவில்லை. ஆலயத்துக்குப் போய்ப் பார்க்கலாம் என்று போனான். அங்கே அவள் தந்தை இருந்தார். கோயிலைச் சுற்றியிருந்த மரங்களிலிருந்து பூஜைக்குரிய புஷ்பங்களைக் கொய்து கொண்டிருந்தார். மலர்களைத் தொடுத்து மாலையாக்குவதற்குச் சில நாள் பூங்குழலி வருவதுண்டு என்றும், ஆனால் இன்றைக்கு வரவில்லையென்றும் கூறினார். "எங்கேயாவது




கல்கி கலெக்ஷன்

அமரர் கல்கி

காட்டில் மான்களைத் துரத்திக் கொண்டிருப்பாள். அல்லது கடற்கரையோடு திரிந்து கொண்டிருப்பாள். அவளைத் தேடிப் பிடித்துக் கேட்டுப்பார்!" என்றார். "தம்பி! ஒரு விஷயத்தில் ஜாக்கிரதையாக இரு. அவள் பொல்லாதவள். தப்பர்த்தம் செய்து கொள்ளும்படியாக அவளிடம் ஏதாவது சொல்லி விடாதே. காவியங்களில் படித்திருப்பதை நினைத்துக் கொண்டு சிருங்கார ரஸத்தில் இறங்கி விடாதே! உடனே பத்திரகாளியாக மாறி விடுவாள். அப்புறம் உன் உயிர் உன்னுடையது அல்ல!" என்று எச்சரிக்கை செய்தார் பெரியவர். முதல்நாள் கனவை நினைத்துக் கொண்டு வந்தியத்தேவன் உடல் சிலிர்த்தான். பிறகு காட்டிற்குள் பூங்குழலியைத் தேடிக் கொண்டு போனான். காட்டிலே எங்கே என்று தேடுவது? சிறிது நேரத்துக்கெல்லாம் அவனுக்கு அலுத்துப் போய் விட்டது. காட்டிலிருந்து வெளியேறினால் போதும் என்று ஆகி விட்டது. வெளியேறிய பின்னர் கடற்கரையை நோக்கிச் சென்றான். கடற்கரையோடு நீண்ட தூரம் அலைந்தும் பலன் ஒன்றும் இல்லை. பூங்குழலியைக் காணவில்லை. "எப்படியும் மத்தியானச் சாப்பாட்டுக்கு வீட்டுக்கு வருவாள் அல்லவா? அங்கு பார்த்துக் கொள்ளலாம்!" என்று திரும்பினான். திடீரென்று ஓர் எண்ணம் தோன்றியது. அலையும் ஆட்டமும் அதிகமில்லாமல் அமைதியாக இருந்த அந்தக் கடலில் இறங்கிக் குளிக்க வேண்டும் என்ற ஆசை உண்டாயிற்று. இந்தப் பக்கத்தில் கடலில் ஆழம் அதிகம் இல்லையென்று முன்னமே கேள்விப் பட்டதுண்டு. முதல்நாள் மாலையில் பூங்குழலியும் சொல்லியிருக்கிறாள். பின்னே, இறங்கிக் குளிப்பதற்கு என்ன தடை? கடல் விஷயத்தில் அவனுக்கிருந்த பயத்தைப் போக்கிக் கொள்வதும் அவசியம். படகிலும் கப்பலிலும் ஏறிப் பிரயாணம் செய்ய வேண்டிய அவசியம் நேர்ந்திருக்கிறது. கடலைக் கண்டு பயப்பட்டால் முடியுமா? அந்தப் பயத்தைப் போக்கிக் கொண்டே ஆக வேண்டும்.

டுப்பைச் சுற்றிக் கட்டியிருந்த சுருள் துணியையும் கத்தியையும் எடுத்துக் கடற்கரையில் வைத்து விட்டுக் கடலில் இறங்கினான். மெள்ள மெள்ள ஜாக்கிரதையாகக் காலை எடுத்து வைத்து நடந்தான். போகப் போக முழங்கால் அளவு ஜலத்துக்கு மேல் இல்லை. சிறிய அலைகள் வந்து மோதிய போது ஜலம் இடுப்பளவுக்கு வந்தது. அதற்கு மேலே இல்லை. "அழகான சமுத்திரம் இது! அமிழ்ந்து குளிப்பதற்குக் கூடத் தண்ணீர் இல்லையே?" என்று சொல்லிக் கொண்டே இன்னும் மேலே சென்றான்.

அடேடே! ஆழம் இல்லை என்று எண்ணிக் கொண்டே கரையிலிருந்து வெகு தூரம் வந்து விட்டோமே? திடீரென்று கடல் பொங்கினால்? அலைகள் பெரிதாகி மோதினால்? இந்த எண்ணம் தோன்றிக் கரைப் பக்கம் திரும்பிப் பார்த்தான். அதிக தூரம் கரையிலிருந்து வந்து விட்டது என்னமோ உண்மைதான்! ஆனால் அப்படியொன்றும் கடல் திடீரென்று பொங்கி விடாது!... ஓகோ! அதோ பூங்குழலி வருகிறாளே! கரையேறி அவளைப் பிடித்துக் கொள்ள வேண்டும். பிடித்துக் கொண்டு நயமான வார்த்தைகளினால் மறுபடி கேட்க வேண்டும். அவளும் நம்மைப் பார்த்து விட்டுத்தான் வருகிறாள் போலிருக்கிறது! நாம் இருக்கும் திசையை நோக்கியே வருகிறாள்! ஏதோ நம்மைப் பார்த்து சமிக்ஞைகூடச் செய்கிறாளே!....

ஓ! ஓ! இது என்ன? கரையில் குனிந்து அவள் என்ன பார்க்கிறாள்? என்னத்தை எடுக்கிறாள்? நம்முடைய இடுப்பில் சுற்றும் சுருள் துணியையல்லவா எடுக்கிறாள்? "பெண்ணே! அதை எடுக்காதே! அது என்னுடையது!..." நாம் சொல்வது அவள் காதில் விழவேயில்லை! இந்தக் கடல் அலைகளின் இரைச்சல்!

இதோ நம் குரல் அவளுக்குக் கேட்டு விட்டது! நம்மைப் பார்த்து அவளும் ஏதோ சொல்கிறாள்! "பூங்குழலி! அது என்னுடையது! எடுக்காதே... இந்தா! சொன்னால் கேட்க மாட்டாயா? உன் உடைமை போல் கையில் எடுத்துக் கொண்டு நீ பாட்டுக்குப் போகிறாயே! நில்! நில்!...."

வந்தியத்தேவன் கரையை நோக்கி ஓட ஆரம்பித்தான். ஒரு தடவை பூங்குழலி அவனைத் திரும்பிப் பார்த்தான். பிறகு அவளும் ஓடத் தொடங்கினாள். வீடும்

லாம் மாடு மேய்ச்சிக்கிட்டோ, தப்பறை அடிச்சிக் கிட்டோ இருக்காம, ஆபீசிலே வந்து என் உயிரை ஏன் வாங்கறே?''ன்னு வங்கியிலே கத்தினதா புகார் கொடுத்திருக் கான் வேலு.

''பொய்'' என்று நான் கத்த, 'அதுதான் எனக்குத் தெரியுமே' என்பது போல் மௌனமாக இருந்தார் கான்ஸ்டபிள்.

''வேலு சொன்னா போலீஸ் நம்பிடுமா?''

''நீங்க அப்படித் திட்டினதுக்கு ரெண்டு பேரோட சாட்சியும் இருக்கு. பிரதாபன், மோகனன்.''

''புதுடில்லியில் உள்ள அ.தி.மு.க. எம்.பிக்கள் சென்னை டான்சி நிலத்தை எப்படி குறிப்பிடுவார்கள்?''

''எப்படி?''

''அம் மாநிலத்தில் உள்ள அம்மா நிலம்!''

— எஸ். சுந்தரி



உறைந்து போனேன். பிரதாபன் - நான் கடன் கொடுக்க மறுத்த அயோக்கியன். மோகனன் - மற்றொரு வங்கி ஊழியன். ஊரெங்கும் கடன் வாங்கியுள்ள அவனை வேலு பணம் கொடுத்து வளைத்திருக்க வேண்டும்.

''அப்படியே இருந்தாலும் என் தரப்பைக் கேட்க வேண்டாமா உங்க இன்ஸ்பெக்டர்?''

''சார், அது போலீஸ் ஸ்டேஷன். நீதி மன்றம் இல்லே. தவிர இது போலீஸைப் பொறுத்தவரை ஜாமீனில் விடமுடியாத குற்றம். அதனாலே அரெஸ்ட் வாரண்ட் கூடத் தேவையில்லை'' என்றவர் சற்றே சன்னமான குரலில், ''புதிதாக வந்திருக்கும் இன்ஸ்பெக் டரும், வேலுவும் ஒரே ஜாதி சார்'' என்றார்.

**வா**னில் பயணம் செய்து நட்சத்திரங் களைத் தொடலாம் என்ற நம்பிக்கையோடு இருந்த நான், சமநிலத்தில் கூட இருக்க முடி யாமல் சிறிது சிறிதாக புதைமணலில் இறங்கிக் கொண்டிருந்தேன்.

லாக்கப்புக்குள் ஓரிரவைக் கழிக்க நேர்ந்த அவலத்திலேயே குறுகிப் போயிருந்த என்னை அந்த இன்ஸ்பெக்டர் இளைஞன் கேட்ட கேள்வி மேலும் நோகடித்தது.

''நாட்டுக்குச் சுதந்தரம் கிடைச்சு அம்பது வருஷமாச்சு. இன்னமும் அந்த ஜாதி வெறி போகல்லியாடா உங்களுக்கு?''

யாருக்கு ஜாதி வெறி? எனக்கா, வேலு வுக்கா, இந்த இன்ஸ்பெக்டருக்கா, இந்த நாட்டுக்கா?

''என்ன சொல்லப் போறே? அப்படி எது வும் நீ சொல்லல்லேன்னா? சொல்ல விருப்பே. நான் காலேஜிலே சேரும்போது உன் ஜாதியைச் சேர்ந்த ப்ரின்ஸிபால் 'உன் ஜாதி என்ன?'ன்னு என் கிட்டே கேட்டு, என் பதில் காதிலே விழாத மாதிரி நடிச்சு, ஆறுமுறை என் ஜாதிப் பெயரை சொல்ல வைத்து சந்தோஷப் பட்டான் தெரியுமா, ராஸ்கல்.''

**அ**டுத்த நாள் காலை வேலைமெனக் கட்டு போலீஸ் ஸ்டேஷனுக்கு வந்திருந்தான் வேலு. ''என்ன சார், லாக்கப்பிலே கொசு கடிச்சதா? இன்னிக்கு கோர்ட்டுக்கு அழைச் சிட்டுப் போவாங்க. ஒருவேளை ஜட்ஜ் ஐயா உங்களைப் பதினைந்து நாள் நீதிமன்றக் காவலிலே வைக்கச் சொல்லலாம். அப்ப வேணா நீங்க ஜாமீனுக்கு மனு போடலாம். என்ன, தீர்ப்பு வரும்வரை தினமும் ஒருமுறை போலீஸ் ஸ்டேஷனுக்கு வந்து கையெழுத் துப் போட வேண்டியிருக்கும். அதிகபட்ச தண்டனையான ஏழு வருஷ சிறை வாசம் கூட உங்களுக்குக் கிடைக்கலாம். அவ்வளவு ஸ்ட்ராங்காக சாட்சிகள் இருக்கு என் பக்கம்.''

''வேலு நிஜத்தை சொல்லுங்க, உங்களை நான் அப்படி ஏசினேனா?'' என்று ஆக் ரோஷத்துடன் நான் கத்தியபோது அதிர்ச்சி யுடன் அந்த இன்ஸ்பெக்டர் என் பக்கம் திரும்பினார்.

**வே**லு கூறியபடிதான் நடக்கத் தொடங்கியது.

அப்பழுக்கில்லாத என் கடந்த காலத்தின் மேல் பல கரும்புள்ளிகள் குத்தப்பட்டன.

''மெட்ராஸ்காரன் இங்கே வந்து தன் ஜாதிவெறியைக் காட்டிட்டான். என்ன படிச்சாலும் இந்த ஜாதி தெனாவட்டு மட்டும் போகல்லே பாத்தியா?''

"படிச்சவனுக்குத்தான் இந்த வெறி அதிகம் இருக்குண்டா."

"எனக்குக் கூட இவன் கடன் கொடுக்க மாட்டேன்னான். இப்பத்தான் தெரியுது, என் ஜாதியைப் பார்த்துத்தான் அவன் மாட்டேன்னு சொன்னது."

"அப்போ உங்க அண்ணாத்தைக்கு மட்டும் எப்படி லோன் கொடுத்திருப்பான்?"

"ஏதாவது லஞ்சம் வெட்டியிருப்பான்."

நிர்வாகம் கைவிரித்தது. "ஸென்ஸிடிவ் மேட்டர். வழக்கு முடிவாகும்வரை மணி கண்டனுக்கு வேறெங்கும் மாற்றல் கொடுக்க முடியாது" என்றது. தீர்ப்பு எனக்குப் பாதக மென்றால் வேலையை நான் இழக்க நேரிடும் என்பது புரிந்தது.

எங்கள் தொழிற்சங்க அமைப்பும் மௌனம் சாதித்தது. அதன் முக்கிய தலை வர்களில் சிலர் ஜாதி சார்ந்த கூட்டமைப் பில் பதவிகள் வகித்தது முக்கிய காரணம்.

தீர்ப்பு வரும்வரை ஜாமீனில் எனக்குத் தாற்காலிக விடுதலை கொடுத்திருந்தது நீதி மன்றம். வழக்கம் போல் அன்றும் போலீஸ் ஸ்டேஷனில் கையெழுத்திட்டு விட்டு வெளிவந்த



"அந்த போலீஸ்காரருக்கு பயங்கரப் பேராசைன்னு எப்படி சொல்றே?"

"நம்ம இசையமைப்பாளர் பழைய டியூன்களைத் திருடறதால மாமூல் தரணும்னு கேட்குறான்!"

— வடபழனி பாலு

போது, எதிரில் அப்பா!

முகம் வெளுத்துப் போய், ஆரோக்கியத் தில் பாதியைத் தொலைத்தவராய்த் தென் பட்டவரைக் கட்டிக் கொண்டு கதறத் தொடங்கினேன். வருங்காலத்தைத் தொலைத்து விட்ட அச்சம் கண்ணீராக உடைப்பெடுத்தது. அவரது கைகள் என் னைத் தட்டிக் கொடுத்தாலும், அவர் நடுங்கு வதை என்னால் உணர முடிந்தது. என் முன் னேற்றத்தைப் பற்றி எவ்வளவு நம்பிக்கை வைத்திருந்தார்.

"நீ ரொம்ப பொறுமைசாலியாச்சே மணி கண்டா. நீ எப்படி?... சரிசரி எல்லாம் போதாத காலம் கண்ணா. இனி ஆவதைப் பார்க்கலாம் வா."

அப்படியென்றால் அப்பாவும் தன்மீது சுமத்தப்பட்ட பொய்யை நம்புகிறாரா? வெறி பிடித்தவன் போல் கர்ஜிக்கத் தொடங்கி னேன். "உங்க மேல ஆணையா நான் எந்த ஜாதியையும் கேவலமா பேசல்லே. ஆனா இப்போ பேசத் தோணுதுப்பா. தப்பு செய் யாமலே சிறைக்குப் போவதைவிட அந்தக் குற்றத்தைச் செய்துவிட்டே தண்டனையை அனுபவிக்கலாம்னு தோணுதுப்பா." மேலே பேசவிடாமல் பின்னாலிருந்து என் வாயை யாரோ பொத்தினார்கள். திரும்பினேன். இன்ஸ்பெக்டர்!

"வேணாம் மிஸ்டர் மணிகண்டன். அப்போ செய்யாத தவறை இப்போ செய்து டாதீங்க. உங்க மேலே பொய் கேஸ் ஜோடித் திருக்கிறான் அந்த வேலுன்றதை நான் இப்போ நம்பறேன். இந்தக் கேஸை அவனை வாபஸ் வாங்க வைக்கிறேன். வேறு பல சிக்கல்களில் அவன் மேலே எங்களுக்குப் புகார் வந்திருக்கு. அதைப் பயன்படுத்தி என்னால் இதை சாதிக்க முடியும்... ஒரு ப்ரின்ஸிபால் செய்த தவறுக்காக ஜாதி வெறியை நான் வளர்த் துக்கிட்டது தப்புதான். ஒரு வேலுவின் காரண மாக அதே தப்பை நீங்களும் செய்திடா தீங்க. உங்க இழப்பு அதிகம்தான். அதுவும் நேர்மைக்குப் பரிசு தண்டனைன்னா மனம் கொந் தளிக்கத்தான் செய்யும். இருந்தாலும் ஒரு பெரிய தீயை அணைக்கற முயற்சியில் உடம்பிலே சில காயங்களைப் பட்டுக் கிட்டதா நினைச்சுக்குங்க. ரணமாத்தான் போயிடும். இருந்தாலும் எனக்காகவோ, வேலுவுக்காகவோ கூட இல்லே, நம்ம நாட்டுக்காக இதை மன்னிச்சுடுங்க."

என் நெஞ்சில் ஓங்கி வளரத் தொடங்கிய வலி கலந்த வெறி, கொஞ்சம் கொஞ்சமாக அடங்கத் தொடங்கியிருந்தது.

# காதல் இலவம்

மகாகவி பாரதியார் காரணமாக கங்காதரனுக்குக் காதல் என்பது ஒரு பெரிய பிரச்னையாகி விட்டது. அவன் கல்லூரியில் படித்துக் கொண்டிருந்த நாட்களில் ஒரு நாள் மவுண்ட் ரோடு வழியே நடந்து போய்க் கொண்டிருக்கும்போது "பாரதியார் விழா" என்று ஒரு 'பேனர்' பார்த்தான். எந்த வித எதிர்பார்ப்பும் இன்றி 'ஜஸ்ட் லைக் தட்' அரங்கத்தினுள் நுழைந்தான்.

அங்கே ஒருவர், "காதல், காதல், காதல்; காதல் போயின், காதல் போயின் சாதல், சாதல், சாதல்!" என்று உணர்ச்சிகரமாக முழங்கிக் கொண்டிருந்தார்.

அந்த வார்த்தைகள் கங்காதரன் உள்ளத்தில் ஆழமாகப் பதிந்தன. அதற்கான விளக்கம் அதைவிட ஆழமாக! 'காதலில் தோல்வி கண்டால் சாதல் என்று பலர் எண்ணுகிறார்கள்; அது அல்ல பாரதியின் கருத்து. காதல் இல்லாத வாழ்க்கை உயிரோட்டமில்லாதது; சாரமற்ற, நடைப் பிணம் போன்ற வாழ்க்கையாகும்" என்று விரிவுரை வழங்கினார்.

அன்றுமுதல் கங்காதரனுக்கு 'ஏதோ காலத்தை ஓட்டுகிறோம் என்பது போல் தன் வாழ்க்கை அமைந்து விடக் கூடாது, அதில் காதல் நிச்சயம் இடம்பெற வேண்டும்' என்ற எண்ணம் உருவாகிவிட்டது. பாரதி ரசிகனானான்.

அவன் வசித்த தெருவிலேயே ஏழாம் நெம்பர் வீட்டில் ரம்யா இருந்தாள். தாவணிப் பருவத்தில் தளதளத்துக் கொண்டிருந்த அழகி. இவன் வீட்டுக்குக் கூட இவன் அம்மாவைப் பார்க்க "மாமி மாமி" என்று சர்க்கரைப்பாகுக் குரலில் அழைத்தபடியே சில முறை வந்திருக்கிறாள். "ரம்யாவுக்கு ரவையில் எது பண்ணினாலும் பிடிக்கும். ரவா கேசரி, ரவா உப்புமா, ரவா பாயசம், ரவா இட்டிலி, ரவா பொங்கல்... ரவா வடை.... ரவா பஜ்ஜி... ரவா பூரி..." என்று அம்மா அவனைக் கிண்டலடித்திருக்கிறாள்.

'ஒருவருடைய அன்பை அவர் வயிற்றின் மூலமாக மிகச் சுலபமாகப் பெற முடியும்' என்று அவன் எப்போதோ படித்திருக்கிறான். எனவே ஒரு துண்டுக் காகிதம் எடுத்து, 'ராவ்ஜி கான்டீனில் ரவாதோசை சாப்பிட்டதுண்டா? சரியாக மாலை 4:30 மணிக்கு வந்து விடவும்' என்று எழுதினான். பக்கத்து வீட்டு வாண்டு வசந்திடம் கொடுத்து அனுப்பினான். கிளாஸ் 'கட்' அடித்து ஆவலோடு காத்திருந்தான். 'ரம்யா... ரம்யா.... ரம்யா...'

'வந்துட்டேன்' என்ற உறுமல் குரல் கேட்டு திடுக்கிட்டுத் திரும்பினான். கோடி வீட்டு குண்டு கோமளா! "லெட்டர் கிடைச்சது, ரொம்ப தாங்க்ஸ்" என்றாள். பெண் ரெஸலர் மாதிரி அன்றைய டிபன் அய்ட்டம் அத்தனையையும் ஒரு வெட்டு வெட்டினாள். ராவ்ஜிக்கு கடன் சொல்லி ஒரு மாதம் போல அவருக்காக அவ்வப்போது உழைத்துக் கடன் அடைத்தான். வாண்டு வசந்தை தட்டிக் கேட்டால் தன் குட்டை உடைத்து விடுவான் என்ற பயம் தோல்வியை ஒப்புக் கொள்ள வைத்தது.

என்றாலும் வெற்றிக்கு முதல்படி தோல்விதான் என்று ஸெல்ஃப் இம்ப்ருவ்மெண்ட் கட்டுரைகளில் படித்திருப்பதை நினைவு படுத்திக் கொண்டு அடுத்த முயற்சியில் இறங்கினான்.

கல்வியாண்டின் தொடக்கத்தில் சித்ரா புதிதாக வந்து சேர்ந்தாள். சித்திரத்தில் எழுதியது போல்தான் இருந்தாள். ஸ்பிரிங் கேசத்தைப் படிய வார முடியாததால் பம்மிக் கொண்டிருந்தது. குட்டைப் பின்னல், பட்டர் ஃபிளை ரிப்பன். அவள் பார்வைதான் கங்காதரனை அசத்திவிட்டது. அதில் அன்பு, மகிழ்ச்சி, எதிர்பார்ப்பு எல்லாம் குரூப் டான்ஸ் ஆடின. குளம்போல் அகன்ற கண்கள், முங்கி நீச்சலடிக்கலாம் போல ஆழமான நோக்கு. இது காதலாகத்தானே இருக்க வேண்டும்!

**கி. ராஜேந்திரன்**

அவன் பார்வையை அவன் எதிர் கொண்டான். புன்னகை மலர்ந்து, சிரிப்பாக மாறி, ஹலோ சொல்லி, புதிய சல்வார் கமீஸ் அணிந்து வந்தபோது ''பியூட்டிஃபுல்'' என்று பாராட்டுகிற அளவுக்கு முன்னேறினான்.

நண்பனிடம் ஸ்கூட்டர் கடன் வாங்கி, அவள் அருகே நிறுத்தி, 'லிஃப்ட்' என்று கேட்க அவளும் 'ஷ்யூர், தாங்க்ஸ்'' என்று கூறி பிலியனில் அமர்ந்தபோது ஒரே கிளுகிளுப்பாய் இருந்தது.

கடற்கரையில் அலைகள் காலைத் தொட அமர்ந்து, அவள் அவனை ஏறிட்டுப் பார்த்த போது இலேசாக கண்கள் கலங்கியிருக்கக் கண்டான். ''என்னம்மா சித்ரா? எதுக்கு வருத்தப் படறே? நாம ஒரு தப்பும் செய்துடலையே...''

''அதுக்கில்லீங்க... உங்ககிட்ட ஒண்ணு சொல்லணும்... தப்பா எடுத்துக்க மாட்டீங்களே...''

''சே!சே! சொல்லு சித்ரா!''

''முதல் முதல்ல உங்களைப் பார்த்த கணத்துலேர்ந்து, ஆறு மாசத்துக்கு முன்னாடி ஆக்ஸிடெண்ட்ல செத்துப் போன என் அண்ணன் ஞாபகம் வந்துக்கிட்டேயிருக்கு. நான் அவனை ரொம்ப 'மிஸ்' பண்ணறேன்...'' என்று அவள் ஆரம்பித்த போதே கங்காதரன் இதயம் சில்லிட்டுப் போயிற்று. தன் ஏமாற்றத்தை மறைக்க அலைகளையே பார்த்தான்.

சித்ரா தொடர்ந்து பேசிக் கொண்டே போனாள்: ''எங்கிட்ட ரொம்ப பாசம் வைச்சிருந்தான். நான் கண் கலங்கினா தாங்கவே மாட்டான். நான் சிரிச்சா உலகத்தையே ஜெயிச்ச மாதிரி சந்தோஷப்படுவான். 'எனக்காக என் அண்ணன் உயிரையே கொடுப்பான்'னு பெருமையா சொல்லிக்கிட்டுத் திரிஞ்சேன். கடைசில ஸ்கூட்டர் ஆக்ஸிடண்ட்ல லாரி மோதி...'' விசும்பி விசும்பி அழ ஆரம்பித்த அவளை சமாதானப்படுத்துவதற்குள் போதும் போதும் என்றாகி விட்டது கங்காதரனுக்கு.



''உன் அண்ணனாகவே நான் இருப்பேன், கவலைப்படாதே'' என்று சொல்லித் தேற்றினான்.

இரண்டாவது காதலும் செத்து மடிந்த பிறகும் கங்காதரன் நம்பிக்கை இழக்கவில்லை. ஓரிரு மாதங்களுக்குப் பிறகு மாட்னி பார்த்துவிட்டு பஸ்ஸில் ஏறிய போது அவளைச் சந்தித்தான். சற்று முன் பார்த்து விட்டு வந்திருந்த சினிமாவின் கதாநாயகியைவிட ஆயிரம் மடங்கு அழகாகத் தோன்றினாள். தலைக்குக் குளித்திருந்தாள் போலும், தளர்த்தியாகப் பின்னியிருந்தாள். ஆரஞ்சு நிறத்தில் நூல் புடைவை, மருதாணி இட்ட விரல்கள், கனகாம்பரம், நெற்றிப் பொட்டு கூட உதய சூரியன் நிறம்! இப்படி அலங்காரத்தில் கவனம் செலுத்தியிருந்தாலும் அடக்கமாகத் தோற்றமளித்தாள். அவன் தன்னைக் கவனிக்கிறான் என்று தெரிந்ததும் வேறு பக்கம் திரும்பிக்

அடுத்த இதழில்

# குண்டு வெச்சிருக்கேன்!

கிருஷ்ணா எழுதும்

திக் திக் மினி தொடர் ஆரம்பம்!

கொண்டாள். ஆனபோதிலும் ஒரு சின்னப் புன்னகை பளிச்சிடத்தான் செய்தது. அதில் பெருமிதமும் இலேசான ஏளனமும் கலந்திருப்பது போல் தோன்றியது.

கண்டக்டர் முன்னேறச் சொன்னதையும் பொருட்படுத்தாமல் நின்றான். அவன் இறங்க வேண்டிய ஸ்டாப் தாண்டி பஸ் போய்க் கொண்டேயிருந்தது! அவள் இறங்கி நடந்த போது தானும் இறங்கி பின்னால் சென்றான். திருவி.க. காலனி 4வது தெருவில் பெட்டி போன்ற ஒரு சிறு வீட்டுக்குள் அவள் நுழையும் வரை, 'நிமிர்ந்த நன்னடை, நேர் கொண்ட பார்வை' என்ற வரிகளை அவள் அவனுக்கு நினைவூட்டிக் கொண்டேயிருந்தாள்.

இந்த நாடகம் நாலு நாட்கள் நடந்தது. ஐந்தாம் நாள், 'இன்று ஹலோ சொல்லி விட வேண்டியதுதான்; ஜோசியப் பகுதியில் கூட 'காதல் கனியும்' என்று போட்டிருக்கு' என்று தீர்மானித்தவனாக சற்று வேகமாக நடைபோட்டான், அவளை முந்தும் நோக்கில்.

அப்போதுதான் இடி விழுந்தது போல பிடரியில் ஒரு கை தாக்கி, காலரைப் பற்றி தரதரவென்று சாலையோரப் பிள்ளையார் கோயிலுக்குப் பின்புறம் இழுத்துச் சென்றது. அங்கே இன்னொரு தடியன். இருவரும் மாறி மாறி தர்ம அடி கொடுத்ததுடன், "லவ்வு கேட்குதா லவ்வு? ஒரு பொண்ணு அழகா இருக்கப்படாதா? உடனே ஸைட் அடிச்சு, ஃபாலோ செஞ்சு அவளைக் கெடுக்க நினைக்கணுமா?" என்று மாறி மாறி தர்மோபதேசமும் செய்தார்கள்.

அவர்கள் அவளுடைய உறவினர்கள் என்பதும் அவர்களுடைய உதவியை அவள் நாடியிருக்கிறாள் என்பதும் அவர்கள் பேச்சிலிருந்து தெரிய வந்தது. "இன்னொரு தடவை வத்சலா ஏறுகிற பஸ்ஸில நீ ஏறினே, காலை ஒடிச்சுப்புடுவேன், இப்படி...." என்று கூறியபடியே கங்காதரனுடைய இடது கரத்தை ஒரு முறுக்கு முறுக்கினான் ஒருவன்.

அந்தக் கை மறுபடி சாதா நிலைக்குத் திரும்ப இரண்டு மாசம் ஆனது. அத்துடன் காதல் விவகாரங்களுக்கு ஒரு முழுக்குப் போட்டான்.

கங்காதரனின் பெற்றோரிடம் பெண்ணைப் பெற்றவர்கள் ஜாதகங்கள் கொண்டு வந்து கொடுத்தார்கள். காதலுக்கு குட்பை சொல்லியிருந்த கங்காதரனோ, சுவாரஸ்யமின்றி "உனக்குப் பிடித்திருந்தால் சரிம்மா" என்று தாயாருக்கு தேர்வாணை வழங்கி விட்டான். கூடவே இன்னொரு எண்ணமும் எட்டிப் பார்த்தது: 'காதலித்துக் கல்யாணம் பண்ணிக் கொள்ள முடியாவிட்டால் என்ன? கல்யாணம் செய்து கொண்டவளைக் காதலிக்க முடியாதா? ஏன் அப்படி நடக்கக் கூடாது?'- முளைவிட்ட எண்ணம் சீக்கிரமே ஆலமரமாக வளர்ந்தது. பெண் பார்க்கப் போனபோது பஜ்ஜி சொஜ்ஜியை மட்டுமின்றி ராதிகாவையும் ரசித்தான். 'பேரழகி என்று சொல்ல முடியாதுதான். ஆனாலும் மோசமில்லை. பார்க்கப் போனால் ஒரு குறிப்பிட்ட ஆங்கிளில் அழகாகவே இருக்கிறாள். சினிமா ஸ்டார்கள் மட்டுமென்ன, காமிரா ஆங்கிளைத்தானே நம்பியிருக்கிறார்கள்... இவளும் கொஞ்சம் மாடர்னாக டிரெஸ் பண்ணிக் கொண்டால் நெஞ்சை அள்ளிக் கொண்டு போய் விடுவாள்...' நாளாவட்டத்தில் ராதிகா அவன் பார்வையில் எழிலரசியாகவே தோன்ற ஆரம்பித்து விட்டாள்!

டும்டுடக்கா முடிந்து, முதலிரவு. 'கல்யாணம் செய்து கொண்டவளைக் காதலிப்பது' என்ற தன் தீர்மானத்தை மறக்காத கங்காதரன், 'அன்பாகப் பேசி அவள் மனசை முதலில் புரிந்து கொள்ள வேண்டும், அப்புறம்தான் தொட வேண்டும்' என்று முடிவு கட்டி, எப்படி ஆரம்பிப்பது, என்ன பேசுவது என்றெல்லாம் யோசித்து வைத்திருந்தான்.

ராதிகா கதவு திறந்து பால் செம்புடன் உள்ளே நுழைய, மேலும் ஆவலானான்.

பால் செம்பை மேசை மேல் 'ணங்'




கொண்டு வைத்தவள், ''என்னை மன்னிச்சுடுங்க'' என்றதும் திடுக்கிட்டான். கட்டில் விளிம்பில் உட்கார்ந்து, ''இன்னிக்கு ஒண்ணும் வேணாங்க'' என்றாள்.

''பூ இவ்வளவுதானே!'' இதற்குத் தயாராகவே இருந்த கங்காதரன், ''பயப்படாதே ராதிகா, என்ன அவசரம்? இன்னும் எத்தனையோ இரவுகள் நமக்காகக் காத்துக்கிட்டிருக்கு. இன்னிக்கு சும்மா பேசிட்டிருப்போம், போதும். உன்னைப் பற்றி... என்னைப் பற்றி நம்மைப் பற்றி...''

''எதுவுமே வேணாங்க... நான்தான் சொல்றேனில்ல... ஒரே தலைவலி... ராத்திரி மூணு மணி நேரம்தான் தூங்க முடிஞ்சுது... அப்புறம் ஹோமப் புகை வேற... மத்தியானமும் ரெஸ்ட் எடுக்க விடலை... நலங்கு, கிரகப்பிரவேசம்னு இழுக்கடிச்சுட்டாங்க... மண்டை பிளக்குதுங்க'' என்றவள் அவன் கண்ணெதிரேயே ஒரு மாத்திரை பிரித்து விழுங்கினாள்; படுத்தாள்... ஒரே நிமிஷத்தில் சீரான குரட்டை ஒலி. தாளம் தப்பாத தவளை சங்கீதம்!

கங்காதரன், 'காதல் என்றால் என்ன?' என்று யோசித்தபடியே விடிய விடிய விழித்திருந்தான். அன்றுமட்டுமல்ல... பல ஆண்டுகள்... விடை காணாத பல பகல்கள்... இரவுகள்!

இப்போது கங்காதரனுக்கு வ்யது ஐம்பத்தெட்டு. மகனுக்குக் கல்யாணமகி இவனுக்குப் பேரன் பிறந்திருந்தான். சம்பந்தி தஞ்சாவூரில். ஒன்றரை சவரனில் ஒரு சங்கிலி வாங்கிக் கொண்டு பேரனைப் பார்க்க மனைவியுடன் ரயிலேறினான். மகன் ஏற்கெனவே அங்கிருந்தான். ராதிகா முதலில் மகனைக் கட்டி அணைத்து தன் சந்தோஷத்தை வெளியிட்டாள். அப்புறம் பால் குடித்த மயக்கத்தில் தூங்கிக் கொண்டிருந்த பேரனை அலுங்காமல் அள்ளிக் கொண்டாள். ''மூக்கும் முழியுமா எவ்வளவு லட்சணமாயிருக்கான்! என் கண்ணே பட்டுடும் போலிருக்கு'' என்றாள். விரல்களை முத்தமிட்டாள். ''பூ தொடுத்து வைச்ச மாதிரி எத்தனை கச்சிதம்..' உட்காருங்க'' என்று உத்தரவு போட்டாள், கணவனை கர்வமாகப் பார்த்து. அவன் கீழ்ப்படிந்தான். மடியில் குழந்தையைக் கிடத்தினாள். பின்னர் குழந்தையின் கன்னத்தை, பட்டது தெரியாமல் கிள்ளி, இரு விரல்களை உதட்டில் வைத்து முத்தமிட்டாள். ''ஏதாச்சும் சொல்லுங்களேன்'' என்றாள்.

கங்காதரனுக்கு என்ன சொல்வது என்று தெரியவில்லை. அன்பும் மகிழ்ச்சியும் பெருமிதமும் பாசமும் பொங்கி பிரவாகமாகப் பெருக்கெடுக்க, அவன் மனைவியைப் பார்த்தான். அதே உணர்வுகளை 'அவள் பார்வையிலும் கண்டான். இருவர் கண்களும் நீர்த்திரையிட்டிருந்தன.

'காதல் என்றால் என்ன' என்பது கங்காதரனுக்குப் புரிந்து விட்டது!

'காலம் முற்றும் தொழுதிடல் வேண்டும்
காதலென்பதோர் கோயிலின் கண்ணே'

என்பதும் பாரதி பாடிய வரிகள்தானே என்று அவன் மனம் அசை போட்ட போது, தன் மனைவியின் விரல்கள் தன்னிச்சையாகத் தன் கை விரல்களுடன் கோத்துக் கொள்வதை உணர்ந்தான். மடியில் பேரன் அசைந்து கொடுத்து, 'என்னையும் சேர்த்துத்தான்' என்பது போல் தூக்கத்திலேயே புன்னகைத்தான்!

# அனுபவம் எனும் பள்ளிக்கூடம்

பெட்ரோலிய எண்ணெய் எடுக்கும் தொழில் "ஓகோ!" என்று போய்க் கொண்டிருந்த காலம். நான் ஒரு நல்ல நிறுவனத்தில் – வேகமாக வளர்ந்து வரும் ஒரு நிறுவனத்தில் சேர்ந்தேன். அந்த நிறுவனம் எண்ணெய் எடுப்பதற்கு உபயோகிக்கப்படும் களிமண்ணிலிருந்து, பேரியம் சல்பேட் எனப்படும் பொருளிலிருந்து, மிஷினுக்குப் போகும் எண்ணெய் வரை, தயாரித்து விற்றது. அதிலும் ஒரு புதிய துறையில் இறங்கி இருந்தது. 'பாலிமர்' எனப்படும் கொழகொழப்பான பொருள்; துரப்பணம் செய்வதற்குப் பெரிதும் உதவும் பொருள் – இந்தப் புதிய துறைக்கு நல்ல எதிர்காலம் இருந்தது.

அதன் தலைவர் ஒரு முன்னாள் பேராசிரியர். அவர் பல்கலைக் கழகத்தில் பெட்ரோலியத் துறையில் மாணவர்களுக்குப் பாடம் சொல்லிக் கொடுத்தவர். அங்கே ஆசிரியர்கள் தங்கள் பாடம் சம்பந்தமான தொழில் துறையுடன் நெருங்கிய சம்பந்தம் கொண்டிருப்பார்கள். எனவே ஒருநாள் பேராசிரியர் தமது ஆசிரியர் வேலையை விட்டு விட்டு தொழிலில் இறங்கி விட்டார். நான்கு ஆண்டுகளில் அந்த நிறுவனம் மிகப் பெரும் வளர்ச்சியை எட்டியது.

நிறுவனத்திற்குச் சொந்த விமானம் இருந்தது. மொத்தம் 120 பணியாளர்கள். தொழில் துறையில் நல்ல பேர். புதிய துறை. இந்தத் துறை பற்றி யாருக்கும் அதிகம் தெரியாத ஒரு காலகட்டம். பேராசிரியர் மகா புத்திசாலி. அதே சமயம் கோபமும் படபடப்பும் அதிகம் கொண்டவர். நிர்வாகக் குழு அமர்ந்திருக்கும் அறையில் நுழைகிறார் என்றால், அங்கே காற்றிலே கூட நிசப்தமும், அச்சமும் கவனமும் கலந்திருக்கும். அவர் சொல்வதுதான் வேதம். பேராசிரியர் அல்லவா? கூட்டங்களை ஒரு வகுப்பு போலவே நடத்துவார். பெட்ரோலியத் துறை அறிவு பெற இதைவிட வேறெங்கும் வாய்ப்புக் கிடைக்காது.

எனக்கு ஓரளவு அடிப்படைப் பயிற்சி இருந்ததால் நான் வேகமாக நிலைமையைப் புரிந்து கொண்டேன். இதைவிட சுவையான விஷயம், நம்மைப் பார்க்க வருகின்ற விற்பனையாளர்கள்தான். அவர்களிடமிருந்து புதிய பொருட்கள் பற்றியும் மாற்று நிறுவனங்களின் பொருட்கள் பற்றியும் நிறைய தெரிந்து கொள்ளலாம். அப்படியும் தெரிந்து கொண்டேன். ஒவ்வொரு வாரமும், அமெரிக்க நிர்வாக இயல் சங்கம் வெளியிடும் வார இதழும் என் மேஜைக்கு வந்துவிடும்.

இப்படி அங்கு உள்ள அனைவரும் தொழில் துறை ஞானம் பெற அவர் பெரும்பாடுபட்டார். நாங்கள் எங்கள் நிறுவனத்தை "ஒரே ஒரு மனிதனால் ஆன பல்கலைக் கழகம்" (One man University) என்று சொல்வதுண்டு.

நான் அங்கு வேலை பார்க்கத் துவங்கி இரண்டு மாதம் ஆகியிருக்கும். என் மேற்பார்வையில் ஒரு யந்திரப் பிரிவு, ஒரு கம்ப்யூட்டர் பிரிவு, ஒரு ரசாயன சோதனைக் கூடப் பிரிவு என்று மூன்று துறைகள் இருந்தன. எல்லாவற்றிலுமே நல்ல திறமை வாய்ந்த தலைவர்கள் இருந்தார்கள். எனவே நிர்வகிப்பதில் கஷ்டமில்லை.

ஒருநாள் எங்கள் தலைவரிடம் போய், "எல்லாம் சரியாகப் போய்க் கொண்டிருக்கிறது. ஏதேனும் புதிய பொருளை விற்பனைக்குக் கொண்டு வர விரும்புகிறீர்களா?" என்றேன்.

அவர் அன்றிருந்த மனநிலையும் சரியில்லை; அவர் தம் மனைவியுடன் ஹவாயிக்கு பத்து நாள் விடுமுறை எடுத்துக் கொண்டு செல்லத் தயாராக இருந்தார். நான்



கேட்டதோ "ஏதாவது சவால்கள் இருக்கின்றனவா?" என்ற தோரணையில் தோன்றியது போலும்! அவர் என்னைப் பார்த்தார்.

"ஆய்வுக் கூடத்தில், மிகப் பெரிய போட்டி நிறுவனமான 'பேராய்டு' தயாரித்திருக்கும் செல்லுலோஸ் (பஞ்சுத் தூள்) பக்கெட் இருக்கிறது. சென்று பார்! பஞ்சுத் தூள் அடியில் தங்கிக் கட்டியாக மாறிவிட்டது. மேலே அதை கரைக்க வேண்டிய திரவம் தனியாக நின்று கொண்டிருக்கிறது. என்ன செய்ய முடியுமென்று பார்! இது நல்ல கரைசலாக இருந்தால் நல்ல மார்க்கெட் இருக்கிறது" என்று ஒரு வெடிப்புடன் சொன்னார்.

ஆய்வுக்கூடம் சென்றேன். பார்த்தேன். எண்ணெய் எடுக்கும் துரப்பணக் குழாயில் கரைசலைத்தான் ஊற்றலாமே தவிர மற்ற கட்டிகளைப் போடக் கூடாது. எப்படி ஒரு பெரிய நிறுவனம் இப்படிப்பட்ட – சரிவரத் தயார் செய்யப்படாத ஒரு பொருளை விற்கிறார்கள் என்பது எனக்கு வியப்பாக இருந்தது. இது பெரிய சவால்தான். எனக்கோ இது முதல் சவால். அதுவும் தலைவர் கொடுத்திருக்கும் சவால். அதுவும் நானாகக் கேட்டு வாங்கிக் கொண்ட சவால்!

ஒரு வாரத்திற்கு முன்தான் ஒரு ரசாயன நிறுவனத்தின் விற்பனையாளர் ஒருவர் என்னிடம் இதுபற்றிப் பேசியது என் நினைவுக்கு வந்தது. அவரைக் கூப்பிட்டேன். அவர் இந்த பஞ்சுத்தூளை கரைசல் நிலையில் கொண்டு வரும் ஒரு பொருளைத் தங்கள் நிறுவனம் தயார் செய்வதாகச் சொன்னார். அனுப்பச் சொன்னேன். ஆய்வுக் கூடத்தில் சிறிய அளவில் சோதித்துப் பார்த்தேன். நன்றாக வேலை செய்தது.

கச்சாப் பொருட்களை வாங்கும் எங்கள் நிறுவன நிர்வாகியிடம் பேசினேன். "நீங்கள் செய்ய முடியுமென்றால் நான் விற்கத் தயார். நல்ல மார்க்கெட் இருக்கிறது" என்றார்.

ஆர்டர் செய்தோம். தேவையான பொருட்கள் வந்து இறங்கின. சனி, ஞாயிறு என்று பாராமல் நான்கு பேர் இதைச் செய்ய இறங்கினோம். சுமார் நூறு, 'ஐந்து காலன்' பக்கெட்டுகளில் பொருளை ஊற்றி சீல் செய்தோம். எங்கள் நிறுவனத்தின் பெயரை ஒட்டினோம். ஞாயிற்றுக்கிழமை அன்றே அதற்கு ஆர்டர் வந்தது; விற்றும்




தீர்ந்து விட்டது! ஒரு பத்து 'பக்கெட்டு'கள், – பொருள் அடியில் தங்குகிறதா என்று பார்ப்பதற்காக வைத்திருந்தோம்.

நிறுவனத் தலைவர் விடுமுறை கழிந்து செவ்வாயன்று வந்தரர். கச்சாப் பொருள் வாங்கும் நிர்வாகி அவரிடம் இந்த விற்பனை பற்றிக் கூறினார். தலைவருடன் நானும் அந்தப் பக்கெட்டுகளில் இருந்த பொருளை சோதிக்கச் சென்றோம். பொருள் கொஞ்சமும் அடியில் தங்காமல் பிரமாதமான கரைசலாக நின்று கொண்டிருந்தது.

"வெரிகுட்!" என்றார்.

அடுத்த மாதச் சம்பளம் வரும் போதுதான் அந்த 'வெரிகுட்'டின் அர்த்தம் தெரிந்தது. எனது பதவி நிரந்தரமாக்கப்பட்டது! எனது சம்பளம் மூன்றே மாதத்தில் மூவாயிரம் டாலர் உயர்த்தப்பட்டது. இது சேர்மன், பிரசிடெண்ட் என்ற இரு பெரும் தலைகளுக்கு அடுத்த நிலையில் என் சம்பளம் உயர்ந்தது.

அடுத்தபடியாக ஒரு மாதத்தில் மற்றோர் சம்பவம் நிகழ்ந்தது. எங்கள் நிறுவனத்தின் இரண்டாவது நிலையில் இருக்கும் உபதலைவர் என் அறைக்கு வந்தார். அவர் முன்பு பெரிய வழக்கறிஞராக இருந்தவர்.

"டாக்டர் முத்து! நம் நிறுவனத்தின் எல்லா செய்முறை ரகசியங்கள் அனைத்தும் இனி உங்களிடம் ஒப்படைக்கப் போகிறோம். இனி அவற்றை நீங்களே வைத்துக் கொள்ளலாம்" என்றார்.

நான் சொன்னேன் :

"ஐயா! உங்கள் நம்பிக்கைக்கு என் நன்றி. நம் நிறுவனத்தின் செய்முறை ரகசியங்கள்

**டாக்டர் எம். எஸ். உதயமூர்த்தி**

எல்லாம் எனக்குத் தேவையில்லை. அதில் என்ன இருக்கக்கூடும் என்பது பற்றிய அனுமானம் எனக்கு உண்டு. அதில் எதையாவது மாற்றி, வேறு உயர்ந்த பொருளைத் தயார் செய்ய வேண்டுமானால் மட்டுமே அந்தப் பொருள் பற்றிய செய்முறைத் தகவல்களை மட்டும் கொடுங்கள்! மற்றபடி அவை உங்களிடமே இருக்கட்டும்!" என்றேன்.

அவர் சிறிது நேரம் சிரித்துக் கொண்டே நின்றார். ஒன்றும் பேசவில்லை. போய் விட்டார்.

அவர்களுடைய நிறுவன ரகசியங்களை என் மனத்தில் போட்டு வைக்க எனக்கு விருப்பமில்லை. ஏன் அந்த அநாவசிய தூண்டல்கள்?

இது சம்பந்தமான மற்றோர் விஷயத்தையும் சொல்ல வேண்டும். இரண்டாண்டுகளில் நிறுவனம் நிர்வாகக் கோளாறினால் மூடப்படும் கீழ்நிலை அடைந்த போது, ஒரு போட்டிக் கம்பெனிக்காரர் என்னிடம் வந்தார். நான் அப்போது அந்த நிறுவனத்திலிருந்து வெளிவந்த சமயம்; வேலையில்லாமலிருந்த நேரம். சொன்னார் : "உங்கள் நிறுவனம் செய்து வந்த அந்தக் குறிப்பிட்ட




'பாலிமருக்கு' நிறைய கிராக்கி இருக்கிறது. நான் வாரம் ஒரு 'டிரக் லோடு' விற்க முடியும். நீ செய்து கொடு! அல்லது அந்த செய்முறையைக் கொடுக்க முடியுமா?" என்றார்.

"ஐயா! அதற்குத்தான் அதை அவர்களிடமிருந்து தெரிந்து கொள்ளவே நான் மறுத்து விட்டேன். நான் அதைச் செய்ய முடியாது. அந்த நிறுவனம் இன்று சங்கடத்தில் இருக்கிறது. அதற்கு ஒருக்காலும் கெடுதல் செய்ய நான் விரும்ப மாட்டேன்" என்றேன்.

அவர்கள் என்ன செய்தார்கள்?

எனக்குக்கீழ் வேலை பார்த்த அமெரிக்கனை 'பயிற்சி' என்ற பெயரில் பயிற்சி கொடுக்க அழைத்து, அவரிடமிருந்து விஷயத்தைக் கறந்து கொண்டதாகப் பின்னால் அறிந்தேன்!

மூன்றே மாதத்தில் மூடப் போகும் நிலையிலிருந்த ஒரு உணவு நிறுவனத்தை தூக்கி நிறுத்தினேன், முன்பு. இங்கோ நல்ல நிலையில் ஓடிக் கொண்டிருந்த ஒரு நிறுவனம் என் கண் முன்னே மூடப்படுகின்ற நிலைக்கு வந்தது.

பேராசிரியர் நல்ல மனிதர். நான் அவருக்காக வருந்தினேன். ஏன் இந்த நிறுவனம் தோற்றது? இது எல்லோருக்குமே ஒரு பாடமாக இருக்கும்.

இந்த நிறுவனம் பேரார்வத்தால், சுய முயற்சியால், நல்ல லாபம் நிறைந்த துறையில், தேவையான காலகட்டத்தில், வளர்ந்த ஸ்தாபனம். இது மிகப் பெரிய நிறுவனமாக ஆகக்கூடிய வாய்ப்பு நிறைய இருந்தது.

நான் அதில் சேர்வதற்கு முன்னால் அது 35 லட்சம் டாலர் வருமானமுள்ள ஒரு நிறுவனம். அதன் தலைவர் அதனுடைய பிரமிக்கத்தக்க பொருளையும் வளர்ச்சியையும், இருக்கும் எதிர்காலத்தையும் கணக்கிட்டு அதை மூன்றரைக் கோடி டாலர் வருமானமுள்ளதாக அடுத்த ஆண்டே ஆக்கத் திட்டம் போட்டார்.

விமானம் வாங்கப்பட்டது.

பத்தொன்பது பேர் இருந்த நிறுவனம் நூற்றி ஐந்து பேர் உள்ளதாக விரிவாக்கப்பட்டது. நிறுவனத்தில் பெண் காரியதரிசிகள் தவிர அனைவருக்கும் போக்குவரத்துக்கு, புதிய கார் கொடுக்கப்பட்டது. சேர்க்கப்பட்டவர்களில் பாதிப் பேர் வேறு துறை அனுபவம் கொண்டவர்கள்; பொதுவாகத் திறமை அற்றவர்கள். இட்டமோ மூன்றரை கோடி. ஆறு மாதத்தில் மறுபரிசீலனை செய்தார்கள். இரண்டு கோடியாகக் குறைத்தார்கள். அடுத்த ஒன்பது மாதத்தில் ஒன்றரைக் கோடியாகக் குறைத்தார்கள். கடைசியில் என்னையும் சேர்த்து 11 பேரைத் தவிர அனைவரையும் வீட்டுக்கனுப்பினார்

கள். கடைசி காலகட்டத்தில் வங்கியில் கடன் வாங்கிச் சம்பளம் கொடுக்கும் நிலை ஏற்பட்டது. சில மாதங்களில் கடன்காரர் களின் தொல்லை; நெருக்கடி.

சுருக்கமாகச் சொன்னால் அகலக் கால் வைத்து விட்டார்கள். 12- வது படியில் காலை நன்றாக ஊன்றிக் கொண்டு 13-வது படிக்கும் 14-க்கும் போக வேண்டுமே தவிர, எடுத்தவுடன் 24-வது படிக்குப் போவது ஆபத்தானது. உள்ளதும் போகின்ற ஆபத் தான நிலை.

மற்றொரு விஷயம். சொந்தமாகத் தொழில் செய்பவர்களுக்கு எப்போதுமே "காக்கைக்குத் தன் குஞ்சு பொன் குஞ்சு" என்பது போல தங்கள் தொழிலின் யதார்த்த நிலை பற்றிய ஞானமே இருப்பதில்லை. எனவே அவர்கள் அதை விற்க முயலும் போதும் அளவு கடந்து விலை சொல்கிறார் கள். இதனால் வண்டி ஓடிக் கொண்டிருக் கும்போதே விற்கத் தவறி விடுகிறார்கள். வண்டி பழுதடைந்து, ஓட முடியாத நிலை யில் காயலான் கடைக்குப் போய்ச் சேர் கிறது. முடிவில் அந்த நிறுவனத்தை வங்கிக் காரர்கள் எடுத்துக் கொண்டு அடிமாட்டு விலைக்கு விற்றார்கள்.

வாழ்வில் ஏற்றமும் வருகிறது; இறக்கமும் வருகிறது. ஒருசில நிறுவனங்கள்தான், அமெரிக்காவில் 'த்ரீ எம்' (3M) எனப்படும் நிறுவனம் போல, எப்போதும் ஒரே நிலை யில் தொடர்ந்து முன்னேறிக் கொண்டிருக் கிறார்கள்.

தொழிலில் சில சமயம் ஆசை பேராசை ஆகிவிடுகிறது. பேராசை நம் கண்களை மறைத்து விடுகிறது. யதார்த்த உலக நிலை யைப் பேராசை மறைத்து விடுகிறது. "நமது பேராசை நிறைவேறப் போகிறது" என்ற நினைப்பில் ஆணவம் வளர்ந்து விடுகிறது. 'தான் தொட்டதெல்லாம் பொன்னாகும்' என்று மனிதன் நினைக்கிறான். நேற்று வரை நீங்கள் வெற்றி பெற்றிருக்கலாம் அது நாளைய வெற்றியை உறுதி செய்யாது. நாளை ஒரு புதிய நாள். நாம் விழித்துக் கொண்டு கண்காணித்துக் கொண்டிருக்க வேண்டும். ஸ்டாக் மார்க்கெட்டில், "நஷ்ட மாவதை உடனடியாகக் குறையுங்கள்" என்றொரு பழமொழி உண்டு. நஷ்டம் வரும் போல் தோன்றினால் நாம் எங்கெங்கெல் லாம் செலவினங்களைக் கட்டுப்படுத்த முடியுமோ அதை உடனடியாகச் செய்ய




வேண்டும்.

நான் சொந்த நிறுவனத்தைத் துவங்கிய போது பெட்ரோலிய எண்ணெய் பீப்பாய் 28 டாலர் விற்ற நிலையிலிருந்து 18 டாலர் 12 டாலர் 9 டாலர் என்று 9 மாதத்தில் வேகமாகச் சரிந்து வந்தது. யாருமே அந்த நிலையில் புதிய எண்ணெய் எடுக்க துரப் பணம் போடுவதில்லை. அமெரிக்காவில் பீப்பாய் 18 டாலருக்கு விற்றால்தான் புதிய எண்ணெய்க்காகத் தோண்ட முன்வரலாம். விலை குறையக் குறையக் குறைய, எங்கள் சொந்த நிறுவனத்தில் விற்பனை வெகு வேகமாக இறங்கிக் கொண்டிருந்தது. முதலில் நிர்வாகிகளை அனுப்பினேன். அடுத்த சில மாதங்களில் விற்பனையாளர் களை! கடைசியில் என் காரியதரிசியும் நானும்தான் இருந்தோம். முடிவில் என் காரிதரிசியையும் வீட்டுக்கு அனுப்பி விட்டு, எல்லாவற்றையும் நானே செய்தேன். இரண் டாண்டு காலம் தொழில் நசிவை சமாளிக் கும் அளவுக்கு நல்லவேளையாகச் சேமித்து வைத்திருந்தேன். மனக் கஷ்டம் இருந்ததே தவிர இது என் தொழிலை பாதிக்கவில்லை. மறுபடியும் தொழில் முளை விட்டபோது நான் ஏணியில் ஏறத் தயார் நிலையில் இருந்தேன். ஏறினேன். இப்படி இருமுறை மார்க்கெட் சரிவு ஏற்பட்டது. இருமுறையும் நான் தொழிலை விட்டு விட்டு ஓடி விட வில்லை.

பிறருடைய அனுபவத்தில் நாம் பாடம் கற்றுக் கொள்கிறோம். சொந்த அனுபவமோ நம்மை மண்டையிலடிக்கிறது. நம்பிக்கை யும், புத்திசாலித்தனமும் உழைப்பும் நம்மை மேலே வரச் செய்கிறது.

(தொடரும்)

❑ ரூ. 50 பரிசு பெறுபவர்:
பாலு,
யூனியன் வங்கி,
காரைக்குடி 630 001

● இரா. கணேசன்,
சேலம் – 1.

? 'ஜெயலலிதா கால் கட்டை விரலால் எட்டி உதைத்தாலே டெல்லி சிம்மாசனம் பறி போய் விடும்' என்று காளிமுத்து ரொம்ப 'அடக்கமாக'ப் பேசுகிறாரே...?

! மக்களுடைய கட்டை விரலுக்கு 'ஜெ'யுடைய கட்டை விரலைவிட வலிமை அதிகம் என்பதை இன்னமும் புரிந்து கொள்ளாத அறியாமை பேசுகிறது.

● பாலு, காரைக்குடி–1 ❑

? நூறு நாட்களைச் சமீபத்தில்தான் கண்டிருக்கும் பி.ஜே.பி அரசிடம் நிறைய எதிர்பார்க்க முடியாது. ஆனால், நீங்கள் ஆரம்பித்திலேயிருந்து பி.ஜே.பியை பலமாகச் சாடுவதற்கு என்ன காரணம்?

! பி.ஜே.பியையோ வேறு கட்சியையோ சாட வேண்டும் என்று எமக்கு ஆசையில்லை. சொல்லப் போனால் பி.ஜே.பிக்கு ஒரு நம்பிக்கையான எதிர்காலம் உண்டு என்று முதன்முதலில் கட்டிக் காட்டியதே கல்கிதான். ஆனால், யானை தன் தலையில் தானே மண்ணை வாரிப் போட்டுக் கொண்ட கதையாக அக்கட்சித் தலைமை செயல்படும்போது கட்டிக் காட்டுவதும் நம் கடமை.

● க. எத்திராஜ், பவித்ரமாணிக்கம்.

? கல்கி தீபாவளி மலருக்கு இப்போதே முன்பதிவு செய்யலாமா?

! விரைவில் அறிவிப்பு வரும் – தயாராய் இருங்கள்.

● கு.ப. இரகுநாதன், பூவிருந்தவல்லி.

? தற்போதெல்லாம் கோயில் திருவிழாக்களைக் களமாகக் கொண்டு இன, மதக் கலவரங்கள் உருவாகின்றன. இவற்றை ஒட்டுமொத்தமாக நிவர்த்தி செய்ய அரசுக்கும் மக்களுக்கும் தாங்கள் கூறும் யோசனை என்ன...?

! கோயில்கள் சமுதாய நல்லிணக்கத்தின் சின்னங்களாக விளங்க வேண்டியவை. அற்றுத்தான் கோயில், சர்ச், மசூதி – எல்லாமே. இது மாறுபடுமானால், மக்களிடம் போலி பக்திதான் இருக்கிறதே தவிர, உண்மையான பக்தி இல்லை என்றே அர்த்தம். இந்தக் கருத்தை மக்களிடம் அனைத்துத் தலைவர்களும் பிரசாரம் செய்ய வேண்டும். ஆனால், தலைவர்களோ குறுகிய நோக்கில், சுய நலம் காரணமாக இதற்கு நேர்மாறான காரியங்களில் ஈடுபடுகிறார்கள். பிரச்னையே இது தான்.

● கே.எம். சுப்ரமணியன், பூனாம்பாளையம்.

? ஆணுக்குப் பெண் சமம் என்று கூறும்போது அரசியலிலும் மற்ற துறைகளிலும் ஏன் 33 சதவிகித இட ஒதுக்கீடு மட்டுமே கேட்கிறார்கள்? ஐம்பது சதவிகிதம்தானே நியாயமாகக் கேட்க வேண்டும்?

! சமம் என்னும்போது ஒதுக்கீடு குறித்துப் பேசுவதே முரண்பாடு அல்லவா?

● ப. இராம் முருகன், சென்னை – 81.

? 'விநாயகர் ஊர்வலத்துக்கு இந்த வருடம் அனுமதி தந்து, ஊர்வலம் வெற்றிகரமாக நடந்து விட்டால், தமிழ்நாட்டில் சட்டம் ஒழுங்கு நன்றாக இருக்கிறது என நான் எழுதித் தருகிறேன்...!' என்கிறாரே இல. கணேசன். இது பற்றி...?

• ... மறந்து...

# சுர்லா விடுதலை


•... போக்சு!


• எல்லாமே....

! 'விநாயகர் ஊர்வலம் அமைதியாக நடக்கும்; முஸ்லிம் சகோதரர்கள் சற்றும் மனம் கோணாத வகையில் நடைபெறும்; அதற்கு நான் உத்தரவாதம்' என்று சொன்னால் வரவேற்றுப் பாராட்டலாம். மாறாக, இப்படிச் சவால் விட்டால் இந்தச் சவாலில் ஏதோ உள்ளர்த்தம் இருப்பதாகத்தான் சந்தேகம் உண்டாகிறது.

● எஸ். ரேணுகா, நீடாமங்கலம் – 4.

***? நினைத்தால் இனிப்பது எது...?***

! நட்பின் வலிமை, மழலையின் புன்னகை, மனைவியின் சமையல், நல்ல சங்கீதம்... இன்னும் எத்தனையோ... வாழ்க்கை ஓட்டத்தின் பரபரப்புக்கிடையே இவை போன்றவற்றை நிதானித்து நினைக்கப் பழகிக் கொள்ள வேண்டும்.

● ஏ. காதர், நாகூர்.

***? 'தம் மீதுள்ள குற்றச்சாட்டு நிரூபிக்கப்பட்டால் பதவி விலகத் தயார்' என்று ஆர்க்காடு வீராசாமி அறிவித்துள்ளாரே?***

! குற்றச்சாட்டு நிஜமா பொய்யா என்பது மட்டும் இங்கு பிரச்னை அல்ல. அவர் பதவியில் நீடித்தால், முதல்வர் அவருக்குப் பக்கபலமாக நின்றால், விசாரணை தீவிரமாகவும் சுதந்தரமாகவும் நடுநிலைமையோடும் நடைபெறுமா என்ற சந்தேகம் நிச்சயம் எழும். எனவே அவர் குற்றமற்றவர் என்று ஸி.ஐ.டி. பிரிவு தீர்மானித்து வழக்குத் தொடராமல் விட்டாலும் அதை ஏற்பது சிரமமாகி விடும். எதிர்க்கட்சிகள் மெல்ல மேலும் அவல் அளித்ததாகி விடும்.

● பா. அச்சுதன், சென்னை – 35.

***? சிறுகதை எழுதுவது எப்படி...?***

! கேட்டுக் கொண்டிருப்பவர்களால் எழுத முடியாது. இதுதான் ரகசியம்!

● பி. ஜெயப்பிரகாஷ், சர்க்கார்பதி

***? சந்திரலேகா – திராவகம் புகழ் சர்லா விடுதலை செய்யப்பட்டுள்ளது குறித்து...?***

## செய்யப்பட்டிருப்பது குறித்து..?

! குற்றம் சுமத்தியவரும் குற்றம் சுமத்தப்பட்டவரும் கை கோத்துக் கொண்ட பிறகு அங்கே நீதியும் சட்டமும் வலுவிழந்து போவதில் வியப்பில்லை.

● அவ்வை கே. சஞ்சீவி பாரதி, ஈரோடு.

***? என்ன கொடுமை! இன்டர்நெட்டில் முதலிரவை 'ஒளிபரப்பு'கிறார்களாமே?***

! தகவல் சாதனங்களான பத்திரிகை, டெலிவிஷன் போன்றவை, கேளிக்கை சாதனங்களாக உருமாற்றம் பெற்றது இருபதாம் நூற்றாண்டு இறுதியில் நிகழ்ந்துள்ள பெரிய மாற்றங்களுள் ஒன்று. அதன் தொடர்ச்சிதான் இன்டர்நெட்டில் நிகழ்ந்து கொண்டிருக்கிறது. ஒரு தரமான பகுதி அல்லது நிகழ்ச்சியைத் தருபவர்கள் அடுத்த முறை இதை விடச் சிறப்பாகச் செய்ய வேண்டுமே என்று சிந்திப்பார்கள். ஆபாசப் பகுதி கொடுப்பவர்கள் இதைவிட ஆபாசமாக என்ன செய்யலாம் என்றுதான் யோசிப்பார்கள். இதுதான் சோகம்.

● கே. பெருமாள், கூனியூர்.

***? நெல்சன் மண்டேலா திருமணம் மாதிரி நம் நாட்டில் நடந்தால்...?***

! எண்பதில் திருமணம் என்பது எந்த நாட்டிலும் அரிதுதான்; ஆனால் சட்டபூர்வமாயிருக்கும் வரை தவறும் அல்ல. தனிமையை விரட்ட தவறான நடத்தையில் ஈடுபடுவதைக் காட்டிலும் இது மேல்.

● பூமலை மணியன், பெண்ணாடம்.

***? காங்கிரஸ் கட்சி காயம்பட்ட பலசாலியின் உடம்பு என்று சல்மான் குர்ஷித் கூறியுள்ளது பற்றி...?***

! யாரும் காயப்படுத்தாமல் தன்னைத் தானே காயப்படுத்திக் கொண்ட உடம்பு!

● ந. சேதுராமன், கொடுமுடி.

***? பேராசிரியர் கல்கியின் நூறாவது ஆண்டு பிறந்த நாள் விழாவில் அவருடைய தபால் தலை வெளி வருமா? அரசிடமிருந்து தகவல் உண்டா?***

! உங்கள் ஆர்வத்தைத் தபால்துறை அமைச்சர் சுஷ்மா ஸ்வராஜுக்கு எழுதுங்கள். பிற நண்பர்களையும் எழுதச் சொல்லுங்கள்.

● கே.வி. சூர்யா, நல்லத்துக்குடி

***? இன்னொரு தங்கை (பெண்) ஏமாறக் கூடாது என்ற நோக்கில் எழுதப்பட்டது 'நடிகையின் கதை' என்னும்போது அதனைப் பாராட்டத்தானே வேண்டும்?***

! இது போன்ற சப்பைக் கட்டைக் கேட்டால் 'ஒரு கொழுத்த ருத்ராட்ச பூனைதான் ஞாபகம் வரும்!



• அறியாமை!



• சந்தேகத்துக்குரிய சவால்!



• திருமணமே மேல்!



• அவல் அளிக்கிறார்!

# ஆகஸ்ட் 5 முதல் 11 வரை



**மேஷம்** : *(அஸ்வினி, பரணி, கிருத்திகை முதல் பாதம் முடிய)*

சனிக்கிழமை வரைக்கும் உங்க காட்டுல மழை தான்! நினைச்சது நடக்கும். விரும்பினது கிடைக்கும். சிலருக்கு உல்லாசப் பயண யோகம் இருக்கும். ஆனா, வாரக்கடைசில கவனமா இருங்க. தேவையில்லாத வாக்குவாதங்களால மனநிம்மதி போகலாம். வீட்டுக்காரர்/காரி கிட்ட அன்பா நடந்துக்கங்க. நீங்க கலகலப்பா இருக்கறது மூலமா எந்தக் காரியத்தையும் சாதிக்கலாம். இந்த வாரம் பணப் பிரச்னை இருக்காது. ஆனா, தாயார் உடல் நலத்துல கவனம் செலுத்த வேண்டி வரும். சிறு மருத்துவச் செலவு இருக்கும்.



**ரிஷபம்** : *(கிருத்திகை 2-ம் பாதம் முதல் ரோகிணி, மிருகசீரிஷம் 2-ம் பாதம் வரை)*

எப்பவும் ஏதாச்கும் நெருக்கடி இருந்துட்டே இருக்கு இல்லையா? இந்த வாரம் ரிலீஃப் கிடைக்கும். மனசுக்கு ஆறுதலான சில சம்பவங்கள் நடக்கும். வீட்டுல மகிழ்ச்சி தரும் விசேஷங்கள் நடக்கலாம். பணக்கையிருப்பும் திருப்தியா இருக்கும். சிலருக்கு வெளியூர்ப் பயணங்கள் நேர லாம். உல்லாசமா போயிட்டு வாங்க. எழுத்தாளர்கள், கம்ப் யூட்டர் ஆசாமிங்களுக்குப் புகழும் வருமானமும் கூடற நேரம் இது. முதலீடுகளும் லாபமே தரும். சிலருக்கு திடீர் அதிர்ஷ்ட வாய்ப்புகள் மூலம் வெளிநாடு சான்ஸ் வரலாம்.



**மிதுனம்** : *(மிருகசீரிஷம் 3-ம் பாதம் முதல் திருவா திரை, புனர்பூசம் 3-ம் பாதம் வரை)*

ராசில செவ்வாய், ரெண்டுல சூரியன் இருக்கறது அத்தனை நல்லது இல் லீங்க. குடும்பத்துல பிரச்னை, குழப்பம் ஏதாவது வரும். மனஸ்தாபம், பிரிவு அளவுக்குப் போயிடாம பார்த்துக்கங்க. உடல் நலம் கூட சரியா இருக்காது. உஷ்ண ஆதிக்கத்தால சில பிரச்னைகள் வரலாம். வேலைல பொறுமையும் கவனமும் முக்கியம். வியாபாரிகளுக்கு இது சோதனையான கால கட்டம். புதிய ஒப்பந்தங்கள் எதுவும் சிக்கல் உண்டு பண்ணிடும், கவனம். பொதுவா அதிகம் பேசாம, வேலைல கவனமா இருக்கறது பெட்டர். முதலீடு எதுவும் இப்ப வேணாம்.



மீன ராசிக்காரரான எழுத்தாளர் பி.வி. ஆருக்கு உற்சாகம் அடையறாப்பல சில காரியங்கள் நடக்குமாம். கூடவே அலைச்சலும் இருக்குமாம்!



**கடகம்** : *(புனர்பூசம் 4-ம் பாதம் முதல் பூசம், ஆயில்யம் முடிய)*

பொருளாதார ரீதில பிரச்னை வராதுன்னாலும் ஆபீஸ்ல மேலதிகாரிகள்கிட்ட அர்ச்சனை வாங்கற நிலை வரலாம். காரணம் உங்க கவனக்குறைவு. வீண் அரட்டைகள், வம்பு, பூசல்களில் தலையிடாதீங்க. சிலருக்குப் பெரும் புகழ், பாராட்டு காத்துட்டிருக்குன்றதை மறந்துடாதீங்க. சட்டம், ராணுவத் துறையினருக்கு இது ஆதாயமான காலகட்டம். பிற துறையினரும் வளமான வாய்ப்புகளைப் பெறுவது உறுதின்னாலும் வீட்டுச் சூழ்நிலை அவ்வளோ திருப்திகரமா இருக்காது. கணவன் - மனைவிக்குள்ள அடிக்கடி ஊடல் வரும். விட்டுக் கொடுத்து நடந்துக்கங்க.



**சிம்மம்** : *(மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய)*

உங்க பணிகளுக்கு நடுவுல சிறு தடங்கல்கள் நிறைய வரும். அதனால உற்சாகம் குறையும். சிலருக்கு உடல் நலக் குறைவும் ஏற்படலாம். நண்பர்கள் விஷயத்துல எச்சரிக்கையா இருங்க. பொறாமையால உங்களுக்கு எதிரா அவங்க செயல்படலாம். குறிப்பா அரசியல்வாதிகள் ரொம்ப எச்சரிக்கையா இருக்க வேண்டியது அவசியம். வியாபாரிகள், விவசாயிகள் கவனமா இல்லாட்டா நஷ்டப்பட வேண்டி வரும். உழைப்புக்கேற்ற பலன் இருக்காது. சோர்ந்துடாதீங்க. சகோதரர்களால உங்களுக்கு ஆதாயம் உண்டு.

# நடக்குமென்பார்,

**கன்னி :** *(உத்திரம் 2-ம் பாதம் முதல் அஸ்தம், சித்திரை 2-ம் பாதம் வரை)*



நல்லதும் கெட்டதும் கலந்து வரும் வாரம். ஒரு பக்கம் சிலருக்கு வெளிநாடு சான்ஸ், பதவி உயர்வு இருக்கும்னா, மறு பக்கம் உயர் மட்ட அதிகாரிகளுக்கு மானப் பிரச்னை, பதவிக் குறைப்பு அல்லது பண இழப்பு இப்படியும் இருக்கலாம். ஷேர் எதுவும் இப்ப வாங்காதீங்க. வெளியூர்ப் பயணங்களும் வேண்டாம். வீட்டுல பெற்றோர் உடல் நலத்துல அக்கறை செலுத்துங்க. சிலபேருக்கு வீடு வாங்கற யோகம் வரும். அதை மிஸ் பண்ண வேணாம். பத்திரிகையாளர்கள் சாகசமான காரியம் ஒண்ணு செய்வாங்க.

**துலாம் :** *(சித்திரை 3-ம் பாதம் முதல் சுவாதி, விசாகம் 3-ம் பாதம் வரை)*



வெற்றி வந்து கதவைத் தட்டும் நேரம். எந்தத் துறையினராக இருந்தாலும் சாதனை செய்யற ஆள் நீங்களா இருப்பீங்க. கிரக அமைப்பு அப்படி! குறிப்பா விளையாட்டுத் துறையைச் சேர்ந்தவங்களுக்கு இந்த வாரம் வெற்றிப் பதக்கம் நிச்சயம்! நண்பர்கள் சமயத்துல உதவுவாங்க. பெரிய மனிதர்களோட சந்திப்பு ஒண்ணு இந்த வாரம் ரொம்ப உதவியா இருக்கும். வீட்டுல ஏதாவது விசேஷம் நடக்கும். சிலருக்குத் திருமணம் கை கூடும். மாணவர்களுக்கும் புகழ் சேர்வது உறுதி.

**விருச்சிகம் :** *(விசாகம் 4 - ம் பாதம் முதல் அனுஷம், கேட்டை முடிய)*



அதிக உழைப்பு காரணமா உடல் நலன் கொஞ்சம் கெடும். ஆனால் பண விஷயம் பிரச்னை தராது. ஆனா மனக்குழப்பமும் தூக்கமின்மையும் படுத்தும். எழுத்தாளர்களும் ஆசிரியர்களும் பாராட்டுப் பெறும் விதமான காரியங்கள் செய்வாங்க. சிலருக்கு நிலம் வாங்கற யோகம் இருக்கு. தெய்வப் பணி, தலயாத்திரைன்னு சிலர் புண்ணியம் சேர்ப்பாங்க. இளைஞர்களுக்குக் காதல் கைகூடும் விசேஷ வாரம் இது!

**தனுசு :** *(மூலம், பூராடம், உத்திராடம் முதல் பாதம் வரை)*



வீண் அலைச்சல், வீண் செலவு, மனக் குழப்பம், உடல் நலக் கோளாறு இதெல்லாம் இருந்தாலும் வாரக் கடைசில சரியாயிடும். டென்ஷன் காரணமா வேலைல சொதப்புவீங்க. ஆபீஸ்ல அமைதியா, புன்னகையோட இருங்க. சிலருக்கு வெளியூர்ப் பயணங்கள் வரும். முடிஞ்சா தவிர்த்துடுங்க. பிக்பாக்கெட்காரர்களிடம் கவனமா இருங்க. சிலருக்கு ஜலதோஷத் தொல்லை இருக்கும். வெளில எதுவும் சாப்பிடாதீங்க.

**மகரம் :** *(உத்திராடம் 2-ம் பாதம் முதல், திருவோணம், அவிட்டம் 2-ம் பாதம் வரை)*



திறமையும் ஆற்றலும் வெளிப்படற வாரம் இது. நினைச்சது நடக்கும். தொலைதூரச் செய்தி ஒண்ணு உங்களைக் குஷிப்படுத்தும். பெரியவங்க ஆசி, மகான்கள் தரிசனம் கிடைக்கும். கணக்கு, விஞ்ஞானத் துறையைச் சேர்ந்தவங்களுக்குப் புகழ் கூடுவது உறுதி. பெண்களுக்குத் திருமணம் கைகூடும் நேரம். சிலருக்குப் புதிய வேலை வாய்ப்புகளும் வரலாம். வீடு வாங்கற வாய்ப்பு வந்தா விட்டுடாதீங்க.

**கும்பம் :** *(அவிட்டம் 3-ம் பாதம் முதல், சதயம், பூரட்டாதி 3-ம் பாதம் வரை)*



வீட்டுல பிக்கல் பிடுங்கல் இருக்காது. கொஞ்ச நாளா இருந்து வந்த சில்லறைப் பிரச்னைகளும் தீர்ந்துடும். புதிய வாய்ப்புகள், ஒப்பந்தங்கள் வந்து கதவைத் தட்டும். வெளியூர்ப் பயணங்கள் நன்மை தரும். அரசு ஊழியர்களுக்கும் இது ஆதாயமான காலகட்டம். வரவேண்டிய பாக்கிகள் வந்து சேரும். பெண்களுக்கு இது ஷாப்பிங் வாரம். வீட்டு உபயோகப் பொருட்கள் பல வாங்குவீங்க. பொதுவா இது சிக்கலே இல்லாத வாரம்.

**மீனம் :** *(பூரட்டாதி 4 -ம் பாதம் முதல், உத்திரட்டாதி, ரேவதி முடிய)*



வாரத் தொடக்கத்துல நீங்க உற்சாகம் அடையறாப்பல சில காரியங்கள் நடக்கும். எதிர்பாராத பண வரவு, கேஸ் வெற்றி இந்த மாதிரி. ஆனா ஞாயிறுக்கு அப்புறம் கொஞ்சம் எச்சரிக்கையா இருங்க. பலர் கடன் கேட்டுத் தொந்தரவு செய்வாங்க. அலைச்சல் இருக்கும். ஜுரம் மாதிரி சிறு உடல் உபாதைகளும் வரலாம். வம்புச் சண்டைகள்ல தலை நீட்டாம இருந்தீங்கன்னா, ஆபீஸ்ல பேர் ரிப்பேர் ஆகாம இருக்கும்!

அக்னி சர்மா பக்கம்

நடக்கும்!




வட்ட மேஜை

புரிந்து கொள்ளவில்லையோ? எப்படியோ சன் டீ.வி, தன் நடுநிலை வேஷத்தை நழுவ விட்டு விட்டது!
மயிலாடுதுறை,
ஜெ. ரஜினி ராம்கி.

✉ 'உடம்பு ஒட்டினால் என்ன? உள்ளம் கெட்டு விடவில்லை' என்று ஒரு பத்திரிகையில் பேட்டியளித்த அனுராதா ஸ்ரீராம், கல்கியில், 'கட்டிப் பிடித்து ஆடினேன் என்பது டூ மச்'' என சொல்லியிருப்பது சுத்த பாசாங்கு சார்!
மேலகிருஷ்ணன்புதூர்,
ஆர்.கே. லிங்கேசன்.

✉ 'அப்பாவின் எலிகள்' சிறுகதை அருமை. 'எதையும் தாமதமாய் யோசிப்பதே இந்தத் தலைமுறையின் வழக்கமாகி விட்டது' என்ற வரியில் கதையின் மையக் கருத்து சாட்டை அடியாய் விழுந்திருக்கிறது. 'இது சாஷேக்களின் காலம்,' 'சமையில் அறையில் பாலாறு' போன்ற புதுக் கவிதை மின்னுகிற வரிகள். வாழ்த்துக்கள்.
ஸ்ரீரங்கம், ஆர். ஸ்ரீநிவாசன்.

# 'பாப்' பாடினால் ஆட்டம் தானாக வரும்!

✉ ''அரசியல் தேவையில்லை. பரந்து விரிந்த இந்த உலகில் நிறையப் பணியாற்றலாம்'' என்கிறார் முன்னாள் மாநில தேர்தல் ஆணையர் மலைச்சாமி. அவரது நேர்மைக்கு இது ஒரு நல்ல எடுத்துக்காட்டாகும்.
மானம்பாடி, பூமகன்.

✉ தர்மத்துக்காகக் கூட விட்டுக் கொடுக்காமல் 'தர்மா' விமர்சனத்தில் 'லெஃப்ட் அண்ட் ரைட்' வாங்கிப் புட்டீங்களே! நியாயமா?
அரசரடி, நெல்லை வி. சிவா.

✉ நகைச்சுவையுணர்வு இழையோடும் கமி சூப்பர் மார்க்கெட்டில் கத்தரிக்காய் + கனகதாரா ஸ்தோத்திர சாம்பார் மெய்யாகவே நெய் மணத்தது_ சூப்பர் சுவை!
வலையப்பட்டி,
எம். பாலசுப்பிரமணியன்.

✉ தன் பக்க நியாயத்தைச் சொல்ல அடைக்கலராஜுக்கு உரிமை இருப்பதைப் பெரிசுகள் ஏன்தான்

✉ அனுராதா ஸ்ரீராமின் குரலைப் போலவே பேட்டியும், அவரது ஸ்டைலும் அழகாக இருந்தது. 'பாப்' பாடல் பாடும்போது ஆட்டம் தானாகவே வரும். டீவியில் பார்க்கும் நமக்கே ஆடத் தோணுது! பாடும் அவருக்கு மட்டும் என்ன? ஆபாசமில்லாமல் சேர்ந்து ஆடுவதில் தவறில்லை!
தூத்துக்குடி-1,
சிவராமசுப்பிரமணியன்.

✉ 'நெற்றிக்கண் திறப்பினும்' என்ற நக்கீரத்தனம் தலையங்கத்தில் பளிச்... பளிச்...! 'களையெடுத்தல் அவசியம்' என்று முதல்வருக்கு ஆலோசனை வழங்கிய விதம் நச்!''
அரவக்குறிச்சிப்பட்டி,
எம். அசோக்ராஜா.

✉ சினிமா, லைவ் ஷோக்கள், ஆல்பம், டீ.வி நிகழ்ச்சிகள் என்று இறக்கை கட்டிப் பறக்கும் அனுராதா ஸ்ரீராமை 'ஓர் அண்ணாமலை சைக்கிள்' என்று கல்கி நிருபர் வர்ணித்ததை ஒன்றுக்கு 100 முறை ரசித்தேன்.
நீலம்பூர், எ.எஸ். இராமசாமி.

✉ ரணதுங்கா பேட்டியின் மூலம் நாம் அறிவது, அவர்கள் கிரிக்கெட் விளையாடுவது காசுக்காக அல்ல; நாட்டுக்காக என்பதுதான். அவர்களுடைய தன்னம்பிக்கையும், விடாமுயற்சியும், பய பக்தியும் 1999 ஆம் ஆண்டு உலக கோப்பையை வெல்லப் பக்க பலமாக உதவும் என்றால் அது மிகையாகாது.
லால்குடி-1,
எம். இராஜேந்திரன்.

✉ ஆற்காட்டாரின் விஷயத்தால், சோதனைக்குள்ளாகி நிற்கும், கலைஞரின் நடவடிக்கை எப்படியிருக்க வேண்டுமென்று, பட்டியலிட்டுக் காட்டிய, கல்கியின் தலையங்கத்தை, வாழ்த்தி வரவேற்கிறோம்!
கும்பகோணம்-1,
எஸ்கே. மூர்த்தி

# அழகுக் குரலில் ஆக்ரோஷப் பேச்சு!



அணு ஆயுத எதிர்ப்பு மாநாடு ஒன்றை சமீபத்தில் சென்னை மியூசிக் அகாடமியில் வெற்றிகரமாக நடத்தினார் ஃப்ரண்ட் லைன் ஆசிரியர் என். ராம். டாண் என்று துவங்கியது கருத்தரங்கு. துவங்கிய கொஞ்ச நேரத்திலேயே முரசொலிமாறன், அட்மிரல் ராம்தாஸ், கம்யூனிஸ்ட் தலைவர் பர்தன் ஆகியோர் ஆணித்தரமாகப் பேசினார்கள். என்றாலும் அன்றைய நட்சத்திரம் ''God of Small Things — புக்கர் பரிசு'' புகழ் அருந்ததி ராய்தான். அவர் பேசியபோது நிரம்பி வழிந்த அரங்கு, பேசி முடித்ததும் பாதிக்கு மேல் காலியானது. ஆங்கிலம் மட்டுமல்ல, குரலும் அழகுதான். அவரது ஆக்ரோஷப் பேச்சிலிருந்து சில துளிகள்:

- அணு ஆயுதப் போர் என்பது இருநாட்டு மக்களுக்கிடையே நடப்பதல்ல. அது அரசுகளுக்கிடையே ஆன யுத்தம். சொல்லப்போனால் இது பூமிக்கு எதிரான யுத்தம். நிலத்துக்கும், காற்றுக்கும் எதிரான போர். விஷம் கலந்த ஆறுகள். தீயைப் பரப்பும் காற்று. தீ அடங்கியவுடன் பரவும் கனத்த புகை. அந்தக் கொடிய புகை சூரியனையே மறைக்க, உலகெங்கும் அந்தகாரம். தண்ணீர் அப்போது நச்சு வாய்ந்த பனிக்கட்டியாய் மாறிவிட்டிருக்கும். இதுவா நாம் கேட்டது?

- போக்ரானில் உள்ள கதிரியக்க மணலை நாட்டின் பல இடங்களுக்கும் பிரசாதமாக விநியோகிக்கப் போகிறார்களாம்.



''அந்த ஆபீஸ் ரொம்ப மோசம்!''

''ஏன் அப்படிச் சொல்றீங்க?''

''கதவு கூட பகிரங்கமா மாமூல் வாங்குது!''

– ஜூனியர் தேஜ்

''தமிழ்ப் படம்தானே எடுத்துருக் காங்க... எதுக்கு தமிழ்ல சப்டைட்டிலும் போடுறாங்க?''

''படத்துல வர்ற எல்லா கேரக்டரும் ஒவ்வொரு மாவட்ட தமிழ் பேசறாங் களாம்!''

– அம்பை தேவா



''உங்க புது மானேஜர் நிறைய சம்திங் வாங்குவாரா...?''

''ஆமா... யார் சொன்னது உனக்கு?''

''அவர்தான், மேஜைல காலைத் தூக்கி வச்சுக்கிட்டு, 'வாங்க நினைத்தால் வாங்கலாம் வழியா இல்லை பூமியில்'னு பாடிக்கிட்டிருக் காரே!''

– சீர்காழி ரேவதி



அதை 'புற்றுநோய் யாத்திரை' என்று சொல்லலாமா?

● இறப்பதற்கு நாம் அஞ்சியது போய், வாழ்வதற்கே அஞ்ச வேண்டிய நிலை ஏற்பட்டிருக்கிறது. அணு ஆயுதங்களுக்கு எதி ராக ஒவ்வொருவரும் எழ வேண்டும்.

● இது இந்திய அணுகுண்டாம். ஊஹூம், ஹிந்து அணுகுண்டாம்! இதற் கெதிரான விமர்சனங்கள் தேச விரோதம்; ஹிந்து விரோதம்! பாகிஸ்தானைப் பொருத்த வரை அது இஸ்லாமுக்கு விரோதம்!

● முதல் முறை போக்ரானில் அணு ஆயுதச் சோதனை நடைபெற்ற ஒரு வருடம் கழித்து, இந்திரா காந்தி அவசர நிலையைப் பிரகடனம் செய்தார். 1999 எதைக் கொண்டு வரப் போகிறது?

● அணு ஆயுத வெடிப்பைத் தொடர்ந்து கோக், பெப்ஸி பாட்டில்களை உடைத்து, 'சுதேசி'கள் ஆனந்தக் கூத்தாடினார்கள். இனி சமையலில் மிளகாயை சேர்த்துக் கொள்ள வேண்டாம். தேனீரும் கிடையாது – அது சீனாவாச்சே. இங்கிலாந்திலிருந்து இறக்கு மதியான கிரிக்கெட்டுக்கும் தலை முழுகு வோம். ராஷ்டிரபதிபவனில் தொடங்கி வெளி நாட்டினர் கட்டிய கட்டடங்களை எல்லாம் இடித்துத் தள்ளுவோம். சுருக்கமாக நரகத் துக்கு ஒரு குறுக்கு வழியைக் காண்போம்.

● அணு ஆயுதத்தை எதிர்ப்பது தேச விரோதமாம். எனவே என்னை ஒரு முழு சுதந்தர மனுஷியாக, எந்த நாட்டையும் சேராதவளாக அறிவித்துக் கொள்கிறேன். நான் உலகின் குடிமகள். என் 'தேசத்துக்கு' தனிக் கொடி கிடையாது. அணு ஆயுதங் களுக்கு எதிரான எந்த அமைதி ஒப்பந்தத்தி லும் நான் கையெழுத்திடத் தயார். என் தேசத்தில் இணைய விரும்பும் 'வெளி நாட் டினருக்கு' நல்வரவு.

● உங்களுக்குக் கடவுள் நம்பிக்கை உண்டு என்றால், "அணு ஆயுதம் இறைவனுக்கெதி ரான சவால்" என்கிற வகையில் அதற்கு எதிர்ப்புத் தெரிவியுங்கள். கடவுள் நம்பிக்கை இல்லாதவரென்றால் பல கோடி வருடங்க ளாக மனிதன் உள்ளிட்ட பல உயிரினங்களுக்கு வாழ்வு தந்து கொண்டிருக்கும் இந்த பூமி, ஒரே நாளில் அஸ்தமனமாகி விடும் என் பதற்காக இந்த எதிர்ப்பில் சேர்ந்து கொள் ளுங்கள்.

தொகுப்பு : **ஜி.எஸ்.எஸ்.**

படம் : **பிரவீண்குமார்**

## வாழ்வில் முடிவெடுத்த அந்தத்
## தருணம் என்றும் பசுமையானது...



**அதற்கு ஈடான மற்றொரு தருணம் நீங்கள் யெஸ்டி அஸோஸியேடட் பில்டர்ஸிடம் இல்லம் வாங்கும் இனிய தருணம்தான்!**



அண்ணா நகர், தி. நகர், நங்கநல்லூர், வேளச்சேரி மற்றும் பிற இடங்களில் அழகிய தரமான டீலக்ஸ் ஃபிளாட்டுகள் மற்றும் தனி வீடுகள் வாங்க

அணுகுங்கள்




## YESDE ASSOCIATED BUILDERS LTD.

FLAT PROMOTERS & PROPERTY DEVELOPERS

26, Ranganathan Street, IInd Floor, T. Nagar, Madras - 600 017.
Phone: 4340224/4340210/-4342667. Fax: 044-2344333

# ஏதுவொன்றுமில்லை

சில்லறை மாற்ற ஹோட்டலுக்குள்ளே போன பெரியவரைப் பார்த்து பஸ் ஸ்டாப்பிலிருந்தவர்கள் பேசிக் கொண்டதைச் சொன்னேன்.

"உள்ளே போனவர் என்னத்தைச் சாப்பிடுவாரோ?"

''அதெல்லாம் சாப்பிட மாட்டார்...''

''உள்ளே போன பிறகு என்ன பண்ண முடியும்..? சாப்பிடத்தான் வேண்டும்...''

– இப்படியெல்லாம் பேசிக் கொள்கிறார்கள். ஆனால், போனவர் என்னவோ சில்லறை மாற்றுவதற்குத்தான் போனார்!

அனுமானம் பண்ணுகிறவர்களெல்லாம் இந்த பஸ் ஸ்டாப்பில் ஜனங்கள் மாதிரிதான்... 'அவர் இதைச் சாப்பிட்டார், அதைச் சாப்பிட்டார்' என்கிற அனுமானம் எல்லாம் தோஷமாய்ப் போய்விடுகிறது!

ஆனால், சத்யமாகிற வேதத்துக்கு தோஷமேயில்லை. ஏனென்றால், அது ஒருத்தரால் உண்டாக்கப்பட்டதல்ல; பகவானால் கூட உண்டாக்கப்படாதது.

அப்படிப்பட்ட உத்தமமான வேத வான்மயம் நமக்கு சத்யமே சொல்லும். ஆனதனாலே, அப்படிப்பட்ட பகவானுக்காக நீ தியாகம் பண்ணினாயானால், நீ சேர்த்ததை யக்ஞத்தின் மூலம் கொடுத்தாயானால், பரமாத்மா அதை சுவீகரித்து அபரிமிதமாக ரக்ஷிப்பான்.

போக்தா அவன் என்று உணர்ந்து, போக்யம் நீயே என்பதை உணர்ந்து, உன்னைச் சேர்ந்ததெல்லாம் போக்யம் என்று அர்ப்பணிக்க வேண்டும். என்னை ஏற்றுக் கொள்; உன்னுடைய வஸ்து இது; ஏற்றுக்கொள் என்று பரமாத்மாவினிடத்திலே நாம் பிரார்த்திக்கத்தான் முடியும். அவன்தான் அதை ஏற்க வேண்டும்.

அவன் சங்கல்பிக்கவில்லையானால் அவனிடத்திலே நம்மால் போக முடியுமா? லக்ஷ்மணன் பிரார்த்தித்தான் - காட்டுக்கு அழைத்துக் கொண்டு போக வேண்டும் என்று. பகவான் ஏற்கவில்லை. அதே லக்ஷ்மணன் சீதையிடத்திலே சரணாகதி பண்ணியபோது, பகவான் அங்கீகரித்தான். ஆகையினாலே, நாம் பண்ணுவதை பகவான் அங்கீகரிக்க வேண்டும் – அது முக்கியம்.

'நீ என்னை ஏற்கவேண்டும் என்று அவனிடத்துப் பிரார்த்தனை பண்ணினால், அப்போது அவன் ஏற்றுக் கொண்டானானால், அவனுக்கு போக்யமாக நாமும் இருக்கிறோம், நம்மைச் சேர்ந்த வஸ்துவும் இருக்கிறது. ஆகையினாலே சர்வவியாபியாய் எங்கும் இருந்து, பகவான்

போக்தாவாகவும்

போக்யமாகவும்

நியந்தாவாகவும் இருக்கிறான்.

போக்தா என்றால் ஜீவாத்மா. ஜீவாத்மாவுக்குள்ளே அந்தர்யாமியாக பரமாத்மாவும் இருக்கிறதாலே பரமாத்மாவும் போக்தா. எல்லா பதார்த்தங்களிலும் அவன் இருப்பதாலே போக்யமும் அவனே... இதையெல்லாம் செயல்படுத்துபவனாய் இருப்பதனாலே நியந்தாவும் அவனே!

உலக வழக்கத்திலே போக்தா வேறு, போக்யம் வேறு, நியந்தா வேறு என்று நமக்கு சாமான்யமாகத் தென்பட்டாலும் பகவத் விஷயத்திலே

முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்

பார்க்கும்போது போக்யமாகவும் இருக்கிறான் போக்தாவாகவும் இருக்கிறான்; நியம்தாவாகவும் இருக்கிறான்.

திருப்பாணாழ்வார் ரொம்ப குறைவாகத்தான் பாடினார். பத்தே பத்து பாசுரங்கள் தான். மற்ற ஆழ்வார்கள் பாடியவை அத்தனையும் ஒரு தட்டிலே வைத்து, இந்த ஆழ்வார் பாடினதையும் ஒரு தட்டிலே வைத்தால்... இவருடைய தட்டுதான் அதிக எடையுடையதாயிருக்கும்!

கவித்துவத்திலே எத்தனையோ நயம். முதல் பாசுரம்,

அமலன் ஆதிப்பிரான் அடியார்க்கு
என்னை ஆட்படுத்த
விமலன் விண்ணவர்கோன் விரையார்
பொழில் வேங்கடவன்

என்று ஆரம்பிக்கிறது. இரண்டாவது பாசுரம் 'உவந்த உள்ளத்தின்' என்று ஆரம்பிக்கிறது. மூன்றாவது பாசுரம் 'மந்திபாய் வடவேங்கட மாமலை...' என்று தொடங்குகிறது.

இந்த முதல் மூன்று பாசுரங்களின் முதல் எழுத்துக்களை எடுத்துப் பாருங்கள். அ, உ, ம! பிரணவாகார மண்டபத்துக்குள்ளே ரங்கநாதன் இருக்கிறான்... என்கிற விஷயம்தான் இது!

அதற்கப்புறம் பாருங்கள்... 'பாரமாய்', 'துண்டவெண்', 'கையினார்' என்று அடுத்த மூன்று பாசுரங்கள் ஆரம்பிக்கின்றன. இவற்றின் முதல் மூன்று எழுத்துக்கள் பா, து, கை - ஸ்ரீமத் ஆண்டவன் நித்யம் அங்க ஆராதனம் பண்ணும்படியான அந்த ரங்கநாத திவ்யமணியின் பாதுகைகளைக் குறிக்கிறது!

இந்த பாதுகைகள் குறித்து ஒரே ராத்திரியில் 'பாதுகா சஹஸ்ரம்' என்று பாடி அருளினார் சுவாமி தேசிகன்.

அவன் எப்போதும் பாதுகையைப் போட்டுக் கொண்டே இருக்கிறானாம்... ஏனென்றால் சஞ்சாரப் ப்ரியன் அவன்!

ஆகையினாலே... இப்படி திருப்பாணாழ்வாரின் பத்து சுலோகத்துக்குள்ளே பிரணவார்த்தம், பாதுகார்த்தம், திருமந்திரார்த்தம், த்வயமந்த்ரார்த்தம், சரமஸ்லோகார்த்தம் என்று எல்லாவற்றையும் எடுத்துக் காட்டியிருக்கிறார்.

அந்த கொண்டல் வண்ணன், கோவலன், வெண்ணெய் உண்ட வாயன் - அவனைப் பார்த்த கண்கள் மற்றொன்றைப் பாராவே என்று சொல்லி விட்டார் ஆழ்வார்! ரங்கநாதனைப் பார்க்க வைகுண்டம் கூட பெரிசில்லை!

## அருள்வாக்கு

**அஸம்சயம் மஹாபாஹோ மநோ துர்நிக்ரஹம் சலம்!**

**"சலம்" என்றால் சஞ்சலம்தான். சஞ்சலித்துக் கொண்டேயிருக்கும் மனதை அடக்க முடியாதுதான். "துர் நிக்ரஹம்" - நிக்ரஹம் செய்வதற்கு முடியாது. "அஸம்சயம்" - இதிலே ஸந்தேஹமில்லை. "அர்ஜுனா! (அர்ஜுனனை 'மஹாபாஹு' என்கிறார். மஹா வீரனாதலால் அவனுடைய தோள் வலியைக் குறிக்க 'மஹாபாஹு' என்று கூப்பிடுகிறார். வெளி யுத்தத்தில் போலவே உள் யுத்தத்திலும் அவன் மஹா வீரன் ஆகனும் என்று தாத்பர்யம்.) ஸந்தேஹமில்லாமல் நீ சொன்ன மாதிரிதான்**

ஆளவந்தாருக்கு அந்திம காலம் வந்தது. அப்போது ஸ்ரீரங்கத்திலே அவர் சிஷ்யர்களெல்லாம் கிட்டத்தில் நெருங்கி நிற்கிறார்கள். பிராண வியோகம் ஆகப் போகிறது - இன்னும் அரை க்ஷணத்திலே பிராணன் போய்விடப் போகிறது என்கிற நிலைமை. அவருக்கு அருகிலே போய், அந்த சமயத்தில் தங்கள் ஆசார்யர் என்ன நினைத்துக் கொண்டிருக்கிறார் என்று தெரிந்து கொள்ள எல்லோரும் விரும்புகிறார்கள்.

"சுவாமி! தங்கள் திருவுள்ளத்திலே இப்போது நினைவு என்னவோ? தாங்கள் என்ன நினைத்துக் கொண்டிருக்கிறீர்களோ...? அதை எங்களுக்குச் சொல்ல வேண்டும் - சிஷ்யர்களெல்லாம் கேட்டார்கள். அதற்கு பிராணன் போகிற தருவாயில் அவர் சொன்ன வார்த்தை: "எனக்கு நல்ல ஆசார்ய சம்பந்தம் ஏற்பட்டிருக்கிறது. அந்த ஆசார்ய சம்பந்தத்தினாலே அவன் பெருமையை உணர்ந்தேன். அந்த ஆசார்ய சம்பந்தத்தினாலே மோக்ஷத்தை அடைவேன்... ஆனால் ஒன்று... அந்த வைகுண்டத்திலே போய்ப் பார்ப்பேன்... அங்கேயிருக்கிற பரமாத்மா, நம் ரங்கநாதர் மாதிரி இல்லையென்றால் முறித்துக் கொண்டு வந்து விடுவேன் இங்கே..." என்கிறார்!

நம்மாழ்வார் என்ன சொல்கிறார்...? வைகுண்டத்திலே பரவாசுதேவன் என்று

மனஸ் சஞ்சலித்துக் கொண்டே யிருக்கிறது. அதை நிக்ரஹம் பண்ணுவது லேசில்லை தான்'' என்று, அவன் சொன்னதற்கு, ஆமாம் போட்டுவிட்டு, அதற்குப் பரிஹாரம் சொல்கிறார்.



ரொம்பவும் முக்யமான விஷயத்தைச் சொல்கிறார்: ''அப்யாஸம், வைராக்யம் என்ற இரண்டில் தீவிரமாயிருந்தாயானால் மனோ நிக்ரஹம் பண்ணி விடலாம்'' என்கிறார்.

''எத்தனை திமிறினாலும், உன்னை திசை தப்பி எத்தனை தரம் இழுத்துக் கொண்டு போனாலும் ஸரி, அதற்காக மனஸைக் கட்டுப்படுத்த பிரயாஸை எடுக்காமல் விட்டு விடாதே. வெளியிலே ஓடுகிற அதை ஒவ்வொரு தரமும் மறுபடி உன் வழிக்கு இழுத்துக் கொண்டு வரப் பார். இப்படி விடா முயற்சியுடன் எதிர்த்துப் போராடிக் கொண்டேயிருந்தால், அது ஒரு நாள் அடங்கிப் பணிந்து போக ஆரம்பித்து விடும். எதிடமும் ஆசை வைக்கப்படாது என்ற வைராக்ய சிந்தை. எத்தனை வழுக்கி விட்டாலும் ஊன்றி நிற்க அப்யாஸம் செய்து கொண்டே இருப்பது – ஆகிய இந்த இரண்டால், முடிவிலே ஒரு நாள் ஜயித்து விடலாம்'' – இப்படி பகவான் ஆறுதலாகப் பதில் சொல்கிறார்.

– ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்

அவனுக்குப் பெயர். ஸ்ரீதேவி, பூதேவி, நீளா தேவியோடு அமர்ந்த திருக்கோலத்தில் அவன் இருக்கிறான் என்று சாஸ்திரம் சொல்கிறது. ஆனால் நம்மாழ்வார் என்ன சொல்கிறார்? அந்த வைகுண்டத்திலேயும் நரம் கலந்த சிங்க அவதாரத்தையே பார்க்க விரும்புகிறேன் என்கிறார்!

சுவாமி தேசிகன் காஞ்சி வரதராஜ பெருமாளுடைய அழகைச் சொல்லி, 'அவன் பவனியைப் பார்த்த கண்கள் வைகுண்டத்தை விரும்புமோ?' என்று கேட்கிறார்.

எப்படிப்பட்ட அழகு அந்த பவனி..?

கோபுர வாசல்படியில் அழகாக மந்திரம் பாராயணம் பண்ணுகிறார்கள். அந்த மந்திரம் பாராயணம் பண்ணப் பண்ண இக் விஜயம் பண்ணி வருகிறான் பகவான். தேவர்களுக்கு பிரஹஸ்பதி சொன்ன உயர்ந்த மந்திரம் அது... அதனாலே சாதாரணமாய் வெளியிலே கிளம்புகிறபோதோ, கிரஹப் பிரவேசத்தின்போதோ சொல்லப்படுகிற மந்திரம். அந்த மந்திரம்தான் இப்போது ஒலிக்கிறது.

பரமாத்மா கிளம்புகிறபோது, ஸ்ரீபாத தாங்கிகள் தூக்குகிறார்கள். பகவானை எழுந்தருளப் பண்ணி எழுந்தருளப் பண்ணி தோளெல்லாம் அப்படியே காய்த்துப் போயிருக்கும். பகவானைச் சுமந்த வடு அது!

அதுபோன்று, நாம் தொழும்போது நாக்கிலேயே தழும்பு வருமாம்... 'நாராயணா, நாராயணா என்று சொல்வதாலே ஏற்பட்ட தழும்பு' என்று சொல்லிக் கொள்ள வேண்டுமாம்!

சரி, ஸ்ரீபாத தாங்கிகள் அவனை எழுந்தருளப் பண்ணுகிறார்கள். 'ஹே கேசவா! ஹே முகுந்தா! ஹே தாமோதரா! ஹே வாசுதேவா!'

அந்தக் குடை ஓர் அசை அசையும்! அவன் கொண்டை ஒரு குலுங்கு குலுங்கும். அந்த முத்து மாலைகள் அப்படி அசைந்து, குலுங்கி நிற்பான் பரமாத்மா.

எழுந்தருளப்பண்ணும்போது, முன்னே தமிழ் வேதம், பின்னால் சமஸ்கிருத வேதம், இங்கே இடையிலே பரமாத்மா வரதராஜன் குதிக்கிறான்! 'அவ்வளவு சந்தோஷம் அவனுக்கு ஏனடா வந்தது?' என்று கேட்டால், 'முன்னால் சொல்கிற அந்த மறைக்கும் பின்னால் சொல்கிற அந்த வேதத்துக்கும் நான்தான் குரு; நான்தான் குரு' என்று உற்சாகமாகக் குதிக்கிறானாம் – 'இந்த இரு கூட்டங்களும் சொல்வது 'தகும்' 'தகும்' என்று குதிக்கிறானாம் பரமாத்மா! உபய வேதாந்தமாகத் தாம் இருப்பதைக் குதித்துக் குதித்து பரமாத்மா காட்டுகிறான்.

அப்படி எம்பெருமான் வருகிற அழகை அந்தக் காஞ்சி நகரத்திலே பார்த்தவருக்கு, வைகுண்டவாசம் பிடிக்குமோ!

'ஏ தேவாதிராஜா! அத்திகிரி வரதா! உன் திருவடியிலே சத்யம் பண்ணிச் சொல்கிறேன் – வைகுண்ட வாசமும் எனக்குப் பிடிக்காது. இந்த திவ்ய க்ஷேத்திரத்திலே உன்னுடைய அழகை அனுபவிக்கும்படியான பாக்கியம் இருக்கிறதே அது போதும் எனக்கு...' என்று சொல்லிவிட்டார்!

(தொடரும்)

**பத்துக் கட்டளைகள்**

**கம்ப்யூட்டர் திரையிலே தொடர்ந்து உற்றுப் பார்க்க வேண்டிய கட்டாயம் ஏற்பட்டால் கண்களுக்கு பாதிப்பு உண்டா? கண்கள் மட்டுமல்ல உடலின் மற்ற பகுதிகளுக்கும் அந்த சமயத்தில் ஏற்படக் கூடிய பாதிப்பைத் தவிர்க்க (அல்லது குறைந்த பட்சம் குறைக்க) இதோ சில டிப்ஸ்.**



# கம்ப்யூட்டர்காரர்களே, கவனியுங்கள்!

● இரண்டு நிமிடங்களுக்கு ஒரு முறையாவது கம்ப்யூட்டர் திரையிலிருந்து உங்கள் கண்களை அகற்றி, வேறு ஏதாவது பொருளைப் பாருங்கள். அதே போல் ஒரு மணி நேரம் தொடர்ந்து கம்ப்யூட்டரில் வேலை செய்தால், கண்களுக்கு ஒரு பத்து நிமிட ஓய்வு கொடுப்பது நல்லது. அதே சமயம் அந்த ஓய்வு நேரத்தில் பொடி எழுத்துப் புத்தகங்களைப் படிப்பது போன்ற கடினமான வேலைகளைச் செய்ய வேண்டாம்.

● திரையில் மின்னும் எழுத்துக்களும், நீங்கள் அவ்வப்போது சரிபார்க்க வேண்டிய, கைவசமுள்ள தாளில் உள்ள விவரங்களும் பளிச் சென்று தெரியும் விதத்தில் அறைக்குள் ஒளி இருக்கட்டும். அந்த ஒளி நேரடியாக உங்கள் கண்களில் படுவது போல் இருக்கக் கூடாது.

● சில இடங்களில் கம்ப்யூட்டருக்கு அருகே மட்டும் பளிச்சென்ற ஒளி, மற்ற இடங்களில் மங்கலான ஒளி என்று அமைத்திருப்பார்கள். இது நம்ம கண்ணுக்கு அவ்வளவு நல்லதில்லைங்க... சீரான ஒளியே சிறப்பு!

● ஜன்னல் மூலமாக உள்ளே நுழையும் ஒளி, இடைஞ்சலாக இருக்கலாம். ஜன்னலில் இதைத் தடுக்கும் 'வெனீஷியன் ப்ளைன்டு'கள் மற்றும் திரைகளைப் பயன்படுத்தலாம்.

● வெளியிலிருந்து வரும் வெளிச்சம்தான் கண்களைக் கூசவைக்க வேண்டும் என்பதில்லை, கம்ப்யூட்டர் திரையிலிருந்து வெளியாகும் கதிர்கள்கூட நாளாவட்டத்தில் கண்களுக்குச் சோர்வை ஏற்படுத்தலாம். வீடியோ திரைகளில் ஒட்டிக் கொள்ளும் வகையில் Anti glare filters கிடைக்கின்றன. அவற்றைப் பொருத்திவிட்டால் கண்களுக்கு ஏற்படும் சோர்வு குறையும்.

● கீ போர்டை இயக்கும் போது உங்கள் விரல்கள், கைகளின் முன்பாதி ஆகியவை வளையாமல், கிட்டத்தட்ட தரைக்கு இணை கோடு போன்ற நிலையில் இருப்பது நல்லது. இதன் மூலம் கை நரம்புகளுக்கு ஏற்படக் கூடிய அயர்ச்சியைக் குறைக்கலாம்.

● பாதங்கள் தரையின் மீது தட்டையாகப் பதிந்திருக்கட்டும். தேவைப்பட்டால் (அதாவது கால்கள் ஒரே இடத்தில் பதிந்திருப்பது முடியாத காரியம் என்று நினைத்தால்) கால் தாங்கியை (Foot rest) பயன்படுத்தவும்.

● ஏதாவது ஒரு தாளில் உள்ள விவரங்களை கம்ப்யூட்டரில் செலுத்துகிறீர்கள் என்று வைத்துக் கொள்வோம்... அந்தத் தாளும் கம்ப்யூட்டர் திரையும் முடிந்தவரை ஒரே உயரத்தில், கண்களிலிருந்து கிட்டத்தட்ட ஒரே தூரத்தில் இருக்கட்டும். கண்கள் அலை பாய்ந்து அவஸ்தைப்படுவதை குறைத்துக் கொள்ளலாம்.

● திரையின் மேல் பகுதி உங்கள் கண் மட்டத்திலிருந்து சற்று கீழே இருந்தால் நல்லது. பொதுவாகவே கண்ணிலிருந்து திரைக்குள்ள தூரம் ஒன்றரையிலிருந்து இரண்டடி தூரத்திற்குள் இருக்கட்டும்.

● கீழ் முதுகுக்கு சப்போர்ட் கொடுக்கும்படி நாற்காலி இருக்கட்டும். அதுமட்டுமல்ல, சுழலக் கூடியதாகவும், அதே சமயம் விழுந்து விடாத அளவுக்கு உறுதியான அமைப்புக் கொண்டதாகவும் இருக்க வேண்டும்.

— ஜி.எஸ்.எஸ்.

• 'தில்லே' கேஸட் கேட்டீங்களா? லதா மங்கேஷ்கர் பாடியிருக்கறதையும் ரஹுமான் பாடியிருக்கறதையும் ரொம்ப என்ஜாய் பண்ணேன். பர்டிகுலரா ரஹுமான் பாடியிருக்கற அந்த 'தில்லே ரே'. தன்னோட வழக்கமான உச்சஸ்தாயி கலாட்டாவை ஏறக் கட்டிட்டு எத்தனை மிருதுவா, வருடலா பாடியிருக்கார்? லவ்லி. ஒரு செகண்ட், இது ரஹுமான்தானான்னு சந்தேகமே வந்து கேஸட் ரேப்பரை ரெஃபர் பண்ணிட்டு தான் திருப்தி ஆனேன். தமிழ் வெர்ஷன் 'உயிரே'வும் கேட்டேன். ஏனோ எனக்கு அத்தனை அப்பீலிங்கா இல்லை. But onething. இன்னும் ஒரு வருஷத்துக்கு நம்ம ஊர் டீக்கடையெல்லாம் தைய தைய தையான்னு அலறிட்டு இருக்கப் போறது உறுதி.

• ஒரு நியூஸ் படிச்சேன். நியூஸ்தான். ஆனா அந்தச் செய்தியோட கடைசி வரி அதை ஒரு ஷார்ட் ஸ்டோரியா மாத்திடுது! (Thanks to குல்தீப் நய்யார்)

பாபர் மசூதி இடிக்கப்பட்ட இடத்துல ஒரு தாற்காலிக ராமர் கோவில் இப்ப இருக்கு. வழிபாடும் நடக்குது. But, மசூதி இடிக்கப்படும் முன்னால் அங்க இருந்த ராமர் சிலை இப்ப இல்லை. அதை யாரோ திருடிட்டுப் போயிட்டாங்களாம். ஸோ, புதுசா ஒரு சிலைக்கு ஆர்டர் பண்ணி, செய்து வெச்சிருக்காங்க.

இந்தப் புது சிலையை செய்து தந்தவர்கள் முஸ்லிம் சிற்பிகள்!

• இ.வா.ஜோ:

ஓர் ஆப்பிரிக்க நாட்டுக்கு, அண்டை தேசத்து அதிபர் ஒருத்தர் கெஸ்டா வந்திருந்தார். ஒரு பொதுக்கூட்டத்துல பேச ஏற்பாடு பண்ணி இருந்தாங்க.

அவர் ஒவ்வொரு வாக்கியம் பேசி முடிச்சதும் கூடியிருந்த ஜனங்க "பப்லூ! பப்லூ!"ன்னு கத்தினாங்க.

பேசினவருக்கு ஒரே குஷி. 'நம்ம ஊர்ல 'ஹியர், ஹியர்'னு உற்சாகமா கத்துவாங்களே, அது மாதிரி இந்த நாட்டு லேங்வேஜ்ல கத்தறாங்க போல'ன்னு இன்னும் பிரமாதமா பேச ஆரம்பிச்சாரு. ஜனங்களும் Non stop.ஆ பப்லு பப்லுன்னு கத்திட்டே இருந்தாங்க.

கூட்டம் முடிஞ்சி, அந்த அதிபர் கார்ல இரும்பும்போது வழியில ஒரு காட்டெருமைக் கூட்டம்!

டிரைவர் பயந்து போய் வண்டியைத் திருப்பிட்டே சொன்னார்: "அதிபர் சார்! நாம வேற ரூட்ல போகலாம். இப்படிப் போனா பப்லூஸ் நம்மை சும்மா விடாது."

அனுப்பியவர்:
சிட்லப்பாக்கம் ஷண்முகசுந்தரம்

# சுமி சூப்பர் மார்க்கெட்!

● லாஸ்ட் வீக் மவுண்ட் ரோடு எல்.எல்.ஏ. பில்டிங் மீட்டிங் ஹால்ல ஒரு புஸ்தக விமர்சனக் கூட்டத்துக்குப் போயிருந்தேன். விமர்சிக்கப்பட்ட புஸ்தகம் – ஜெயமோகனோட 'விஷ்ணுபுரம்' நாவல். எழுதின ஆளை எதிரே உட்கார வைச்சிட்டு, புஸ்தகத்தை நார் நாரா கிழிக்கற நவீன கலாசாரத்தை அங்கே பார்த்தேன். ஒரு கோஷ்டி, காரசாரமா குறைகளை மட்டும் அள்ளி வீச, இன்னொரு கோஷ்டி, 'இது நாவலே இல்லை; அதுக்கும் மேலே; காவியம்'னு ப்ருவ் பண்ண மகா கஷ்டப்பட்டுட்டு இருந்தாங்க. இந்த ரெண்டு கட்சியோடவும் சேராம பிரபஞ்சன், 'இது விமர்சனமில்லை'ன்னு சொல்லிட்டு ஜெயமோகனை ஒரு நாலு பக்கம் வாழ்த்திட்டுப் போயிட்டார்.

கொஞ்ச நாளா பார்க்கறவங்க எல்லாருமே கேக்கற விஷயம் 'விஷ்ணுபுரம், படிச்சியா?'

ரொம்பப் பரபரப்பு ஏற்படுத்தி இருக்கற இந்த எழுநூத்தி சொச்சம் பக்கம் உள்ள நாவலை நான் ஒரு தரம் படிச்சிட்டேன். ஏதாவது அபிப்பிராயம் சொல்லணும்னா, இன்னொரு தரம் இன்னும் கொஞ்சம் ஆழமா படிச்சப்புறம்தான் முடியும். இந்த மாசக் கடைசிக்குள்ள படிச்சிட்டு, அடுத்த மாசத்துக்குள்ள கொஞ்சம் விரிவா எழுதறேன்.

(பி.கு: ஒரு இலக்கியக் கூட்டத்துக்கு சுமார் நூத்தம்பது பேர் வந்திருந்த அதிசயத்தை போன ஞாயிற்றுக்கிழமை நடந்த இந்தக் கூட்டத்தில் முதல் முறையா பார்த்தேன்.)

— சுமி

# எங்கும் ஜெயா!





# மனதில்

இதோ இந்த வீட்டுக்குள்தான் கிணற்றடிக்குப் பக்கத்திலிருக்கும் கடைசி அறையில்தான் பவானி தூக்குப் போட்டுக் கொண்டு தொங்கியது.

பவானியின் வாழ்க்கை, அவளின் இருபத்தி நான்காவது வயதுக்குள் ஒரு சேலை முடிச்சில் இறுகி விட்டது.

யாரும் எதிர்பார்க்கவில்லை. பாலாவுக்குப் பெரும் அதிர்ச்சியாய் இருந்தது. சரோஜாம்மாவுக்கும், வேணுமாமாவுக்கும் அந்தச் சம்பவம் பெரிய இடி மாதிரி.

மறுபடி கணவனோடு வாழப் போனவள். பெட்டியோடு நம்பிக்கையைத் தாங்கிக் கொண்டு போனவள். பதினைந்தே நாட்களில் திரும்பி வந்து விட்டாளாம்.

வந்தவள், "எனக்கு இனி எல்லாமே முடிஞ்சு போச்சும்மா..." என்று ஒரு நாள் முழுக்க அழுதபடி இருந்தாளாம்.

அதற்கப்புறம்தான் அவள் அப்படியொரு முடிவு எடுத்தது. எந்தவிதக் கடிதமோ, குறிப்போ கூட எழுதி வைக்காமல் தான் அந்தக் காரியத்தை அவள் பண்ணினது. காலை நாலு மணி வேளையில். அவள் இறந்து மூன்று மணி நேரம் கழித்துத்தான் அது தெரிய வந்ததாம்.

பிறகு... போலீஸ், விசாரணை, பிரேதப் பரிசோதனை, பவானி என்கிற அந்தக் கறுப்பு தேவதை போகும் போது கூட முழுசாய்ப் போய்ச் சேரவில்லையாம். சரோஜாம்மா அழுதபடி எல்லாம் சொன்னாள்.

அவளைப் பார்க்க முடியவில்லை. இறுதிச் சடங்கில் கூடக் கலந்து கொள்ள முடியவில்லை, அவனால். "நீ போக வேண்டாம்" என்றார் அப்பா. போகக் கூடாது என்பதற்குக் கல்யாணம் நிச்சயமாயிருப்பதைக் காரணம் சொன்னார்கள் வீட்டில்.

அதற்கப்புறம் கல்யாணமாகி தேவகியோடு அந்த வீட்டுக்குப் போனான் பாலா. மனைவியோடு வந்திருக்கும் அவனை முதலில் சந்தோஷமாய்த்தான் வரவேற்றார்கள் வேணு மாமாவும், சரோஜாம்மாவும். ஆனால் அவனைப் பார்த்ததும் வெடித்த துக்கத்துக்கு அணை போட முடியாமல் கண் கலங்கினார்கள் இருவரும். தேவகியிடம் எல்லாம் சொல்லித்தான் கூட்டிப் போனது. அவள் மௌனமாய் அந்தத் துக்கத்தில் தானும் பங்கெடுத்துக் கொள்வது

போல் உட்கார்ந்திருந்தாள்.

ஆறு மாதம் கழித்து அவர்கள் அந்த வீட்டைக் காலி பண்ணி விட்டு வேறு ஊருக்குப் போய் விட்டார்கள், சரோஜம் மாவின் அக்கா இருக்கிற ஊருக்கு. சுமார் இருபத்தியேழு வருடங்கள் குடியிருந்த வீடு. பவானி பிறந்ததும், வளர்ந்ததும் கூட அங்கேதான் என்று பாலாவிடம் சரோ ஜாம்மா சொல்லியிருக்கிறாள். இப்போது அவளின் இறப்பு கூட அங்கேதான் என்றாகி விட்டது.

பாலாவும் கல்யாணத்துக்கப்புறம் வேறு இடத்துக்குப் போய் விட, பின்னர் அவர்களை அடிக்கடி பார்க்க முடியாமல் போய் விட்டது. ஆனால் பவானி மட்டும் அழிக்க முடியாதபடி அவன் மனதோடு கலந்து விட்டிருந்தாள்.

# 4

# உனது ஆதிக்கம்

## சித்ரன்

இரண்டு வருடங்கள் கழித்து அவர்களிருந்த வீடு விற்பனைக்கு இருப்பதாகத் தகவல் தெரிந்தது. உடனே பாலாவுக்குச் சந்தோஷம் தொற்றிக் கொண் டது. அந்தச் சமயத்தில்தான் அப்பாவும் அவனும் வீடு வாங்க வேண்டும் என்று அலைந்து கொண்டிருந்ததும்.

மிகக் குறைந்த விலைக்கு அவ்வளவு பெரிய வீடா என்பது முதலில் ஆச்சரியமா யிருந்தது. இதுவரைக்கும் யாரும் வாங்க வில்லை. அந்த வீடு பற்றி உலவும் வதந்தி கள்தான் காரணம் என்பது பிற்பாடு தெரிந் தது.

நடு இரவில் யாரோ முன் கதவை இடிக்கிற சப்தம் கேட்கிறதாம். அப்புறம் கொலுசுச் சப்தம். மல்லிகைப் பூ வாசம் என்று ஆளாளுக்கு நிறைய பிசாசுக் கதை கள் சொன்னார்கள்.

பாலா லேசாய்ச் சிரித்துவிட்டு எல்லா வற்றையும் நிராகரித்தான். அவனுக்கு ஒரு வீடு வேண்டும். இத்தனை சின்ன வயதுக் குள்ளேயே தன்னால் உழைத்துச் சம்பாதிக்க முடிந்த பணத்தை ஒரு அசையாச் சொத்தாக மாற்ற வேண்டும். அப்பாவும் பணம் தருவதாகச் சொல்லியிருக்கிறார்.

அதுவும் பவானி வாழ்ந்த வீட்டை வாங்க அவனுக்கொரு வாய்ப்பு என்பதை அவனால் நம்ப முடியவில்லை.

"இன்னும் மூன்று மாதத்திற்குள் ஆல்டர் செய்யப்பட்ட புத்தம் புதிய வீடு இங்கே யிருக்க வேண்டும். 'பவானி மேல் வைத்தி ருந்த நேசத்தின் நினைவாக" என்று மன துக்குள் ரகசியமாகச் சொல்லிக் கொண் டான் பாலா.

வீட்டைப் பார்க்க வருகிறாயா என்று தேவகியிடம் கேட்டபோது, வரவில்லை யென்றாள். அப்பாவுக்கு வேறு ஏதோ வேலையிருந்தது.

வீட்டுக்காரரிடம் சாவி வாங்கிக் கொண்டு அவன் மட்டும் தனியே போனான்.

மூலையில் இரண்டு வருடங்களுக்கு முந்தைய காலண்டர் ஒன்று சுருண்டு கிடந் தது. பேப்பர் குப்பைகள். விளக்குமாறு. இடித்து மேலே மாடி அறை கட்டுவதா யிருந்தால் இந்த அறையின் வலது மூலை யிலிருந்து படிகள் அமைத்துக் கொள்ள லாம்.

பாலா கணக்குகள் போட்டான்.

'சொத்' என்று மேலிருந்து ஒரு பெரிய பல்லி விழுந்தது. மேலும் அறைகளுக்குள் நடந்தான். ஷூவைக் கழற்றி வைத்து விட்டு நடந்தால் நிச்சயம் பாதங்களை பிசுபிசுக்க வைக்கும் புழுதி தரையில் படிந்து கிடந்தது.

கதவுகளைப் பெரிசுபடுத்த வேண்டும். ரொம்ப நிமிர்ந்தால் இடித்து விடக்கூடிய உயரம்தான் அவை இருந்தன. இந்தக் கதவு களில் எப்போதும் வேணு மாமா நன்றாய்க் குனிந்து நுழைய வேண்டியிருக்கும். நல்ல உயரம் அவர்.

உள் அறைக் கதவுகளையும் ஜன்னல்

களையெல்லாம் திறந்தான். வெளிச்சம் மிக மங்கி விட்டது. சுவரில் ஸ்விட்சை போட்டுப் பார்த்தால் விளக்கு எரியவில்லை.

அடுத்த அறை கொஞ்சம் வெளிச்சமாயிருந்தது. அதை அறை என்று கூட சொல்லிவிட முடியாது. மேற்கூரை ஒரு சதுர வடிவில் நான்கு பக்கமும் தாழ்ந்து, நடுவில் கம்பிகள் வைத்துக் கட்டப்பட்ட மேல் திறப்பு. அதற்கு நேர் கீழே தரையில் சதுரமாய் தாழ்வான இடம். மழையும் வெயிலும் நேராய்த் தரையிறங்குகிற இடம். ஒரு முற்றம் மாதிரி.

அந்த முற்றத்தைக் கடந்து பின் கதவையும் தள்ளித் திறந்தவுடன் தென்பட்ட கிணற்றடி. ஒரு காகம் உட்கார்ந்து கரைந்து கொண்டிருந்தது. எட்டிப் பார்த்ததில் முகம் ரொம்பக் கிட்டத்தில் தண்ணீரில் ஆடியது. தண்ணீர் நிறைய இருக்கும் போலும். ஒரு மோனோபிளாக் பம்ப் வைத்துக் கொண்டால் தண்ணீருக்குப் பிரச்னை இருக்காதென்று நினைத்துக் கொண்டான்.

"பவானி நீ விருப்பப்பட்டா உன்னைக் கல்யாணம் பண்ணிக்கத் தயாராயிருக்கேன்."

இந்தக் கிணற்றடியில்தான் கேட்டது. ஆனால் அவளுக்குக் கொடுத்து வைக்கவில்லை.

பாலாவுக்கு ஆரம்பத்தில் அவள் மேலிருந்தது இரக்கம் மட்டுமே. கல்யாணம் ஆன பின் அவள் எதிர்பார்ப்புகள் நொறுக்கப்பட்டு, கொடுமைக்கு ஆளாகிறாளே என்ற பரிதாபம். அதுவே நட்பாக மாறி, அது அவள் வாழ்க்கை பற்றின அக்கறையாகவும், தவிப்பாகவும்கூட மாறுதல் கொண்டு விட்டது எப்படியோ. அதை உணர்ந்து கொண்டபின்தான் அவன் விருப்பத்தை அவளிடம் சொன்னது. நடந்தவற்றுக்கு ஒரு முற்றுப் புள்ளி வைத்து விட்டு, அவளுக்கொரு வாழ்க்கை கொடுத்தாலென்ன என்ற யோசனையில், ரொம்ப நாள் தனக்குள்ளேயே கேள்விகளால் போராடி விட்டு, ஒரு நாள் அவன் தயங்கித் தயங்கி கேட்டதுதான் அது. அது ஒரு வகைத் தீர்மானமும் கூட.

அந்த நேரம் அவள் முகத்தில் தெரிந்த அதிர்ச்சி இன்னும் ஞாபகமிருக்கிறது. கிணற்றுக்குள் விழுந்த குடத்தை அப்படியே விட்டு விட்டு அவள் வீட்டுக்குள் ஓடினதும், என்ன செய்வதென்று தெரியாமல் கிணற்றுக்குள் தெளிந்த நீரில் முகம் பார்த்துக் கொண்டு நின்றதும் இப்பொழுதும் தெளிவாய் மனசில் நிற்கிறது.

பாலா கிணற்றுமேட்டிலிருந்து ஒரு வேப்பங் கொட்டையைக் கண்டு விரலால் தட்டி விட்டான். அது உள்ளே விழுந்து கிணற்றின் சலனமற்றிருந்த நீர்ப்பரப்பில் அவன் முகம் அலைந்து கலைந்தது.

ஒவ்வொரு இடத்தையும் பார்க்கப் பார்க்க நிழலாடிக் கொண்டேயிருக்கும் பவானியின் நினைவுகள்.

''கிணத்துக்குப் பக்கத்துல ஒரு ரூம் தனியா இருக்குமே. அங்கதான் அவ சுருக்குப் போட்டுத் தொங்கினது...''

பாலா அந்த அறையைப் பார்த்தான். பின்பக்கம் கிணற்றருகில் பிரதான வீட்டுக்கு சம்பந்தப்படாத தாழ்வான அறை. ஒற்றையாய் நின்றிருந்தது. உயரக் காம்பௌண்டு அதோடு முடிந்து, பின்பக்க வீட்டின் மேல் புறப் புகைபோக்கி தெரிந்தது. அறையின் சுவரில் ஓரிடத்தில் செடி முளைத்துப் பெரியதொரு விரிசல். முன்பு ஸ்டோர் ரூமாக உபயோகப்பட்ட இடம்.

பவானியின் மூச்சு நின்று போன அறை. பூட்டப்படாமல் வெறுமனே தாழிடப்பட்டிருந்தது. எளிதில் திறக்க முடியாதபடியும் இருந்தது. பாலா அதை மேலும் கீழும் ஆட்டி ஆட்டித் திறந்தான். நிசப்தத்தின் பெரும் பகுதியை 'க்ரீச்' என்ற சப்தம் நெரித்தது. கதவுகளைத் தள்ளினான். அந்த வீட்டின் வேறெந்த அறைக் கதவுகளையும் விட அதிகமான சப்தமெழுப்பிக் கொண்டு திறந்தது அது. கழுத்தைக் குனிந்து கொண்டு உள்ளே நுழைந்தான்.

ஸ்விட்சைத் தேடி விளக்கைப் போட்டான். வெகு மங்கலாய் ஒரு பல்பு எரிந்தது. சுவரோரத்தில் ஒரு கரப்பான் பூச்சி மல்லாந்திருந்தது. சுற்றிலும் பார்த்தான். 'சரக்' கென்று காலடியில் எலி ஓடியது. திடுக்கிட்டு நகர்ந்தான்.

அறை முழுக்க புழுக்க நெடி. ஜன்னல்களற்ற அறை. எல்லா இடத்திலும் சிலந்தி வலைகள் தொங்கின. மூச்சு முட்டுவதாய் உணர்ந்தான். பவானி தன் கடைசி நொடிகளை வாழ்ந்த இடம். பாலா நிமிர்ந்து மேலே உத்தரத்தைப் பார்த்தான். ஓர் ஆளை விடவும் மூன்றடி அதிகமாக உயரமிருக்கும். மர இடுக்கில் பனை விசிறியொன்று செருகப்பட்டிருந்தது.

இந்த உத்தரத்திலிருந்துதான் சேலையில் முடிச்சிட்டு கழுத்தில் அதை இறுக்கிக் கொண்டு...

தனிமையான இடமாய்த் தேர்ந்தெடுத்து, கிடைத்த வசதியில் உயிரை மாய்த்துக் கொண்ட கோரம்.

ஒரு நொடி அந்த அறைக்குள் பவானி

உத்தரத்தில் கட்டின சேலையில் தொங்கிக் கொண்டிருக்கிற மாதிரியும் மூலையில் உட்கார்ந்து அவன் பார்த்துக் கொண்டிருக்கிற மாதிரியும் லேசான கற்பனையொன்று மனத்தில் ஓடியது.

உடம்பு சிலிர்த்தது.

அந்தக் கற்பனைக்கப்புறம் அந்த அறையின் பரப்பளவுக்குள் மெதுவாய் ஒரு அமானுஷ்ய உணர்வு பரவின மாதிரி கூட தோன்றியது அவனுக்கு. இந்த அறையை என்ன செய்வது. ரொம்பச் சின்னதாகவும் இருக்கிறது. முன்பிருந்தது போலவே ஸ்டோர் ரூமாக அல்லது...



"ஒரு திருடனை துப்பாக்கி காட்டி மிரட்ட வேண்டியதா போயிடிச்சு!"
"பலே! கைது பண்ணவா...?"
"அட நீங்க வேற... மாமூல் வாங்கறதுக்குத்தான்!"
– காழி ஆர். சீதாராமன்

கவனத்தை வேறு திசையில் திருப்ப முடியாமல் மறுபடி, மறுபடி அவள் நினைவே வந்து நின்றது. பல கேள்விகள் அவன் மனதைத் துளையிட ஆரம்பித்தன.

ஏன் இப்படிச் செய்தாள்? திடீரென ஸ்தம்பித்துப் போன வாழ்வால், சட்டென ஒரு கணத்தில் ஏற்பட்ட மன அழுத்தத்தால் ஏற்பட்ட முடிவா? எத்தனை அழகான ரசனையுள்ள, அன்புள்ள பெண்?

எப்போதும் வருகிற அவள் நினைவுகளை விட இப்பொழுது கொஞ்சம் அதிகமானது போல் உணர்ந்தான். அந்த அறையும் அதன் அரை இருட்டுச் சூழ்நிலையும், அந்த மேற்கூரையும்...

இனியும் இங்கே நின்று கொண்டிருக்க வேண்டாம்.

பாலா வெளியே வர யத்தனித்த போது அது பார்வையில் பட்டது. அறை மூலையில் என்ன அது? அருகில் போய்க் குனிந்து பார்த்தான். தூசும், குப்பையும் படிந்து அடையாளமற்றிருந்த அதை எடுத்துப் பார்க்க ஏதோ ஒரு ஈர்ப்பு உந்தியது. எடுத்துப் பார்த்ததும் அவன் புருவம் உயர்ந்தது.

அது ஒரு பொம்மை. காகிதக் கூழ் கொண்டு செய்யப்பட்டது. அவனுக்குத் திக்கென்றது.

சின்ன அலகு, ஒழுங்கற்ற கால்கள், விரித்த இறக்கையுடன் பாதி முடிவடைந்த நிலையில்... ஒரு பறவை உருவம்.

பவானியின் ரசனையின் மிச்சம்.

நான் வேண்டுமென்று கேட்டிருந்த பொம்மையா இது? அவனுக்குள் ஓடிய கேள்வி வியப்பாய் முகத்தில் வந்து நின்றது. பாலாவுக்கு அந்த நொடியில் அந்தப் பொம்மை அவனுக்காக பவானியால் செய்யப்பட்டதாக இருக்கும் என்று நம்புவதிலேயே நூறு சதம் விருப்பமாயிருந்தது. சந்தேகமே இல்லை. இது அதுதான். இது மட்டும் எப்படி இங்கேயே கிடக்கிறது இத்தனை நாளாய்?

பாலா அதைத் திருப்பித் திருப்பிப் பார்த்தான். மனசெங்கும் ஒரு கலக்கம் வர, கண்கள் பனித்தன.

பொம்மையைக் கையில் எடுத்துக் கொண்டான். விரல்கள் லேசாய் நடுங்குவதை உணர்ந்தான்.

சட்டென்று விளக்கை அணைத்து விட்டு அந்த அறைக்குள்ளேயிருந்து வெளியே வந்தான். சுற்றிலும் கும்மிருட்டாய் இருந்தது. கிணற்றடி தெரியவில்லை. மளமளவென்று கதவு ஜன்னல்களையெல்லாம் சாத்தினான். தாழ்ப்பாள் போட்டான்.

கொஞ்ச நாளில் இந்த வீடு அங்கங்கே இடிக்கப்படும். அந்த அறை உட்பட. பின் வேறு வடிவம் பெறும். பவானியின் தடயங்கள் அழிக்கப்படும். குடிவந்த பின்னர் தினசரி இயந்திர வேலைகளுக்கிடையே அவனின் ஞாபகச் சுவடுகள் அழிந்து போகும். அது பவானியின் வீடு என்ற பிம்பம் நிச்சயமாய்க் கலையவும் கூடும்.

மறுபடி மூன்று தடவை திருப்பி அந்தப் பூட்டைப் பூட்டினான். அவன் மனதுக்குள் புரியாததொரு தத்தளிப்பாய் இருந்தது. யோசனையின் கனத்தில் தலை பாரமாயிருந்தது அவனுக்கு.

தெருவில் இறங்கி நடக்கும் போது பாலா அந்த முடிவுக்கு வந்திருந்தான். 'வீட்டுக்காரர் கேட்டால் இந்த வீடு வேண்டாம்' என்று சொல்ல வேண்டும்.

(முற்றும்)

# ஆகஸ்டில் பெய்யும் ஆகாயப் பூமாரி!

'எட்டா பெர்ஸி' (Eta Persei) விண்மீன் தொகுதியை ஒட்டியுள்ள வான் பரப்பில் நிமிடத்துக்கு ஒன்று என்கிற விகிதத்தில் தொடர்ந்து நடைபெறும் எரிகற்களின் சொரிகை ஆகஸ்ட் மாதத்தின் இரண்டாம் வாரத்தில்தான் நிகழ்கிறது!

நிலவற்ற இருண்ட வானத்தில் மத்தாப்பு போல நீண்ட ஒளிக் கோடுகளாய்த் தோன்றி மறையும் ஒளிக்கீற்றுகளைப் பார்த்திருக்கிறோம். எரி கற்கள் என்றும், எரி நட்சத்திரங்கள் என்றும் அழைக்கப்படும் இவ்விண் பொருட்கள் லட்சக் கணக்கில் விண்வெளியில் மிதந்து கொண்டிருக்கின்றன. இவற்றில் சிலவே நமது பூமியின் ஈர்ப்பு விசையால் ஈர்க்கப்பட்டு, வளி மண்டலத் தடுப்புச் சுவரைப் பிளந்து கொண்டு உட்புகுகின்றன. தரையை நோக்கி மிகுந்த வேகத்துடன் பயணிக்கும் இவை, காற்று மண்டல உராய்வினால் தீப் பிடித்து விண்ணிலேயே எரிந்து போய் விடுகின்றன. இவற்றையே நாம் 'எரிகற்கள்' என்கிறோம். இவ் எரிகற்கள் குறிப்பிட்ட சில நாள்களில் அதிக எண்ணிக்கையில் தோன்றுவதைப் பண்டைய நாட்களிலிருந்தே மனித இனம் கவனித்து வந்திருக்கிறது.

'பெர்சிட்ஸ்' எரிகற்களின் சொரிகை' என்று குறிப்பிடப்படும் 'ஆகஸ்ட் மாத' நிகழ்வு, முதலில் கி.பி 36 ஜூலை 17ல் சீன வானியலாளர்களால் பதிவு செய்யப்பட்டதாகத் தெரிகிறது! அதன் பின்னர் ஏறத்தாழ எழுநூறு வருடங்கள் கழித்து, சீன, ஜப்பானிய, கொரிய வானியல் ஆய்வுகளில் இது பற்றிய தகவல்கள் இடம் பிடித்துள்ளன.

ஐரோப்பியர்களது கவனத்தை இந்தப் 'பெர்சிட்ஸ்' எரிகற்கள் கவர்ந்தது கி.பி.811ல். அதன் பின் கி.பி 830லிருந்து வருடந்தோறும் இந்த நிகழ்ச்சிகள் பதிவு செய்யப்பட்டு வந்துள்ளன. எனினும் 1835-ம் ஆண்டுக்குப் பிறகே உலக வானியல் அறிஞர்களது பார்வை இதன் பக்கம் திரும்பியது.

சூரிய மண்டல வால்வெள்ளிகளுள் ஒன்று (வால் நட்சத்திரம் என்றும் சொல்லலாம்) 'சுவிஃப்ட் டட்டில்'. இது சூரியனை வலம் வரும் போது சுற்றுப்பாதை நெடுகிலும் மேகமூட்டம் போன்ற வாயுத் துகள்களை வாரியிறைத்து விட்டுச் செல்லும். அந்தத் துகள்களினூடே பூமி சஞ்சரிக்கும்போது, அவை மணிக்கு 1,35,000 மைல் (விநாடிக்கு 60 கி.மீ) வேகத்தில் வளி மண்டலத்தினுள் நுழைகின்றன. எரிகற்களாக அவை ஒளிர்வதைத்தான் நாம் பூமியிலிருந்தபடி பார்த்து ரசிக்கிறோம்.

பெரும்பாலும் ஆகஸ்ட் 11,12,13 ஆகிய தேதிகளில் மணிக்குச் சுமார் 60 எரி கற்கள் என்கிற எண்ணிக்கையில் வீழ்ந்து கொண்டிருக்கும்! இவ் வற்புதக் காட்சி, உண்மையில் 'ஆகாயப் பூமாரி'யேதான்!

ஸ்பெயின் நாட்டுத் தியாகியான செயின்ட் லாரன்ஸ் மரணமடைந்த தினமான ஆகஸ்ட் 10 (கி.பி 258) தேதியை ஒட்டி இது நிகழ்வதைக் கவனித்த ஐரோப்பியர்கள், ஆரம்ப காலத்தில் இதனை 'லாரன்ஸின் கண்ணீர்' என அழைத்து வந்ததாகத் தெரிகிறது! நாம் இதனை நமது சுதந்தர நன்னாளின் 'ஆகாசப் பூமாரி' என அழைக்கலாம்!

இவ்வரிய காட்சியைக் காண விரும்புபவர்கள் ஆகஸ்ட் 11, 12, 13 ஆகிய நாட்களில் இரவு பன்னிரண்டு மணியளவில் 'எட்டா பெர்ஸி' விண்மீன் தொகுதியை ஒட்டிய பகுதியில் பார்வையைச் செலுத்துவதன் மூலம், நிமிடத்துக்கு ஒன்று எனும் விகிதத்தில் வளி மண்டலத்தைக் கிழித்துக் கொண்டு நுழையும் 'மத்தாப்பு' போன்ற தீப்பந்தங்களை வெறும் கண்களாலேயே கண்டு களிக்கலாம். ●

— சர்வசித்தன்

Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Private Limited. Editor : Mrs. Seetha Ravi
Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.
Telephones : Editorial : 2345624; Circulation Manager : 2345623;
Subscription and Advertisement : 2345622; Chief Administrative Officer : 2345621.
Annual Subscription : India : Rs. 250/-; Overseas : Rs. 1600/- (Air Mail)
Half Yearly Subscription : India : Rs. 125/-; Overseas : Rs. 800/- (Air Mail)

# கல்கி

KALKI 9.8.98



கல்கி + பாண்ட்ஸ்
இணைந்து வழங்கும்
இலவச இணைப்பு!

# அவசர யுகத்திலும் அழகாய் இருக்கலாம்

எல்லோருக்குமே அழகாக இருக்க ஆசைதான். மின்னல் மாதிரி பளீரென்ற அழகுடன் இல்லையென்றாலும் துடைத்து வைத்த விளக்கு மாதிரி பளிச்சென்றாவது இருக்க வேண்டாமா?

வேண்டும்தான். ஆனால் இந்த அவசர யுகத்தில் நம்மை நாமே அழகுபடுத்திக் கொள்ள எங்கே நேரம் கிடைக்கிறது என்கிறீர்களா? அலுத்துக் கொள்ளவே வேண்டாம். ஒவ்வொரு நாளும் செடியில் மலரும் மலர்களைப் போல நாமும் பளிச்சென்று ஃப்ரெஷ்ஷாக இருக்க முடியும். அதற்கான எளிமையான வழிமுறைகளைத்தான் இங்கே படிக்கப் போகிறீர்கள்!

## அழகு என்பது என்ன?

அழகு என்பது நமது உடல் சாமுத்திரிகா லட்சணப்படி அமைந்து, எலுமிச்சம் பழக் கலரில் இருப்பதுதான் என்பதில்லை.

ஃபிரஷ்ஷாகவும் ஆரோக்கியமாகவும் இருப்பதும் அழகுதான் என்பதை பெண்களும் சரி, ஆண்களும் சரி புரிந்து கொள்வது அவசியம்.

## ஃபிரஷ்ஷாக இருப்பது எப்படி?

மேக்கப் என்பதை இரண்டு வகையாகப் பிரிக்கலாம். ஒன்று : இயற்கையாகவே நமக்கிருக்கும் அழகை கவனமாகப் பாதுகாத்துக் கொள்வது. இரண்டாவது : அலங்காரங்கள் செய்து நமது அழகைக் கூட்டிக் காட்டு வது.

திருமணங்கள், விருந்துகள் போன்றவற்றுக்குச் செல்லும் போது





நம்மைக் கூடுதலாக அலங்கரித்துக் கொண்டு போகலாம். ஆனால் தினசரியும் அப்படிச் செய்து கொள்வது செயற்கையாக இருக்கும் என்பது மட்டுமல்ல; அதற்கான நேரமும் நமக்குக் கிடையாது. இருக்கிற அழகைப் பாதுகாத்துக் கொள்வதில் கவனம் செலுத்தினாலே போதுமானது.

## எவற்றையெல்லாம் நாம் அதிக கவனம் எடுத்துக் கொண்டு பாதுகாக்க வேண்டும்?

தோல் (சருமம்), முடி, கண்கள்,

பாதங்கள், கைகள்.
இவற்றைப் பாதுகாப்பது அவசியம்.

முதலில் சருமத்தை எடுத்துக் கொள்வோம். இதில், உலர்ந்த சருமம், எண்ணெய்ப் பசையான சருமம், இரண்டும் கலந்த சருமம், சென்சிடிவான சருமம் என்று நான்கு வகை உண்டு.

இவற்றில் நமது சருமம் எந்த வகையைச் சேர்ந்தது என்பதை நாம் முதலில் தெரிந்து கொள்வது அவசியம். இதைத் தெரிந்து கொண்ட பிறகு, அதற்குத்






தகுந்த மாதிரியான சோப்புகளை உபயோகப்படுத்து வது மிகவும் முக்கியம். அப்போது தான் ஃபிரஷ்ஷாக இருக்க முடியும். சோப்புப் போட்டுக் கழுவினால் போதாதா? அது எந்த சோப்பாக இருந்தால் என்ன என்று நினைக்கக் கூடாது. நமது சருமத்துக்குத் தகுந்த சோப்பைத் தேர்ந்தெடுப்பது முக்கியம்.

## தனித்தனி சோப்புகள் அவசியம்!

ஒவ்வொருவருடைய சருமத்தின் தன்மையும் ஒவ்வொரு மாதிரியான தாக இருக்கும்.

உதாரணத்துக்கு ஒரே குடும்பத்தில் உலர்ந்த சருமம் உடையவர், எண்ணெய்ப்பசையுள்ள சருமம் உடையவர் இரண்டும் கலந்ததான சருமம் உடையவர் என்று பலவிதமாகவும் இருக்கலாம். இந்த நிலையில் ஏதோவொரு பிராண்ட் சோப்பைப் பொதுவாக வாங்கி, அதையே அனைவரும் உபயோகப்படுத்தினால் எப்படி?

ஒரே குடும்பத்தைச் சேர்ந்தவர்களானாலும்–அவர்கள் கணவன் – மனைவியாக இருந்தாலும் அவரவர் சருமத்தின் தன்மைக்கேற்றபடி தனித்தனி சோப்புகளை வாங்கி உபயோகிப்பதுதான் நல்லது. இப்படிச் செய்வதால்




ஒருவருக் குள்ள சரும நோய் இன்னொரு வருக்குப் பரவாமல் தடுக்கப்படும் என்பது இன்னொரு கூடுதல் லாபம்.

சாதாரணமாக சோப்புப் போட்டுக் குளிப்பதுதான் வழக்கம் என்றாலும் இரவில் படுக்கப்



போகு முன் சிறப்பாக கவனம் எடுத்து முகத்தைக் கழுவுவது அவசியம். உடம்புக்கு சோப்புப் போட்டுக் குளிக்கலாம் என்றாலும், முகத்தை அடிக்கடி சோப்புப் போட்டுக் கழுவக் கூடாது. சோப்பில் கலந்திருக்கும் ரசாயனப் பொருள்கள் சிறிதளவேயாயினும் அவை முகத்தின் சரும அழகைக் குலைத்துவிடும் வாய்ப்புகளே அதிகம். எனவே, முகம் கழுவுவதற்கென்றே தயாரித்து விற்கப்படும் கிரீம்களில் ஒன்றைத் தேர்ந்தெடுத்து உபயோகிப்பதுதான் நல்லது.

**நா**ம் வெளியில் போகும் போது, காற்றில் எத்தனையோ அசுத்தங்கள் கலந்திருக்கின்றன. அவையெல்லாம் நமது சருமத்தில் படியும் அல்லவா! அவற்றைச் சுத்தமாகக் கழுவ வேண்டாமா? இப்படிக் கழுவுவதற்கு சோப்பு மாத்திரம் போதாது.

Cleansing milk என்று நமது சருமத்தின் தன்மைக்கேற்பக் கடைகளில் விற்கிறார்கள். அதை

முகத்தில் தேய்த்துக் கழுவும் போது நமது முகத்திலுள்ள கண்ணுக்குத் தெரியாத ஓட்டைகளில் அடைத்துக் கொண்டிருக்கும் அழுக்குகளை முழுமையாக அகற்றுகிறது.

இப்படிக் கழுவும் போது நமது முகத்தில் திறக்கப்பட்ட கண்ணுக்குத் தெரியாத ஓட்டைகள் பழையபடி மூடப்பட வேண்டாமா? அதற்கு, Toner (இதுவும் சருமத்துக்குத் தகுந்த மாதிரி இருக்கிறது) உபயோகப்படும். இதைப் போட்டு மறுபடியும் கழுவுகிற போது திறந்த ஓட்டைகள் மூடப்பட்டு விடுகின்றன.

இரவில் படுக்கப் போகும் போது முகத்தில் எந்தவிதமான மேக்கப்பும்



இல்லாமல் சுத்தமாகக் கழுவி விட்டுப் படுப்பது அவசியம். மேக்கப் போட்டு படுப்பது சருமத்தின் அழகைக் கெடுத்து விடும்.

**கா**லையில் குளித்து விட்டுப் புறப்படும் போது, லோஷனோ, கிரீமோ எதையாவது போட்டுக் கொள்வது அவசியம்தான். ஆனால் உங்கள் சருமத்தின் தன்மைக்கு லோஷன் ஏற்றதா, கிரீம் ஏற்றதா என்பதைத் தெரிந்து கொண்டு, அதற்கேற்ற மாதிரி ஏதாவது ஒன்றைத்தான் போட்டுக் கொள்ள வேண்டுமே தவிர,. கிடைத்ததைப் போட்டுக் கொள்ளக் கூடாது.

அதாவது எண்ணெய்ப் பசையுள்ள சருமத்தையுடையவர்கள் லோஷன் போட்டுக் கொள்ளலாம். உலர்ந்த சருமக்காரர்கள் கிரீமை உபயோகப்படுத்தலாம். இவற்றை யெல்லாம் வாங்கும் போது, அவற்றின் பாக்கெட்டுகளில் எப்படிப்பட்ட சருமத்தையுடைய வர்கள் அவற்றை உபயோகிக்கலாம் என்று போட்டிருக்கிறது என்பதைப் படித்துப் பார்த்து வாங்குவது மிக மிக அவசியம்.

## மஞ்சள், பயத்தமாவு தேய்த்துக் குளிக்கலாமா?

தாராளமாகக் குளிக்கலாம்.



இரண்டுமே மூலிகை விஷயங்கள் தான். பயத்தமாவு எந்த விலையுயர்ந்த சோப்பை விடவும். காஸ்ட்லியாதலால் கட்டுபடியாகுமா என்று பார்த்துக் கொள்ளுங்கள். மஞ்சள் போட்டுக் குளிப்பதை விடுமுறை நாட்களில் - வீட்டிலிருக்கும்போது செய்வதுதான் நல்லது. ஏனெனில் மஞ்சள் பூசிக் குளித்து விட்டு வெளியில் போகும் போது உங்கள் உடல் மஞ்சள்மயமாக - பழைய ஃபாஷனாகத்தான் தெரியும். கூடவே ஆடைகளிலும் மஞ்சள் கறை படியும் என்பதால் பார்ப்பதற்கு அத்தனை பாந்தமாக இருக்காது.

இவற்றையெல்லாம் செய்து விட்டால் மட்டும் தோலும் முகமும் பளபளப்பாக இருந்து விடாது. அடிப்படையாக நமது உடல் ஆரோக்கியமாகவும் இருக்க வேண்டும். அதற்கு புரதம், வைட்டமின்கள் அதிகமுள்ள உணவு வகைகளைச் சாப்பிடுவது அவசியம். முடிந்தவரை கஞ்சத்தன மில்லாமல் தண்ணீர்

குடிப்பதும் சருமத்தைப் பாதுகாக்கும். குறைந்தபட்சம் ஏழு மணி நேரமாவது இரவில் தூங்குவது சருமத்துக்குப் புத்துணர்ச்சி தரும்.

## புன்னகை செய்யுங்கள்...

முகத்திலுள்ள தசைகளுக்குப் புன்னகையை விட சிறந்த பயிற்சி எதுவும் இல்லையென்பதால் புன்னகை செய்வதில் கஞ்சத்தனம் காட்டாதீர்கள். புன்னகை பயிற்சி மட்டுமல்ல; உங்களைச் சுற்றியுள்ளவர்களையும் சந்தோஷப்படச் செய்யும்.

வெயிலில் அலைந்து திரிந்து வேலை பார்ப்பவர்கள் 'Sun Screen' வாங்கித் தடவிக் கொள்வதால் தங்களது சருமத்தை வெயிலிலிருந்து பாதுகாக்கலாம்.

## கண்களைப் பாதுகாப்பது எப்படி?

சுலபமான முறையில் கண்களைப் பாதுகாக்க வெள்ளரிக்காய், சந்தனம், ரோஸ் வாட்டர் உபயோகமாக இருக்கும்.

வெள்ளரிக்காயை வட்ட வடிவில் வெட்டி கண்ணுக்கொன்றாக (கண்களை மூடிக் கொண்டுதான்!) சுமார் பத்து நிமிடங்கள் மேலே வைத்திருக்கலாம். அல்லது

சந்தனத்தை வைத்திருக்கலாம். இல்லையேல் ரோஸ் வாட்டர் போட்டுக் கழுவலாம். இது கண்களுக்குக் குளிர்ச்சியைத் தருவதோடு, சுத்தப்படுத்தவும் செய்யும்.

கண்களின் கீழே கருவளையம் விழுவதுதான் பலருக்கும் ஒரு பெரிய பிரச்னையாக இருக்கிறது.

இதற்கு டாக்டரின் ஆலோசனையோடு, கிரீம்களைப் பயன்படுத்தினால் பலன் இருக்கும். ஆனாலும் உடலில் ஆரோக்கியம் இல்லாமல் எதைப் பயன்படுத்தினாலும் பலனிருக்காது என்பதை மறுபடியும் நினைவில் வைத்துக் கொள்ளுங்கள்!






## கண்களை அழகுபடுத்த....

கண் மை அல்லது eye liner பயன்படுத்தலாம். தொடர்ந்து ஏதாவது ஒன்றைத்தான் பயன்படுத்த வேண்டுமே தவிர இரண்டையும் மாற்றி மாற்றிப் பயன்படுத்தக் கூடாது.

இமை முடிகளைப் பளிச்சென்று தெரிய வைத்துக் கண்களை அழகாகக் காட்ட மஸ்காரா பயன் படுத்தலாம்.

நீங்கள் எதைப் பயன்படுத்தி னாலும் இரவில் படுக்கப் போவதற்கு முன்பாக

எல்லாவற்றை யும் கழுவிச் சுத்தப்படுத்திக் கொண்டு விட வேண்டும் என்பதை மட்டும் மறக்கவே மறக்காதீர்கள்!

## தலைமுடி அழகாய் இருக்க

வாரத்துக்கு இரண்டு முறையாவது ஷாம்பூ போட்டு முடியைச் சுத்தப்படுத்துவது அவசியம். (ஆண்களுக்கு, பெண்களுக்கு என்று தனித்தனி ஷாம்பூக்கள் இப்போது வந்து விட்டன.)

என்றாலும் எல்லா ஷாம்பூவும் எல்லா வகை முடிகளுக்கும் ஏற்றதல்ல. உலர்ந்த முடி, எண்ணெய்ப் பசையுள்ள முடி, நார்மலான முடி என்று மூன்று வகை உண்டு. அததற்கும் ஏற்ற மாதிரியான ஷாம்பூக்கள் விற்கின்றன. உங்கள் முடியின் தன்மைக்கேற்ற மாதிரி தேர்ந்தெடுத்து உபயோகிப்பது அவசியம்.

சில சமயங்களில் நமது தலையில் பொடுகு வந்திருக்கும். அதைப் போக்குவதற்கான ஷாம்பூவை உபயோகித்தால், பொடுகு சரியான பிறகும் அதே ஷாம்பூவை உபயோகப்படுத்தக் கூடாது.

ஷாம்பூவில் கூட இப்போது பல்வேறு மணமுள்ளவை வந்து விட்டன. எப்படி ஆண்களுக்கும்

..கூடாது!



பெண்களுக்கும் தனித்தனி மண முள்ள சென்ட்கள் உள்ளனவோ அப்படி ஷாம்பூவிலும் வந்து விட்டன. இவற்றிலும் நீங்கள் தேர்ந்தெடுத்து உபயோகிக்கலாம்.

ஷாம்பூ போட்டுக் குளிக்கப் பிடிக்காதவர்கள் எண்ணெய், சீயக்காய் போட்டும் முடியைச் சுத்தப்படுத்தலாம்.

தலைக்குக் குளித்த பிறகு நன்றாகத் துவட்ட வேண்டும். ஈரக் கூந்தலைக் கோதி விடலாமே தவிர, சீப்பு போட்டுச் சீவக் கூடாது.

முடி அதிகமாக உதிர்வதற்குப் பல்வேறு காரணங்கள் இருக்கும் என்பதால், நீங்களாகவே எதையாவது பூசிக் கொண்டு விடக்

கூடாது. டாக்டரின் ஆலோசனை அவசியம்.

தலைமுடியை வெட்டி விட்டால் ரொம்பவும் நீளமாக வளரும் என்பது உண்மையல்ல. எனவே, அழகுக்காக வெட்டிக் கொள்ளலாமே தவிர, நீளமாக வளரும் என்று நம்பி வெட்டிக் கொள்ள வேண்டாம்.

## எண்ணெய் தடவலாமா?

சாதாரணமாகத் தலைமுடிக்குத் தேங்காய்






எண்ணெய் தடவுவது வழக்கம். ஆனால் இதைத் தடவித்தான் ஆக வேண்டும் என்பதில்லை. எண்ணெய் தடவுவது உங்கள் அழகைக் கெடுக்கிறது என்று நினைத்தால் Vitalizer (தண்ணீர் மாதிரி இருக்கும்) பயன்படுத்தலாம். அல்லது டாக்டரின் ஆலோசனைப் படி டானிக் கலந்த எண்ணெய்களையும் பயன்படுத்தலாம்.

## பாதங்கள் முக்கியமானவை!

நம்மில் பெரும்பாலோர் பாதங்களைப் பற்றிக் கவலைப்படுவதே யில்லை. இது மிகவும் தவறு.

நம்மில் யாரும் வெல்வெட் விரிப்பில் மட்டுமே நடப்பவர்கள் இல்லை. பல்வேறுவிதமான இடங்களில் நமது பாதங்கள் நடக்கின்றன என்பதால் அங்கு தான் கிருமிகள் அதிகம் வந்து ஒட்டிக் கொள்ளும் வாய்ப்புகள் மிகுதி.

எனவே, மாலையில் வீட்டுக்கு வந்ததும் எந்த அளவுக்கு முக்கியத்துவம் கொடுத்து முகத்தைக் கழுவுகிறோமோ அதே அளவுக்கு முக்கியத்துவம் கொடுத்துப் பாதங்களையும் கழுவ வேண்டும். முகத்துக்குப் போடுவது போன்றே அதற்கும் சோப்புப் போட்டுக் கழுவ வேண்டும்.

வாரத்துக்கு ஒருமுறையாவது மிதமான சுடுநீரில் பாதங்களை (சுமார் பத்து நிமிடங்கள்) வைத்திருந்தால் பாதங்கள் மென்மையாகும். அதனால் குதிகால்களில் வெடிப்புகள் வருவது தடைப்படும்.






சாதாரணமாகச் செருப்புகள் அணிவதை விட ஷூக்களை அணிவது பாதங்களுக்குப் பாதுகாப்பானது. இதனால் குதிகால்களில் வெடிப்புகள் வருவது தடுக்கப்படும்.

ஷூக்களை ஆண்கள் தானே அணிய முடியும் என்பதில்லை. பெண்களுக்கும் ஷூ மாதிரியான (குதிகால்களை மூடிய) செருப்புகள் வந்து விட்டன. அதை வாங்கி அணிவதே பாதுகாப்பானது.

ஷூக்களை அணியும் ஆண்கள், கால் உறைகளை(ஸாக்ஸ்)ப் பற்றிக் கவலைப்படுவதேயில்லை. அது நல்லதேயல்ல. இரண்டு நாட்களுக்கு ஒருமுறையாவது காலுறைகளைத்

துவைத்து அணிய வேண்டும். இல்லையேல் அதுவே நோய்க்கு வித்திட்டு விடும்.

இதே போல்தான் கைகளும். அழுக்கடைந்த நகங்களோடு பிறரிடம் கைகுலுக்கினால் எப்படியிருக்கும். அடுத்தவர் அருவருப்படைய மாட்டாரா? நட்புக்கான கைகுலுக்கலே உங்களை அவரிடமிருந்து விலகிச் செல்ல வைத்து விடும் என்பதால் கைகளையும் விரல்களையும், நகங்களையும்






பளிச்சென்று சுத்தமாக வைத்துக் கொள்வது அவசியம்.

## பாத்திரம் துலக்கும் போது...

பெண்கள், பாத்திரம் துலக்குவது போன்ற வீட்டு வேலைகளைச் செய்யும்போது, நகங்கள் தேய்ந்து அசிங்கமாகக் காட்சி தரும். பாத்திரம் துலக்கப் பயன்படுத்தும் பவுடர்களால் உள்ளங்கைகள் மிருதுத் தன்மையை இழந்து விடும் என்பதால், கையுறைகளை அணிந்து கொண்டு பாத்திரம் துலக்குவதே நல்லது.

## செண்ட் மணம் வீசலாமா?

தினசரி நான்கு பேரோடு பழகுகிற மாதிரியான வேலையிலுள்ளவர்கள் தங்களிடமிருந்து வியர்வையின் துர்நாற்றம் வீசாமல் பார்த்துக் கொள்வது மிகவும் அவசியம்.

இதற்கு பவுடர் மட்டும் போதாது. ஓரிரு மணி நேரங்கள் மட்டுமே பவுடர் பாதுகாப்புத் தரும். எனவே, அளவாக செண்ட் உபயோகப்படுத்தலாம். என்றாலும் நல்ல தரமான செண்ட்களை வாங்கி உபயோகிப்பதுதான் நல்லது. இல்லையெனில், நீங்கள் போட்டிருக்கும் செண்ட் மணத்தால்



எதிராளிகள் முகம் சுளிக்க ஆரம்பித்து விடுவார்கள்! அது ரொம்பவும் காஸ்ட்லி என்று நினைப்பவர்கள் டியோடரண்ட் பயன்படுத்தலாம்.

## கவனம் தேவை!



### லிப்ஸ்டிக்

பெண்கள் லிப்ஸ்டிக் போடும் போது அதன் கலரில் கவனம் காட்ட வேண்டும். உங்கள் உடலின் கலருக்குப் பொருத்தமேயில்லாத லிப்ஸ்டிக்கை உபயோகப்படுத்தினால் பார்க்க விகாரமாய் இருக்குமே தவிர, அழகாய் இருக்காது.

இதுபோலத்தான் நெயில் பாலிஷும். கட்டியிருக்கும் புடைவைக் கலருக்கு மேட்சாகவெல்லாம் நெயில் பாலிஷ் போட்டுக் கொள்வது உங்களைத்

திருப்திப்படுத்தலாமே தவிர, வெளியில், அலுவலகத்தில் உள்ள மற்றவர்களை முகம் சுளிக்க வைக்கும். உங்கள் விரல்கள் ஏதோ மாயாஜாலப் படங்களில் வருவது போன்ற விரல்களைப் போல்தான் அவர்களுக்குத் தெரியுமே தவிர, இயல்பாக இருக்காது.

## மேக்கப்

விருந்துகள், விழாக்கள் என்று போகும்போது அனைவருமே தங்களை கூடுதலாக அழகுபடுத்திக் கொண்டு செல்வதுதான் வழக்கம். அதுதான் முழுமேக்கப்! இப்படி மேக்கப் போடும்போது ரொம்பவும்




கவனம் அவசியம். அதாவது உங்கள் மேனியின் நிறத்தையொட்டியே உங்கள் மேக்கப் இருப்பதுதான் நல்லது. மாநிறமாக இருப்பவர்கள், முகத்தைப் பளிச்சென்று தெரிய வைக்க வேண்டும் என்பதற்காக




ரோஸ் பவுடரை அதிகம் போட்டுக் கொண்டால், உங்கள் உடலின் நிறத்துக்கும் முகத்தின் நிறத்துக்கும் சம்பந்தமே இல்லாமல் போய்விடும். பார்ப்பவர்களும் உங்களை கேலியோடுதான் பார்ப்பார்கள். எனவே இதில் கவனம் செலுத்துவது மிக மிக அவசியம்.

**நமது சருமம் எப்படிப்பட்ட தன்மையுடையது? அதை எப்படிக் கண்டுபிடிப்பது? யார் வழி காட்டுவார்கள்?**

இந்தக் கேள்விகளுக்கு விடையளிக்கத் தயாராய்

இருக்கிறார்கள் பாண்ட்ஸ் (இந்தியா) நிறுவனத்தினர். அழகுக் குறிப்புகளை வாடிக்கையாளர்களுக்கு வழங்குவதற்கு 'Pond's Institute' இருபத்து நான்கு மணி நேரமும் தயாராய் இருக்கிறது. நான்கு விதமான வழிகளில் உங்களுக்கு வழிகாட்டத் தயாராய் இருக்கிறது.

## முதல்வழி:

சென்னை அண்ணா நகரிலுள்ள 'Health & Glow' விற்பனை நிலையத்துக்குச் சென்றால், அங்கே touch screen kiosk எனப்படும் கம்ப்யூட்டர் வைக்கப்பட்டுள்ளது.






அதிலுள்ள பட்டன்களை அழுத்தினாலே போதும். சருமப் பாதுகாப்பு பற்றிய அத்தனை விவரங்களும் உங்களுக்குக் கிடைத்து விடும்.

இது எல்லோருக்கும் சாத்தியமா என்று கேட்கிறீர்களா? இந்த விஷயம் அவர்களுக்கு மட்டும் தெரியாதா என்ன? அதற்குத்தான் அடுத்த வழி!

## இரண்டாவது வழி:

சென்னையிலுள்ளவர்கள் 8235354, 8235335. (பெங்களூர்: 3331425, 3338186; கல்கத்தா: 2870742, 2870743; ஹைதராபாத்:

7606178, மும்பை: 6511411, 6511578,. புதுதில்லி: 6929912, 6929913) எண்களில் தொலைபேசினால் அழகுப் பராமரிப்பு பற்றிய அத்தனை கேள்விகளுக்கும் முகஞ்சுளிக்காமல் பதிலளிக்கத் தயாராய் இருக்கிறார்கள்.

எல்லோராலும் தொலை பேச முடியுமா? மாநகரங்களில் உள்ளவர்களுக்குத் தொலைபேசுவது பெரிய விஷயமில்லையென்றாலும் மற்றவர்களுக்குப் பிரச்னைதானே என்பவர்களுக்கும் அவர்கள் இன்னொரு வழி வைத்திருக்கிறார்கள்.



## மூன்றாவது வழி:




உங்களுடைய எல்லா சந்தேகங்களையும் பாண்ட்ஸ் நிறுவனத்துக்கு (P.O.Box:6821, Chennai - 600 105)க் கடிதம் மூலம் எழுதிப் பதில் பெறலாம்.

எங்கள் வீட்டில் இண்டர்நெட் வசதியே இருக்கும்போது, மற்ற மூன்று வழிகள் எதற்கு என்பவர்களுக்கு நான்காவது வழியாக இண்டர்நெட் மூலமும் பதில்களைப் பெறலாம். முகவரி: www.pondsinstitute-india.com

அப்புறமென்ன! அனைவருமே அழகாய் ஜமாய்க்க வேண்டியதுதானே!

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN/MS(S)M4392/98 * Licensed to post without prepayment under PMG's Licence No. TN/MS/(S) 161 * Registered as a Newspaper in Srilanka * Supplement to Kalki 9.8.98

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / MS (S) M4302/98 * Licensed to post without prepayment under PMG's Licence No. TN / MS/ (S) 161 * Registered as a Newspaper in Srilanka